" ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம் "

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला

(३१, ३२, ३३)





# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

(31, 32, 33)

8/-

21-4

அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி வெளியீடு

|| श्रीः ||



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्री जगद्गुरुग्रन्थमाला

(३१, ३२, ३३)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

(31, 32, 33)



ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.

1981

॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छङ्करदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छङ्करसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

21-4

# முன்னுரை

ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதர் இயற்றிய தசசுலோகீ, சதசுலோகீ ஹஸ்தாமலகீய பாஷ்யம் இம்மூன்றும் இந்த வெளியீட்டில் அடங்கியுள்ளன.

1. தசசுலோகீ: (10 சுலோகங்கள்) காலடியில் தன் தாயாரிடம் அனுமதி பெற்று ஸந்யாஸாசிரம ஸ்வீகாரம் செய்து கொண்டு ஸ்ரீ ஆதிசங்கரர், தனக்கு உபதேசம் கொடுக்கக் கூடிய குருவை நாடி நர்மதாநதி தீரத்துக்கு வந்தார். அங்கு ஒரு குகையில் ஸ்ரீ கோவிந்தபகவத்பாதர் இருப்பதாகக் கேள்விப்பட்டு அந்த குகையை மூன்று தடவை வலம் வந்து நமஸ்கரித்துவிட்டு குருவை ஸ்தோத்திரம் செய்தார். இதனால் ஸ்ரீ கோவிந்தபகவத்பாதரின் ஸமாதி கலைந்தது. அவர் குகைக்குள் இருந்தபடியே வெளியில் துதித்துக்கொண்டிருக்கும் சங்கரரிடம் "நீ யார்?" என்று கேட்டார். ஸாமான்ய மனிதனாக இருந்தால், "நான் நாராயணன், கிருஷ்ணன்" என்று தன் பெயர் ஊர் இவைகளைச் சொல்வான். உலகைத் துறந்த ஸ்ரீ சங்கரர் அப்படிச் சொல்லாமல் "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்ற மஹாவாக்யத்தின் தாத்பர்யத்தை உள்ளடக்கி "நான் எல்லாவற்றையும் ஒதுக்கி எஞ்சி நிற்கும் பரமாத்மாவேதான்" என்று பத்து சுலோகங்களில் பதில் சொன்னார். இதுதான் "தசசுலோகீ" என்பது. அத்வைத சாஸ்திர ஸாரம் முழுவதும் இந்த பத்து சுலோகங்களில் குறிக்கப்பட்டுள்ளது. இதர மதங்களின் வாதங்களை ஆங்காங்கு எடுத்துக்கொண்டு அவைகளை நிராகரித்து அத்வைத ஸித்தாந்தம் செய்திருக்கிறார்கள்.

ஐந்து வயது பாலகனாக பிக்ஷைக்குச் சென்ற இடத்தில் ஒரு தரித்திர பிராம்மண ஸ்திரீயை அனுக்ரஹிப்பதற்கு இயற்றிய "கனகதாரா ஸ்தோத்ரம்" (18 சுலோகங்கள்) தான் இவருடைய முதல் கிரந்தம். "தசசுலோகீ" என்பது இவருடைய இரண்டாவது கிரந்தம். இந்த வேதாந்த கிரந்தத்துக்கு கி. பி. 16-வது நூற்றாண்டில் பீகார் மாகாணத்தில் தோன்றிய ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதீ என்ற மஹாவித்வான் "ஸித்தாந்த பிந்து" என்ற வியாக்யானத்தை உலக மக்களுக்கு அனுக்ரஹித்துள்ளார். இந்த வியாக்யானத்தைப் படித்துவிட்டால்

அத்வைத சாஸ்திரம் முழுவதுமே தெளிவாக விளங்கும். இது போன்ற பல வியாக்யானங்கள் பிறகு வெளிவந்துள்ளன. அவைகளை எல்லாம் அனுசரித்து நமக்கு அறிவூட்டுவதற்காக ஸ்ரீ ஞானனந்தபாரதீ ஸ்வாமிகள் தன் சரீர சிரமத்தையும் பொருட்படுத்தாமல் பதவுரை, பொழிப்புரை எழுதி அனுக்ரஹித்திருப்பதை அச்சிட்டிருக்கிறோம். ஸ்வர்க்கீய அம்மஹானுக்கு எமது தாழ்மையான அஞ்சலியை ஸமர்ப்பிக்கிறேன்.

2. சதசுலோகீ : ( 100 சுலோகங்கள் ) இது நூறு சுலோகங்கள் கொண்டது. காசியில் ஸ்ரீபகவத்பாதர் தன் 9-வது வயது முதல் 12 வயதுக்குள் ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களை இயற்றினர். அந்த பாஷ்யங்களில் பல இடங்களில் சொல்லப்பட்ட விஷயங்களை மக்கள் எளிதில் புரிந்துகொள்வதற்காக இந்த "சதசுலோகீ"யை இயற்றினர். ஒவ்வொரு சுலோகமும் ஒரு அத்தியாயம்போல் விஷயங்கள் நிறைந்துள்ளது. பாஷ்யத்தின் விஷயத்தைத்தவிற வேத மந்திரங்களையும் ஆதாரமாகக் கொண்டு அதன் தாத்பரியத்தை விளக்கும்படி சுலோகங்களை அருளி இருக்கிருர்கள். வேதாந்தம் வாசித்தவர்களுக்கு இந்த கிரந்தம் ஒரு மறு பாடமாகும். புதிதாக வேதாந்தம் படிப்பவர்களுக்கு இது ஆரம்ப கிரந்தமாகவும் அமையும். இந்த "சதசுலோகீ" கிரந்தத்துக்கு "ஆனந்தகிரி" ஸ்வாமிகளின் வியாக்கியானம் விசேஷமானது. அதில் எந்தெந்த இடத்திலிருந்து விஷயங்களை ஆசார்யாள் ஆதாரமாக எடுத்துக் காட்டியிருக்கிருர் என்பது விளக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட விசேஷ வியாக்கியானங்களைப் படித்து அவைகளை மனதில்கொண்டு அவைகளைப் படிக்க முடியாத சாமான்ய மக்களின் உபயோகத்துக்காக ஸ்ரீ ஞானனந்த பாரதீ ஸ்வாமிகள் தெளிவான தமிழில் பதவுரை, பொழிப்புரை முதலியவைகளை எழுதித்தந்து நமக்கு அனுக்கிரஹம் செய்திருக்கிருர்கள். இது மகத்தான வித்யாதானமாகும். இதைப் படித்தால் "ஆனந்தகிரி" வியாக்யானத்தை படித்த பிரயோஜனம் சுலபமாகக் கிடைக்கும். ஸ்ரீ ஞானனந்த பாரதீ ஸ்வாமிகள் ஜகத்குரு க்ரந்தமாலாவின் பல பாகங்களுக்கு தமிழாக்கம் செய்து அனுக்கிரஹம் செய்திருக்கிருர்கள். அவைகளில் இது விசேஷமானது. அம்மகானுக்கு எமது மனமார்ந்த அஞ்சலிகளை ஸமர்ப்பிக்கிறேன்.

3. ஹஸ்தாமலகீயம் : (12 சுலோகங்கள்) ஸ்ரீ பகவத்பாதர் வாரணுசியில் தன் 9-வது வயது முதல் 16-வயது வரை தங்கி

எல்லா பாஷ்யங்களையும், பிரகரண கிரந்தங்களையும் ஸ்தோத்திரங்களையும் இயற்றினார். தன் சரீரத்தை கங்கையில் தியாகம் செய்ய உத்தேசித்தபோது வியாஸ பகவான் தோன்றி தான் எழுதிய ப்ரஹ்ம ஸூத்திரத்துக்கு சரியான பாஷ்யத்தை ஸ்ரீ சங்கரர் எழுதியுள்ளதைக் கேட்டு ஆனந்தித்து ஸ்ரீ சங்கரர் சரீரத்தை தியாகம் செய்யக்கூடாது என்று தடுத்து உலகத்தில் உள்ள துர்மதங்களைக் களைந்து அத்வைத ஸ்தாபனம் செய்யும்படி கட்டளை இட்டார். ஸ்ரீ சங்கரருக்கு ஜனன காலத்தில் பரமசிவனின் அனுகிரஹத்தால் கொடுக்கப்பட்டது. எட்டு வயது ஸந்யாஸம் பெற்றதால் அது மீண்டும் எட்டு வயதாக 16 ஆயிற்று. இப்போது ஸ்ரீ வியாஸ பகவானின் ஆசியினால் காசி விசுவேசுவரர் அனுகிரகம் செய்தது மீண்டும் 16 வயது. இந்த ஆசியைப் பெற்று ஸ்ரீ பகவத்பாதர் தன் சிஷ்யர்களுடன் பல இடங்கள் சென்று அத்வைதத்துக்கு விரோதமாக துர்மதங்களைப் பிரசாரம் செய்துவந்தவர்களை வாதத்தில் வென்று திக்விஜயம் செய்து வந்தார். பகவத்பாதருக்கு காசியில் முதல் சீடராக அமைந்தவர் ஸ்ரீ ஸநந்தனர் என்பவர். இவர் திருச்சி ஜில்லா ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்தில் உள்ள ஊரைச் சேர்ந்தவர். இவரே பின்பு 'பத்மபாதர்" என்று அழைக்கப்பட்டவர். இரண்டாவது சீடராக அமைந்தவர், மாஹிஷ்மதி நகரில் இருந்த பூர்வாசிரமத்தில் மண்டனமிசிரர் என்று சொல்லப்பட்டு ஸந்யாஸ ஆசிரமம் பெற்றபின் ஸ்ரீஸுரேசுவராசாரியார் என்ற யோக பட்டம் பெற்றவர். ஆசார்யாளுக்கு மூன்றாவது சிஷ்யராக அமைந்தவர் ஸ்ரீ ஹஸ்தாமலகர். ஸ்ரீ பகவத்பாதர் விஜய யாத்திரை செய்துகொண்டு தென்னிந்தியாவின் மேற்கு சமுத்திரக் கரையிலுள்ள கோகர்ண க்ஷேத்திரத்தில் உள்ள மகேசுவரரை வணங்கிவிட்டு தன் சிஷ்யர்களுடன் அருகாமையில் உள்ள ஸ்ரீ பலிபுரம் என்ற ஊருக்குச் சென்றார். அது பெரிய பிராமண அக்ரஹாரம்.

அங்கு பிரபாகரர் என்ற பிராம்மண சிரேஷ்டர் இருந்தார். அவருக்கு 13 வயதுள்ள ஒரு புத்திரன் இருந்தான். பிறந்தது முதல் இந்தக் குமாரன் ஒரு வார்த்தைகூட பேசுவதில்லை. உலக வஸ்துக்களில் இவனுக்கு பற்று இல்லை. சிறந்த அழகு வாய்ந்தவன். தங்கள் ஊருக்கு ஒரு மகான் வந்திருப்பதைக் கேட்டு பிரபாகரர் பேச்சு வராத தன் குழந்தையையும் அழைத்துக் கொண்டுவந்து இருவரும் ஸ்ரீ சங்கரரை வணங்கினார்கள். சிறுவன்

நமஸ்காரம் செய்தவன் எழுந்திருக்கவே இல்லை. ஸ்ரீ பகவத் பாதர் கையைப் பிடித்து குழந்தையை தூக்கினார். (இது ஹஸ்த தீக்ஷையாகிவிட்டது.) பிரபாகரர் ஸ்ரீ பகவத்பாதரைப் பார்த்து 13 வயதாகியும் இக்குழந்தை பேசுவதில்லை. இவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. உபநயனம் செய்து வைத்தேன். ஆனால் வேதத்தைப் படிப்பதில்லை. மற்ற பையன்களுடன் விளையாடுவது இல்லை. பையன்கள் இவனை அடித்தாலும் இவன் கோபித்துக் கொள்வதில்லை. சில நாள் சாப்பிடுவான். சில நாள் சாப்பிட மாட்டான். நாம் சொன்னதைச் செய்யமாட்டான் நானும் அவனைக் கோபித்துக்கொள்வதில்லை. ஏதோ பூர்வ ஜன்ம கர்மாவால் வளர்ந்துகொண்டு வருகிறான் என்றார். (இது உலகப்பற்றில்லாத ஞானியின் லக்ஷணம்) அச்சிறுவனைப் பார்த்து ஸ்ரீ சங்கரர் "நீ யார்? ஏன் இப்படி ஜடம்போல் இருக்கிறாய்" என்று கேட்டார். அதற்கு அந்தச் சிறுவன் 12 சுலோகங்களில் பதில் சொன்னான். இவைதான் "ஹஸ்தாமலகீயம்" என்பது முதல் சுலோகத்திலேயே "நான் என்பது ஜடப்பொருள் அல்ல-ஜடத்தை (உலகத்தை) ஊக்குவிப்பது 'நான் ப்ரஹ்மம்" தான் என்று சொல்கிறார். இதே கருத்தை 12 சுலோகங்களில் விளக்குகிறார். அத்வைத சாஸ்திரத்தின் ஸாராம்சத்தை உள்ளங்கனி நெல்லிக்கனிபோல் விளக்கியதால் இச்சிறுவனுக்கு ஸந்நியாஸம் கொடுத்து "ஹஸ்தாமலகர்" என்ற யோக பட்டத்தையும் பகவத்பாதர் இவருக்கு அளித்தார். (ஹஸ்தம்=கை ஆமலகம்=நெல்லிக்கனி) இவருடைய சுலோகங்கள் என்றதால் ஹஸ்தாமலகீயம் என்று கிரந்தத்துக்குப் பெயர் வந்தது இந்த 12 சுலோகங்களின் சாராம்சமும், ஆசார்யாள் அருளிய தசச்லோகியின் ஸாராம்சமும் ஒரே மாதிரியானது. பகவத்பாதர் தன் சிஷ்யனுடைய ஹஸ்தாமலகீயத்துக்கு பாஷ்யம் எழுதி அனுகிரகித்திருக்கிறார். இதுதான் ஹஸ்தாமலகீய பாஷ்யம் என்பது. பகவத்பாதர் பிரபாகரிடம் முன் ஜன்மாவில் இவன் எல்லா சாஸ்திரங்களையும் கற்ற சிறந்த ஆத்ம ஞானி. இல்லையேல் இப்படி இருக்கமாட்டான். இவனுக்கு உலகப்பற்று கிடையாது. தன் சரீரத்திலேயே இவனுக்கு ஆசை இல்லை. இவன் உங்களைப்போன்ற கிருஹஸ்தர்களுக்கு உதவாதவன். அதனால் நான் என்னுடன் அழைத்துச் செல்கிறேன் என்றார். இந்த 12 சுலோகங்களைத் தவிற வேறு எந்தக் கிரந்தத்தையும் இவர் இயற்றவில்லை. ஸ்ரீ சங்கரருடன் கூடவே இருந்து வந்தார். இவர்தான் துவாரகா பீடத்தில் அமர்ந்த முதல் பீடாதிபதி

ஆவார். ஹஸ்தாமலகீய பாஷ்யத்தைப் படித்தால் ஸ்ரீ பகவத் பாதரின் தசசுலோகீக்கு இது தான் வியாக்யானம் என்று மனதில் தோன்றும்.

இது கடினமான அத்வைத தத்துவத்தை திருஷ்டாந்தம் மூலம் நன்கு விளக்கிக் காட்டுகிற கிரந்தம். நன்றாக ஆசார்ய பாஷ்யம் படித்தவர்கள்தான் இதற்கு விளக்கம் கூறமுடியும். ஸ்ரீ K. S. வெங்கட்ராம சாஸ்திரிகள் வியாகரண சிரோமணியும் நன்கு வேதாந்தம் படித்தவருமாவார். பல வேதாந்த புஸ்தகங்களை எழுதியவர். ஸ்ரீ சங்கர க்ருபா உதவியாசிரியராக 20 வருஷங்கள் பணியாற்றியவர். தன் வேதாந்த ஞானத்தை உபயோகப்படுத்தி ஹஸ்தாமலகீய பாஷ்யத்துக்கு விசேஷ உரையையும், சுலோகங்களுக்கு பதவுரை, விரிவுரை இவைகளையும் எழுதிக்கொடுத்து நமக்கு உதவி இருக்கிறார். அவருக்கு எமது நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருக்களின் அனுக்ரஹம் இல்லாவிடில் இம்மலர் வெளிவந்திருக்க முடியாது. ஆகவே இம்மலரை அம் மஹான்களின் திவ்ய பாதார விந்தங்களில் வணக்கத்துடன் ஸமர்ப்பிக்கிறேன்.

பல காரணங்களால் பல வருஷங்கள் தாமதமாகி இத் தொடர் பிரசுரம் வெளிவந்துள்ளது. தாமதத்தை மன்னித்து அன்பர்கள் இந்த வெளியீட்டைப் படித்து ஸ்ரீ பகவத்பாதரின் அனுக்ரஹத்துக்கு பாத்திரமாகவேணுமாய் கேட்டுக்கொள் கிறேன்.

K. V. சுப்பரத்னம்,
பொதுக்காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.





| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | தசசுலோகீ | ... | 1– 14 |
| 2. | சதசுலோகீ | ... | 1–179 |
| 3. | ஸ்ரீ ஹஸ்தாமலகீய பாஷ்யம் | ... | 1– 50 |

# दशश्लोकी

# தசசுலோகீ

[ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரியாரவர்கள் காலடியில் ஆதுர ஸந்யாஸக்கிரமப்படி ஸந்யாஸம் செய்து குருமுகமாய் பிரணவ மஹா வாக்கியங்களை கிரஹிக்கவேண்டும் என்ற ஸம்பிரதாயத்தை அனுஸரித்து அங்கிருந்து புறப்பட்டு நர்மதா தீரம் போய் அங்கு ஸமாதி நிஷ்டையிலிருந்த ஸ்ரீமத் கோவிந்த பகவத்பாதாசாரியார் அவர்களை துதித்ததின்பேரில் அவர் பஹிர்முகமாகி ஸ்ரீசங்கரரை பார்த்து "நீர் யார்?" என்று கேட்டதாகவும், அதற்கு இவர் உடனே ஆத்ம தத்துவத்தை விளக்கக்கூடியதான இந்த பத்து சுலோகங்களால் பதில் சொன்னதாகவும் அதன் பேரில் அந்த யோகி இவருக்கு உபதேசங்கள் செய்து அனுகிரஹித்தார் என்றும் ஸ்ரீமத் சங்கர விஜயம் கூறுகிறது. ஆத்மாவின் ஸ்வரூபம் இவ்விதமென்று குறிப்பிட்டு காட்டமுடியாத காரணத்தினலேயே வேதமும், "இது அல்ல, இது அல்ல" என்று நிஷேதமுறையிலேயே எடுத்துச் சொல்லியிருப்பதை அனுசரித்து இந்த சுலோகங்களும் அமைந்திருக்கின்றன. கடைசி சுலோகத்தில் ஆத்ம தத்துவத்தை எப்படித்தான் சொல்லமுடியும் என்றும் கண்டிருக்கிறார். ஆத்ம ஞானம்தான் எல்லா துன்பங்களையும் போக்குகிறது. 'அஹம்' (நான்) என்ற சொல்லின் பொருள்தான் ஆத்மா. எது ஆத்மா? எது அனாத்மா? என்று தெரியாததால் ஆத்மாவையும் அனாத்மாக்களையும் சேர்த்தே நான் என்று சொல்கிறோம். அதாவது பிராந்தியால் அனாத்மாக்களையும் ஆத்மா என்றே எண்ணுகிறோம். இச்சிறிய நூலின் அனாத்ம வஸ்துக்களைக் குறிப்பிட்டு இவைகள் நானல்ல என்று கூறுவதனால் ஆத்மானாத்ம விவேகம் ஏற்பட்டு சுத்தமான ஆத்மாவை அறியமுடிகிறது. ஜீவாத்மாவைப் பற்றி பிறவாதிகள் சொல்லும் பக்ஷங்களை கண்டித்து விட்டு சுத்த சைதன்யமே ஆத்மா என்ற உபநிஷத் சித்தாந்தத்தை உபதேசிக்கிறார். இச்சிறிய கிரந்தத்தின் காம்பீர்யத்தை விளக்கி "அத்வைத ஸித்தி" எழுதி இருக்கும் ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகள் 'ஸித்தாந்தபிந்து' என்றதோர் பிரஸித்தமான வியாக்யானத்தை எழுதி இருக்கிறார். அந்த வியாக்கியானத்தின் பேரிலேயே குறைந்தது ஐந்து வியாக்கியானங்கள் ஏற்பட்டிருக்கிறபடியால் அதன் மஹிமையும்

ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். ஸ்ரீமத் ஆச்சார்யாரவர்களின் பிரகரணங்களைத் தமிழ் நடையில் ஸாமான்ய ஜனங்கள்கூட அறிந்து கொள்ளகூடிய முறையில் பிரசுரிப்பதே ஸ்ரீ சங்கரஸேவா ஸமிதியின் கிரந்தமாலாவின் உத்தேசமாயிருப்பதால் அவ் வியாக்கியானங்களில் கடை விஷயங்களை இங்கே எடுத்துச் சொல்வது பிரஸித்தமாகாது. ஆகையால் "தசசுலோகீ" மூலத்தின் தாத்பரியத்தை மாத்திரம் இங்கு விளக்கப்படுகிறது]

न भूमिर्न तोयं न तेजो न वायुः
न खं नेन्द्रियं वा न तेषां समूहः ।
अनेकान्तिकत्वात् सुषुप्त्यैकसिद्धः
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ॥ १ ॥

"நான் பூமியல்ல, ஜலமல்ல, தேஜஸ் அல்ல வாயுவல்ல, ஆகாசமல்ல, இந்திரியமல்ல அவைகளின் கூட்டமுமல்ல, அவைகள் ஒரே நிலையில் இல்லாத தால் நல்ல தூக்கத்தில் மாத்திரம் தெரிகிற தனித்து ஒன்றாய் மிஞ்சினதாய் ஸர்வமங்களமாய் விளங்கும் தத்துவமே நான்."

"நான்" என்று சகல ஜனங்களும் வியவஹாரம் செய்வதினால் "நான்" என்ற பதார்த்தம் பிரஸித்தம் என்பதில் ஸந்தேகமில்லை. ஆனால் 'நான்' "பெறுமனை இருக்கிறேன்" "நான் இளைத்துவிட்டேன்" "நான் பார்க்கிறேன்" "நான் நடக்கிறேன்" "நான் நினைக்கிறேன்" என்றெல்லாம் சொல்வதால் அந்த "நான்" என்பது யார் என்ற விஷயத்தில் ஸந்தேகம் ஏற்படுகிறது "இந்த ஸ்தூல சரீரம் நானா" "இந்திரியங்கள் நானா" "மனஸ் நானா" "எல்லாம் சேர்ந்து நானா" என்று விசாரிக்கையில் பாமர ஜனங்களின் வியவஹாரத்தையொட்டி "சரீரம்தான் நான்" என்று சார்வாகன் சொல்லுகிறான். சரீரம் ஜடம். அதை சேஷ்டிக்கும்படி செய்வது இந்திரியம்தான். ஆகையால் அதுதான் "நான்" என்று இன்னொருவன் சொல்லுகிறான். இந்திரியங்களும் மனசும் இல்லாமல் போனால் சேஷ்டிக்காததினால் "மனஸ்தான் நான்" என்று சொல்லுகிறார்கள் சிலர். மனசும் ஜடம்தான் என்று

சொல்லி அதைவிட சூக்ஷ்மமான வேறு தத்துவங்கள் "நான்" என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள். சரீரம், ப்ருத்வீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் இவ்வைந்து பூதங்களால் செய்யப் பட்டிருப்பதுடன் தூங்கும்போது இந்த சரீரம் இருப்பதாகவே பிரக்ஞையில்லாமல் மனஸினாலேயே ஒரு உலகத்தை சிருஷ்டி செய்துகொண்டு ஸ்வப்னத்தில் ஸுகதுக்கானுபவங்கள் இருப்ப தாலும் அந்த நான் விழித்துக் கொண்டிருக்கும்போது இந்த ஜகத்தைப் பார்த்தேனோ அதே நான் ஸ்வப்ன உலகத்தையும் பார்த்தேன். அதே நான் ஸுஷுப்தி உலகத்தையும் அனுபவித் தேன் என்று சொல்லமுடிகிறபடியாலும், முக்காலங்களிலும் அதாவது சரீரம், மனஸு இவைகள் இருந்தாலும், இல்லாமல் போனாலும் நான் மாத்திரம் இருந்துகொண்டவனாய் மிஞ்சி இருக்கும் தத்துவமே "நான்" என்று ஸ்ரீமத் ஆச்சாரியாளின் தாத்பர்யம்.

ஸ்ரீ கோவிந்த பகவத்பாதருடைய கேள்விக்கு தான் யார் என்று ஜீவனுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தை எடுத்துச் சொல்லவே இந்த சுலோகங்கள் ஏற்பட்டபோதிலும் தன்னுடைய அவதார ரகஸ்யத்தை வெளியிட்டு "ஜகத்பூராவையும் உபஸம்ஹாரம் செய்த பிறகு ஒருவனாய் தனித்து மிஞ்சும் பரமேஸ்வரன் நான். இப்போது கைலாஸபதி, உமாபதி என்ற விசேஷங்களை எல்லாம் விட்டுவிட்டு ஸர்வ ஸங்க பரித்யாகம் செய்து ஏகாகியாய் வந்திருக்கும் "சிவன் நான்" என்று குறிப்பிடுவது போலும் த்வனிக்கிறது.

"நான் பஞ்சபூதங்கள் அல்ல, இந்திரியம் அல்ல. அவை களின் கூட்டம் அல்ல" என்பதை மாற்றி "பஞ்சபூதங்கள் நான் அல்ல இந்திரியங்கள் நான் அல்ல" 'அவைகளின் கூட்டம் நான் அல்ல' என்றும் அன்வயம் செய்துகொள்ளலாம். இந்த சுலோகத்தில் சார்வாகன், பௌத்தன், ஜைனன், நையாயிகன், மீமாம்ஸகன் ஸாங்கியர் முதலானவர்களின் மதம் மறுக்கப் படுகிறது.

(அ) "சரீரம் நான் அல்ல" என்றால், த்வைதத்தில் பிராம்மணனுக்கு இந்த வயதில் உபநயனம் க்ஷத்திரியனுக்கு இந்த வயதில் உபநயனம் என்றெல்லாம் சரீரத்தை ஒட்டியேதான் விதிக்கப்பட்டிருக்கும் பலவித ஸம்ஸ்காரங்கள் அகர்தாவான ஆத்மாவிற்கு ஸம்ஸ்காரங்களாக எப்படியாகும்? அப்பொழுது வேதம் அப்பிரமாணமாகிவிடும். அதிலிருந்து ப்ரஹ்மஸ்வரூபம்

எப்படி ஸித்திக்கும்? யமநியமாதிகளை விதிக்கும் சாஸ்திரத்துக்கு போக்கு என்ன? என்று கேட்டால் சரீரத்தில் நான் என்று எண்ணம் இருக்கிறவரையில்தான் ஸகலவித ஸம்ஸ்காரங்களும், சித்தத்தை நிலைநிறுத்தி தியானம் செய்வதும், சிரவணாதிகளை செய்து ஞானம் சம்பாதிப்பதும் அவசியமாகும். அதுவரை வேதோக்தமான ஸர்வஸாதனங்களும் அனுஷ்டிக்கப்பட வேண்டியதுதான். வேதம் பிரமாணம்தான். ஆனால் அவைகளினால் ஸாதிக்கப்பட வேண்டியதான ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்டால் இவைகள் தேவையில்லை என்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார்.

न वर्णाः न वर्णाश्रमाचारधर्माः
न मे धारणाध्यानयोगादयोऽपि ।
अनात्माश्रयाहं मम ध्यासहानात्
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ॥ २ ॥

"என்னிடம் வர்ணங்கள் (ஜாதிகள்) கிடையாது. வர்ணங்களையொட்டிய ஆசிரமங்களோ, ஆசாரங்களோ தர்மங்களோ கிடையாது. எனக்குத் தாரணையோ, தியானமோ, யோகமோ மற்றும் எந்தவித ஸாதனமோ, கிடையாது. ஆத்மாவல்லாததை (சரீராதிகளை) ஒட்டிய "**நான், எனது**" என்ற அத்யாஸத்தை விலக்கிவிட்டபடியால் ஒருவனாய் மிஞ்சினவனாய் தனித்திருக்கும் மங்கள ரூபியான தத்துவமே "நான்"

இங்கு பிராஹ்மண்யம் முதலானவை வர்ணம். பிரஹ்மசர்யம் முதலானவை ஆசிரமம். ஸ்நானம், சௌசம், முதலானவை ஆசாரம். குருஸேவை முதலியவை தர்மம் மனதை பிரஹ்மத்தில் நிறுத்துவது தாரணை. பரமாத்மசிந்தனம் தியானம். மனோவிருத்திகளையடக்குவது யோகம். சிரவணம், மனனம் முதலானவை.

சரீரத்தில் நான் என்கிற எண்ணமிருக்கும்வரையில் சரீரத்துக்கு வெளியிலுள்ள பதார்த்தங்களில் தனக்கு அனுகூலமானது தனக்கு பிரதிகூலமானது என்கிற எண்ணம் இருந்தேதீரும்.

அவைகளுக்கும் தனக்குமுள்ள ஸம்பந்தத்தையே மமதை என்பார்கள். இதை நன்கு விலக்கிவிட்டாலும், சரீரம் முதல் புத்தி வரையுள்ள தத்துவங்களில் என்னுடையது என்ற மமதை இருக்கும் அதுவும் விலகவேண்டும். ஆகையால் தன் ஆத்ம ஸ்வரூபத்தைத்தவிர வேறு எந்த பதார்த்தத்திலும் அஹந்தையையும் விலக்கிவிட்டால் அவைகள் ஸம்பந்தமான எவ்வித தர்மங்களும் ஆத்மாவில் ஒட்டாது. இவ்விதமான எந்த அநாத்ம பதார்த்தத்திலும், தனக்கு ஸம்பந்தமில்லை என்ற அறிவு ஏற்பட்டு விட்டவனுக்கு சரீராதிகளை சம்பந்தித்த வர்ணாசிரமாதிகளோ, யமநியமாதி ஸாதனங்களோ எவ்விதத்திலும் சம்பந்திக்கக் கூடியவை அல்ல. சுத்தமாய் அஸங்கமாய் ஆத்மதத்துவம் மாத்திரம் மிஞ்சும். (2)

(அ) வேதோக்தமான ஸாதனங்கள் அவசியம் இருக்க வேண்டாம். உலகத்தில் ஜீவித்திருக்கும் வரையில் லௌகீக விவஹாரங்கள் இருந்து தானே தீரும்? என்றால் ஜீவித்திருக்கும் போதே பிரதிதினமும் நன்கு தூங்கும்போது ஸகல லௌகீக வைதீக வியவஹாரங்களும் நின்றுபோய் ஆத்மா மாத்திரம் தனித்திருந்து ஆனந்தமாயிருக்கிறது என்பதை யாவரும் அனுபவித்திருப்பதால் தூக்கத்தில் தோன்றும் அக்ஞானமும் நிவ்ருத்தியாகி சுத்த சைதன்யமாக நிற்கும் ஆத்ம ஸாக்ஷாத்கார நிலையில் எவ்வித வ்யவஹாரமும் இருக்க நியாயமில்லை. என்பதை மூன்றாவது சுலோகத்தில் காட்டுகிறார்.

**न माता न पिता न देवाः न लोकाः**
**न वेदाः न यज्ञाः न तीर्थं ब्रुवन्ति ।**
**सुषुप्तौ निरस्तातिशून्यात्मकत्वात्**
**तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ३ ॥**

"தாயார் இல்லை. தகப்பனார் இல்லை; தேவர்கள் இல்லை, லோகங்கள் இல்லை, யக்ஞங்கள் இல்லை, தீர்த்தம் இல்லை, என்கிறார்கள். நல்ல தூக்க சமயத்தில் (அறியப்படும் பதார்த்தங்கள் இல்லையானாலும் அறிகிறவன் இருந்ததினால் நான் தூங்கினேன் என்று சொல்ல முடிகிறபடியால்) சூன்யமில்லை என்று தெரிகிற

த. 2

படியால் ஏகனுய் தனித்து மிஞ்சி நிற்கும் மங்கள ஸ்வரூபியான ஆத்ம தத்துவமே நான் ”

தாயார், தகப்பனூர் முதலியவை எல்லாம் தேஹாபிமானத்தை ஒட்டி ஏற்படுகிறது. இந்த அபிமானம் நீங்கிவிட்டால் ஒன்றும் இல்லை ஸுஷுப்தியில் தேஹாபிமானமில்லாததால் ஒன்றும் தோன்றுகிறதில்லை.

முந்திய சுலோகத்திலும் ஸுஷுப்தி காலத்தில் சரீராதிகளில் அபிமானமில்லாததினுல் நான் பிராம்மணன், நான் கிருஹஸ்தன் முதலான எண்ணங்களுக்கு இடமில்லை என்று எடுத்துக்காட்டி இருக்கிறபடியால் இம்மூன்று சுலோகங்களிலுமே ஸுஷுப்தி காலத்தில் அனுபவத்தை வைத்தே ஆத்மா ஸர்வ ஸர்வவித வ்யவஹாரத்திற்கும். அதீனன் என்று நிர்வசனம் செய்திருக்கிற முறையில் ஜீவ பிரும்ம ஐக்கிய பிரதி பாதகமான “தத்துவமஸி” முதலான மஹா வாக்கியங்களிலுள்ள ஜீவனுடைய வாஸ்தவமான ஸ்வருபத்தை சோதித்து தீர்மானப் படுத்திக் கொடுத்ததாக ஆகிறது. (3)

மூன்று சுலோகங்களால் “த்வம்” பதார்த்தத்தை சோதித்து விட்டு இனி “தத்” பதார்த்த சோதனத்தை ஆரம்பிக்கிறார். ஏகனுய் மிஞ்சுகின்றவனே ஆத்மா என்றால் ஜகத்தை சிருஷ்டி செய்து பரிபாலித்து உபஸம்ஹாரம் செய்யும் ஈசுவரனும் அவரால் ஆளப்படும் ஜகத்தும் இருக்கும் வரையில் எப்படி ஸாத்தியம் என்று கேட்டால், அந்த ஈசுவரனுடைய தத்துவமும் ஆத்ம தத்துவம் தான். ஜகத்தும் வேருயில்லை என்பதை மேல் சுலோகங்களால் தெரியப்படுத்துகிறார். ஆத்ம தத்துவத்திற்கு வேருக பிரதானம் என்ற அசேதனம் தான் ஜகத் காரணம் என்று ஸாங்க்யர்களும், ஈசுவரன் என்று வேறு சேதன தத்துவம்தான் காரணம் என்று சைவர்களும் அப்படியே ஜகத்தையும் ஜீவனையும் உண்டு பண்ணின வாஸுதேவன் என்று வைஷ்ணவர்களும், ஜகத்தை உண்டுபண்ணி ஜீவனைத் தன் கர்மாவினுல் போதுமே என்று மீமாம்ஸகர்களும், யுக்தியினுலேயே ஜீவனுக்கு வேருக ஸர்வஜ்ஞனுக ஸர்வசக்தனுக ஈசுவரன் உண்டென்று ஸாதித்து விடலாமென்று தார்க்கிகர்களும் வர்ணிக்கிறார்கள். ஆனுல் அவர்கள் சொல்லும் ஈசுவரன் ஜீவனைத் தவிற வேருக இருந்தானேயானுல் அவருக்கு ஸர்வ வ்யாபகத்வம் என்ற முக்கிய அம்சம் சித்திக்காது என்பதை மறந்து

விடுகிருர்கள். ஆகையால் ஜீவனுடைய தத்துவமும் ஈசுவரனுடைய தத்வமும் ஒன்றேயாகும். உபாதிவசத்தால் அந்த ஒரு தத்வமே ஜீவனுகவும் ஈசுவரனுகவும் தோன்றுகிறது. என்று உபநிஷத்துக்களில் கண்ட ஸித்தாந்தத்தைத்தான் ஒப்புக்கொள்ளவேண்டும் என்று ஸ்ரீமத் ஆசார்யாள் நான்காவது சுலோகத்தில் காட்டுகிருர்.

न सांख्यं न शैवं न तत्पाञ्चरात्रं
न जैनं न मीमांसकादेः मतं वा ।
विशिष्टानुभूत्या विशुद्धात्मकत्वात्
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ४ ॥

அது (ஜகத்காரணவஸ்து) ஸாங்கியமல்ல. சைவமல்ல, பாஞ்சராத்திரமல்ல, ஜைனமல்ல, மீமாம்ஸகர் முதலானவர்களின் அபிப்ராயப்படியுமல்ல. எவ்வித வேற்றுமையுமற்று தனித்து அனுபவிக்கப்படும். சுத்தமான சைதன்ய ஸ்வரூபமானதினுல் தனித்து ஏகமாய் மிஞ்சும் மங்கள ரூபியான. தத்வமே “நான்” (4)

ப்ரஹ்மத்தை அணுவாகவும் அணுவான ஜீவனேடு ஒன்ருகவும் சொல்லியிருந்தாலும் பல சுருதிகள் விபுவாகக் கூறுவதால் உபாதியினுல் சிறிய தன்மை ஸ்வரூபம் ஸர்வ வ்யாபகம் என்று ஸர்வ வ்யாபகமான ஆத்ம தத்வத்தை ஆகாசத்துக்கு ஸமானமாகச் சொல்ல அதில் வேற்றுமைக்கு இடமில்லையென்பதை அடுத்த சுலோகத்தில் விவரிக்கிருர்.

न चोर्ध्वं न चाधो न चान्तः न बाह्यं
न मध्यं न तिर्यक् न पूर्वा न परा दिक् ।
वियद्व्यापकत्वात् अखण्डैकरूपः
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ५ ॥

மேலும் கிடையாது, கீழும் கிடையாது, உள்ளும் கிடையாது, வெளியும் கிடையாது மத்தியும் கிடையாது குறுக்கேயும் கிடையாது, கிழக்கோ வேறு திக்கோ

கிடையாது. ஆகாசம்போல் வ்யாபகமாயிருத்தலால் துண்டிக்கமுடியாமல் ஒன்ருக இருக்கும் தன்மையுடைய தனித்து ஒன்ருக மிஞ்சும் மங்கள ரூபியான தத்வமே "நான்"

நமக்கு ஆகாசத்துக்கு மேல் வியாபகமான பதார்த்தம் தெரியாததினுல் அதை திருஷ்டாந்தமாகச் சொல்ல ஏற்பட்டது. வாஸ்தவத்தில் ஆகாசமும் பிரஹ்மத்தில் தோன்றும் அம்சமே யானதினுல் அதை பரிபூர்ணமான திருஷ்டாந்தமாக எடுத்துக் கொள்ளக்கூடாது. ஆகாசத்தைக் காட்டிலும் வ்யாபகமென்று சொல்லலாம். (5)

(அ) ஜகத் பூராவையும் ஆத்ம தத்வம் வ்யாபிக்கிற தென்ருல் ஜகத்திலுள்ள வைகித்திரியங்கள் எல்லாம். அதில் ஒட்டாதாவென்று ஸம்சயம் ஏற்படக்கூடியதால் அதை நிவர்த்தி செய்வதற்காக அந்த தத்வம் எவ்வித ரூபமும் அந்த ஸ்வயஞ்ஜோதிசின் ஸ்வரூபம் என்பது ஆருவது சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

न शुक्लं न कृष्णं न रक्तं न पीतं
न कुब्जं न पीनं न ह्रस्वं न दीर्घम् ।
अरूपं तथा ज्योतिराकारकत्वात्
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ६ ॥

"வெளுப்பு அல்ல, கருப்பு அல்ல, சிவப்பு அல்ல, மஞ்சள் அல்ல, சிறியது அல்ல. பெரியது அல்ல, குட்டையல்ல, நீளமல்ல, அப்படியே எவ்வித ரூபமும் அற்றது. ஜ்யோதிஸ் ஸ்வரூபமாய் இருத்தலால் தனித்து ஏகமாய் மங்கள ரூபியான தத்வமே "நான்"

ஜ்யோதிஸ் ஸ்வரூபம் என்ருல் நமக்கு சாதாரணமாய் ஸூர்யப்ரகாசம் போல் பளிச்சென்று இருக்கும் என்ற எண்ணமே ஏற்படுகிறது. வாஸ்தவத்தில் ஜ்யோதிஸ் என்பது மற்ற பதார்த்தங்களை நமக்கு தெரிவிக்கக்கூடிய யோக்கியதையுடைய வஸ்து. என்று மாத்திரம் தாத்பரியம் - ஸூர்ய சந்திராதிகளின் பிரகாசமில்லாத இடத்திலும் நமக்கு அறிவு ஏற்படுகிறது. தூங்கும்போது ஸ்வப்னத்தில் எத்தனையோ விஷயங்களைப்

பார்க்கிறோம். அங்கேயாவது இந்திரியங்கள், மனஸ், சரீரம் எல்லாம் இருப்பதாக தோற்றமிருக்கிறது. நல்ல தூக்கத்தில் ஒரு பதார்த்தத்தையும் அறியாமலிருந்த போதிலும், அறிவற்று இருந்தேன். சுகமாய் தூங்கினேன் என்கிற அறிவு மாத்திரம் இருந்தே வருகிறது. அந்த அறிவுக்கு ஸாதனங்கள் எவையும் கிடையாது. ஆகையால் ஆத்மா ஸ்வயம் பிரகாசம் என்று சொல்லப்படுகிறது. பிரகாசத்துக்குத் தனியாக ரூபம் கிடையாது எந்தெந்த பதார்த்தத்தை விளங்கச் செய்கிறதோ அந்தந்த ரூபத்தை அந்தந்த சமயத்தில் எடுத்துக்கொள்ளும். அப்படியே தான் ஆத்ம பதார்த்தமும் ஜ்யோதிஸ் ஸ்வரூபமாயிருந்து ஜகத்தை வியாபிக்கும்போது ஜகத் ரூபமாகத் தோன்றுகிறது. ஸூர்யன் சாக்கடையில் பிரகாசித்தாலும், அதன் ஜலத்தில் பிரதிபலித்தாலும் எப்படி சாக்கடையின் குணதோஷங்களால் பாதிக்கப்படாமல் எப்போதும் போல் சுத்தமாகவே இருந்து வருகிறதோ அப்படியேதான் ஆத்மாவும் ஜகத்தாகத் தோன்றினாலும் ஜகத்தின் குண தோஷங்களினால் கொஞ்சமேனும் பாதிக்கப்படாமல் அஸங்கனாய், நிர்விகாரனாய், சுத்தனாய் இருக்கிறார். ஸ்வயம் பிரகாச பரமானந்த ரூபமான பிரஹ்மம் பிரபஞ்சத்திற்கு விவர்த்தோபாதானமாக அதிஷ்டானமாக இருப்பதால் காரணமாக இருந்த போதிலும் காரியமான பிரபஞ்சத்துடன் ஸம்பந்தமில்லாததால் தத்பின்னமான ஜீவனுக்கும் பிரபஞ்ச சம்பந்தமில்லை.

(அ) இவ்விதமாக ஈசுவரன் இதர மதவாதிகள் சொல்லுகிறபடி இல்லாமல் உபநிஷத்தில் சொல்லியபடியே அஸங்கராகவும் சுத்தராகவும் இருக்கிறார் என்று 4வது சுலோகத்திலும் அவர் ஸர்வ வியாபகர் என்று 5வது சுலோகத்திலும் அவர் ஜகத்திலுள்ள வேற்றுமைகளினால் வேற்றுமையடையாதவர் என்று 6வது சுலோகத்திலும் ஜகத்காரணமாகக் கருதும் ஈசுவரனுடைய ஸ்வரூபத்தை ஒருவாறு நிருபணம் செய்து விட்டு, மேலால் ஜீவனின் தத்வமான சைதன்யமும் ஈசுவரனின் தத்வமான சைதன்யமும் ஒன்றுதான் என்பதை மேல் மூன்று சுலோகங்களால் ஸ்ரீமத் ஆசார்யாள் உபதேசிக்கிறார்

இரண்டு சைதன்யமும் ஒன்று என்றால் உலகத்திலுள்ள வியவஸ்தை எல்லாமே ஆதாரமற்று விடுமே, சிஷ்யனாயிருந்து குருவை ஸேவித்து சாஸ்திரங்களைக்கற்று கர்மானுஷ்டானம் செய்து ஈசுவரனுடைய பிரசாதம் பெற்று சித்தசுத்தி ஏற்பட்டு

சிரவண மனனாதிகள் செய்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்து பரமபுருஷார்த்தமான மோக்ஷநிலையை அடையவேண்டும் என்று ஸகல சாஸ்திரங்களும் சொல்லும்போது இவை எல்லா வற்றையும் மறுதளித்ததாக ஆகிவிடாதா? என்று தோன்றலாம்.

அஞ்ஞான தசையில் இவை எல்லாம் உண்டு என்பதை மறுதளிக்கவே இல்லை. எவர் ஒருவருக்கு தன்னுடைய ஆத்மஸ்வரூபம் அஸங்கமாய இரண்டற்றதாய் சுத்தமாய் நித்யமாய் ஞானமாய் ஆனந்தமாயிருப்பது என்ற ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டிருக்கிறதோ அவருக்கு அதற்குமேல் அடையவேண்டியது ஒன்றுமில்லாததனால் அவருக்கு எவ்வித ஸாதனத்தின் அபேக்ஷையும் இருக்க நியாயமில்லை. அவருடைய நிலையிலிருந்து பார்க்கும்போது இவையாவும் கிடையாதுதான்.

न शास्ता न शास्त्रं न शिष्यो न शिक्षा
न च त्वं न चाहं न चायं प्रपञ्चः ।
स्वरूपावबोधो विकल्पासहिष्णुः
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ७ ॥

"கட்டளையிடுகிற குரு கிடையாது—கட்டளை கிடையாது. சிஷ்யன் கிடையாது சிக்ஷை கிடையாது கேட்கிற நீ என்பதும் கிடையாது சொல்லுகிற நான் என்பதும் கிடையாது தேஹேந்திரியம் முதலான இந்த உலகமும் உண்மையாக கிடையாது. பலவிதமாக எண்ணுவதற்கு இடம் கொடுக்காமல் ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தோடு கூடி ஏகனாய் தனித்து மிஞ்சிய மங்களரூபியான தத்வம் "நானே" (7)

(அ) இவ்விதமாக ஸகல த்வைத பிரபஞ்சத்தையும் நிஷேதம் செய்துவிட்டாலும் அனுபவிக்கிறவனாக இருக்கும் ஜீவன் ஒருவன் பரிச்சின்னனாய் இருந்தால் அத்வைதம் சித்திக் காதே என்றால், அந்த ஜீவன் பரிச்சின்னனாய்த் தோன்றுதற்கு காரணம் அவித்யை ஏற்பட்ட மூன்றுவித அவஸ்தைகள்தான். அந்த அவித்யை ஆத்ம ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தினால் விலகின வுடன் அந்த அவஸ்தைகளும் ஆத்மாவைச் சேர்ந்ததில்லை என்ற அனுபவம் ஏற்பட்டுவிடும்.

விழிப்பு திசையில் ஸ்தூல சரீரம் மனஸ் இந்திரியங்களோடு வெளிப்பிரபஞ்சத்தின் அறிவு ஏற்படுவதை ஜாக்ரத் என்றும் அப்பொழுது அனுபவிக்கும் ஜீவனே விசுவன் என்றும் சொல்வார்கள். ஸ்தூல சரீரத்தை மறந்து வாஸனுமயமான சரீரம் மனஸ் இந்திரியங்கள் ஜகத் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டி செய்துகொண்டு தான் மாத்திரம் தனித்திருந்து அறிவதை ஸ்வப்னம் என்றும் அப்பொழுது அனுபவிப்பவனை தைஜஸன் என்றும் சொல்வார்கள். வெளி உலகமோ உள் உலகமோ இரண்டுமற்ற சரீரம் மனஸ் இந்திரியங்கள் யாவும் காரணமாய் அவித்யையில் லயமடைந்து அந்த அவித்யையுடன் மாத்திரம் இருக்கும் அனுபவத்தை ஸுஷுப்தி என்றும் அப்பொழுது அனுபவிப்பவனை ப்ராஞன் என்றும் சொல்வார்கள். இம்மூன்று அவஸ்தைகளும் அவித்யையின் ஸ்தூல ஸூக்ஷ்மகாரணவஸ்தை யாகவும் இருப்பதால் இவ்வவஸ்தைகள் ஆத்மாவுக்கு சம்பந்தப் பட்டவைகள் அல்ல. ஆத்மா இவைகளுக்கு அதீதமான நிலையில் இருப்பதால் அந்நிலையை நான்காவது என்று வ்யவஹரிப்பார்கள்.

न जाग्रत् न मे स्वप्नको वा सुषुप्तिः
न विश्वो न वा तैजसः प्राज्ञको वा ।
अविद्यात्मकत्वात् त्रयाणां तुरीयः
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ८ ॥

'எனக்கு ஜாக்ரத் கிடையாது. ஸ்வப்னம் கிடையாது. ஸுஷுப்தியும் கிடையாது. நான் விசுவன் இல்லை. தைஜஸனுமில்லை. பிராஞனுமில்லை. மூன்றும் அவித்யா தன்மையுடையதால் நான்காவதாக ஏகமாய் தனித்து மிஞ்சி நிற்கும் மங்கள ரூபியான தத்வமே 'நான்' ... ...

(அ) வியாபகனாய் ஞானஸ்வரூபியாய் ஆனந்தமாய் இருக்கும் ஆத்மாவை மறைத்து துண்டுபடுத்தி அல்ப்பனாய் துக்கியாய் செய்தது அவித்யையேயாகும். அதன் காரியங் களான ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களில் கட்டுப்பட்டவன் போல் இருக்கும் வரை அவைகளுடைய எல்லா தர்மங்களும் ஆத்மாவில் இருப்பது போலவே தோன்றும். ஆகையினாலேயே ஜனன மரண சுகதுக்காதிகள் அடங்கிய ஸம்ஸாரமாகிய பந்தம் ஆத்மாவிடத்தில் இருந்து வருகிறது. அந்த பந்தத்திலிருந்து

தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டுமானால் அந்த தேகங்களின் கட்டிலிருந்து தன்னை அவைகள் விடுவித்துக் கொள்ளவேண்டும். தன்னை பாதிக்காமல் செய்யவேண்டுமானால் அவித்யையை விலக்கியாகவேண்டும். அவித்யையை விலக்க அதன் எதிரியான வித்யையை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். வித்யை என்பது புதிதாக எதையும் சிருஷ்டி செய்யாது. ஏற்கனவே இருக்கிற வாஸ்தவ நிலையை மறைத்துக் கொண்டிருக்கிற அஞ்ஞானத்தை போக்கடித்து ஆத்மாவை கலப்பன்னியில் சுத்தமாக எடுத்துக் காட்டும். இவ்விதம் ஆத்ம தத்துவம் பிரகாசிக்க ஆரம்பித்து விட்டால் அதைப் பரிசின்னப்படுத்திக்காட்டிய அம்சங்கள்எல்லாம் நிவிருத்தியாகி விடுகிறபடியால் ஆத்மா வ்யாபகமென்பது, அனுபவத்திற்கு வரும். தன்னைத் தவிற வேறு பதார்த்தம் கிடையாததால் தன்னை பாதிக்கக்கூடியதாக யாதும் இல்லாததால் நிரதிசயமான ஆனந்த ஸ்வரூபி என்பதும் அனுபவ சித்தமாகும். இவ்வித அனுபவமே பரமபுருஷார்த்தமென்றும் உபநிஷத்துக்கள் பிரதிபாதிக்கின்றன. அந்த நிலை அடைந்தவர் சுத்த பிரஹ்ம சைதன்யமேயாவார். அந்த நிலை வந்த பிற்பாடும் பிராரப்த கர்ம வேகத்தினால் சரீரம் இருக்கிறவரையில் ஜகத்தும் அதிலுள்ள பலவிதமான இந்திரியங்களும் கண்ணுக்கு தென்பட்டுக் கொண்டிருந்தாலும் இவை எல்லாம் தோற்றமே தவிர வாஸ்தவம் இல்லையென்று உணர்ச்சியும் கூடவே இருக்குமாதலால் அவைகளினால் எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டார்.

अपि व्यापकत्वात् हितत्वप्रयोगात्
स्वतः सिद्धभावात् अनन्याश्रयत्वात् ।
जगत् तुच्छमेतत् समस्तं तदन्यत्
तदेकोऽवशिष्टः शिवः केवलोऽहम् ॥ ९ ॥

“ஆத்மா வியாபகமாக இருப்பதினாலேயும் அதுவே மேலான ஹிதம் என்று சொல்லப்பட்டிருக்கிறபடியினாலேயும், அது எப்பொழுதும் தானாகவே நிலைத்திருக்கும் ஸ்வபாவத்தோடு கூடியதினாலேயும், அது வேறு எதையும் ஆசிரயிக்கும் தன்மையற்றதாயிருப்பதினாலேயும், அதற்கு வேறாகத் தோன்றும் ஸமஸ்தமான இந்த ஜகத்தும் வெறும் தோற்றமேயாகும். ஏகமாய்த் தனித்து மங்களரூபியை மிஞ்சியிருக்கும் தத்துவமே நான்” (9)

(அ) இவ்விதமாக ஆத்மாவை பரிச்சின்னப்படுத்தி காட்டும் அம்சங்களை விலக்கி சுத்தமான ஆத்மாவை கவனிக்கும்போது அதுவே வியாபகமான பிரஹ்ம சைதன்யம் என்று மூன்று சுலோகங்களால் தீர்மானம் செய்து கொடுத்தார் ஸ்ரீமத் ஆசார்யார். ஆனால் இவ்விதமாக சரீர விலக்ஷணன், அவஸ்தாத்ரய ஸாக்ஷி, ஸர்வ வ்யாபகன், என்றெல்லாம் எடுத்துச் சொல்லும்போது ஒவ்வொரு சுலோகத்திலும் அவர் ஏகர், தனித்தவர், மிஞ்சினவர், மங்களமானவர், என்று சொல்லப் படுகிறதே இந்த அம்சங்கள் எல்லாம் அவருக்கு விசேஷணங்கள் ஆகாதா? இரண்டாவது வேறு பதார்த்தங்கள் இருந்தால்தானே "ஒன்று" என்ற வ்யவஹாரம்? கலப்பதற்கு வேறு இருந்தால் தானே "தனித்து" என்று சொல்லமுடியும்? விலக்குவதற்கு வேறு இருந்தால்தானே "மிஞ்சினவர்" என்று சொல்லலாம்? அமங்களமான பதார்த்தங்கள் இருந்தால்தானே இதை "மங்களம்" என்றலாம்? ஆகையால் இந்த அடைமொழிகளும் வேறு பதார்த்தங்களின் இருப்பை அனுசரித்துக்கொண்டுதானே உபயோகப்படுத்தப்படுகின்றன? வேறு எவ்வித ஆசிரயமும் அற்ற ஆத்ம பதார்த்தத்தைத் துலக்கிக்காட்டும்போது மற்ற பதார்த்தங்களையும் அவலம்பித்தே சப்தங்களை பிரயோகிப்பது நியாயமா? என்றெல்லாம் சந்தேகம் ஏற்படலாம். அந்த சந்தேகம் மிகவும் நியாயமே. இரண்டற்ற ஆத்ம தத்துவத்தை வார்த்தைகளினால் எடுத்துச் சொல்லமுடியாது என்பது வாஸ்தவம். சப்தம் என்பதே உலக வ்யவஹாரத்திற்காக ஏற்பட்டது. அதைக்கொண்டு எவ்வித வ்யவஹாரத்திற்காக அதீதமாயிருக்கும் ஆத்மாவின் ஸ்வரூபத்தை வர்ணிப்பது ஸாத்தியமில்லை. ஆகையால் அதையும் வர்ணிக்கவேண்டும் என்று எண்ணம்கொண்டு வார்த்தைகளை உபயோகப்படுத்துவதனால் உலக வ்யவஹாரத்திலுள்ள வார்த்தைகளைத்தான் உபயோகப்படுத்த வேண்டுமே தவிர வேறு வழியில்லை. ஆகையினால்தான் மேலே கண்ட அடைமொழிகள் ஆத்மாவுக்குக் கொடுக்கப்பட்டன. இரண்டாவது வஸ்துவே கிடையாததினால் அது "ஒன்று" என்று சொல்லக்கூடாததுதான். அது தனித்து இருக்கிறது என்றாவது தனித்திருக்கவில்லை என்றாவது சொல்வதும் உசிதமில்லைதான். ஜகத்தைப் பூராவும் துக்கமென்றுவிட்டால் மிஞ்சுவதாக ஒன்றையும் காணவில்லையே என்றால், அதுவும் வாஸ்தவம்தான். ஆனால் காணவில்லை என்று சொல்கிறவன் ஒருவன் இருந்தேதீரவேண்டியிருப்பதால் சூன்யம் என்றும் சொல்வதற்கு இல்லை. எல்லா வேதாந்தங்களிலும் ஆத்மா இது அல்ல, இது அல்ல என்று விலக்கி விலக்கியே மறைமுறையாக ஆத்ம தத்வத்தை நமக்கு போதிக்கின்றனவே தவிர, நேராக

ஆத்மா இவ்விதம் என்று எடுத்துக்காட்டுவதில்லை. மனஸுக்கும் வாக்குக்கும் எட்டாத தத்துவத்தை வாக்கு எப்படி வர்ணிக்க முடியும். உபநிஷத்துக்களில் சொல்லிய மார்க்கத்தை அனுசரித்து சிரவண மனன நிதித்யாஸனுதி ஸாதனங்களை அப்யஸித்து கடைசியில் தானுகவே ஸாக்ஷாத்தாக அநுபவிக்க வேண்டிய விஷயம் ஆத்மஸ்வரூபம். அவ்வனுபவம் ஏற்படாதவன் அதைப்பற்றி சொல்லவே யோக்கியதையற்றவன். அவ்வனுபவமுள்ளவர் அதை வெளியிட வார்த்தைகள் இல்லாத படியால் வெளியிட முடியாது. ஸ்வானுபூதிக்கு விஷயமாகுமே தவிர இன்னொருவன் சொல்லித் தெரிந்துகொள்ளக்கூடிய விஷயமே இல்லை. அப்படியே ஒரு ஆத்ம ஞானிக்கு போதுமான வார்த்தைகள் அகப்பட்டுவிட்டாலும் அதைக்கேட்டு அர்த்தம் தெரிந்துகொள்ளக்கூடிய யோக்கியதை வேறுயாருக்கும் கிடையாது. ஆகையால் பிரஹ்மஸ்வரூபத்தைப்பற்றி வாக்கினுல் சொல்லிவிடலாமென்று நினைப்பதோ, இன்னொருவர் சொல்லி நாம் தெரிந்துகொண்டுவிடலாம் என்று நினைப்பதோ இரண்டும் தவறுதான். இவ்வித உண்மையான நிலையை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக்காட்டி இந்த ப்ரகரணத்தை முடிக்கிருர்.

न चैकं न तदन्यद् द्वितीयं कुतः स्यात्
न वा केवलत्वं न चाकेवलत्वम् ।
न शून्यं न चाशून्यमद्वैतकत्वात्
कथं सर्ववेदान्तसारं ब्रवीमि ॥ १० ॥

"அது ஒன்றும் அல்ல, அதற்கு இரண்டாவது எப்படி இருக்கமுடியும்? அந்தத் தனித்திருக்கும் தன்மை கிடையாது, தனித்திராத தன்மையும் கிடையாது. அது சூன்யமல்ல, சூன்யம் அல்லாததுமல்ல. இரண்டற்றதாயிருப்பதால், எல்லா உபநிஷத்துக்களினுலும் உறுதி செய்யப்பட்டிருக்கிற வஸ்துவை நான் எப்படிச் சொல்லமுடியும்?"

இவ்விதம் ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யாராயும்
ஸ்ரீ கோவிந்த பகவத்பூஜ்யபாதரின் சிஷ்யராயும் உள்ள
ஸ்ரீமத் சங்கரபகவத்பாதருடைய கிருதிகளில்
தசசுலோகீ முற்றிற்று.

ஓம் தத் ஸத்

|| श्रीः ||

|| श्रीगुरुभ्यो नमः ||

# || शतश्लोकी ||

# சதசுலோகீ

[ ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யரவர்கள் சாஸ்திரக்ஞர்களை உத்தேசித்து அனுக்ரஹித்த பிரஸ்தானத்திரய பாஷ்யங்களைத் தவிர, ஸாமான்ய வ்யுத்பத்தி உள்ளவர்களும் ஸுலபமாய் உபநிஷத்து தத்வங்களை அறிந்துகொள்ளும் பொருட்டு அநேகப் பிரகரணங்களையும் மிகக் கருணையுடன் இயற்றியிருக்கிறார். ஒரு சுலோகத்தில் 'ஏக சுலோகி' என்பதையும் 100 சுலோகங்களில் 'ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்கிரஹம்' என்பதையும், மற்றும் 3, 5, 7, 10 முதல் 580 எண்ணிக்கையுள்ள சுலோகங்கள் வரையிலும், 'பிராதஸ் ஸ்மரணம்' முதல் 'விவேக சூடாமணி' வரையிலுள்ள பலவித கிரந்தங்களையும் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார். அவ்விதம் அவர் அனுக்ரஹித்திருக்கும் பிரகரணவளியில் 100 சுலோகங்கள் அடங்கிய 'சதசுலோகீ' என்பது மிகவும் பிரஸித்திபெற்றது. இதில் உள்ள ஒவ்வொரு சுலோகமுமே தனித் தனிப் பிரகரணமாகவே அமைந்திருக்கிறது. உபநிஷத்தில் கண்ட விஷயங்களை மாத்திரம் இந்த சுலோகங்களில் ஸங்கிரகித் திருக்கிறாரென்பதில்லை; கர்ம காண்டத்தில் காணப்படும் அநேக வாக்கியங்களின் ஸாரத்தையும் எடுத்துச் சொல்லி, எப்படி கர்மானுஷ்டானமும் பகவத் ஆராதனமும் அவசியமென்பதையும் துலக்கிக் காட்டியிருக்கிறார். அவர் கையாளும் விஷய வாக்கியங்கள் நான்கு வேதங்களிலுமிருந்து எடுக்கப்பட்டிருக்கிற படியால், நான்கு வேதங்களையும் நன்கு அத்யயனம் செய்து, அவைகளின் தாத்பர்யத்தை நன்கு அறிந்தவர்கள்தான் ஸ்ரீமத் ஆசார்யாரவர்களின் அபிப்பிராயத்தை தெளிவாய் வெளிப்படுத்த முடியும். இந்த பிரகரணத்திற்கு ஆநந்தகிரி என்பவர் பெயரால் ஒரு வியாக்யானம் இருக்கிறது. அதில் வேதங்கள் முதலியதி லுள்ள மூல வாக்யங்களை எடுத்து விஸ்தாரமாக வியாக்யானம் செய்திருப்பதால் அது மிகவும் உபகாரமாயிருக்கிறது. அந்த ஆநந்தகிரி பாஷ்யங்களுக்கு டீகை எழுதின ஆநந்தஞானர் என்ற ஆநந்தகிரி அல்ல என்று வாக்யசைலியிலிருந்தே வியக்த

மாகத் தெரிகிறது. இதில் ஒவ்வொரு சுலோகமும் தனித்தனி விஷயமாகவே இருப்பதால், ஒரு சுலோகத்திற்கும், அடுத்த சுலோகத்திற்கும் உள்ள ஸங்கதி (துடர்ச்சி) யை எடுத்துச் சொல்வதும் சிரமம். இந்த கிரந்தத்தையும் வாசித்து எல்லாரும் கிருதார்தர்களாக ஆகவேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் கூடியமட்டும் தெளிவான ரீதியில் தமிழில் இங்கு மொழிப்பெயர்க் கப்பட்டிருக்கிறது அவசியமாய்த் தோன்றியவிடங்களில் குறிப்பு களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதை வாசித்தாலே ஸமஸ்கிருதத்திலிருக்கும் மூல கிரந்தத்தை அவசியம் வாசிக்க வேண்டுமென்ற அவா வாசகர்களுக்கு ஏற்படுமென்பதில் ஸந்தேஹமில்லை.]

(1)

எந்த கிரந்தத்தை ஆரம்பித்தாலும் முதலில் ஆசிஸ் (மங்களத்தை வேண்டல்), நமஸ்கிரியா (குருவையோ இஷ்ட தேவதையையோ வணங்குதல்), அல்லது வஸ்து நிர்தேசம் (கிரந்தத்தில் சொல்லப்போகும் விஷயத்தை சுட்டிக் காட்டுவது) என்ற ஸம்பிரதாயம் பெரியோர்களிடமிருந்து வருகிறது: அதை அனுஸரித்தே ஸ்ரீமத் ஆசார்யரவர்களும் இந்த கிரந்தத்தை ஆரம்பிக்கிறுர்கள். மங்களங்களுக்கெல்லாம் மேலான மங்களம் பரமபுருஷார்த்தமான மோக்ஷமே. அதற்கு ஸாதனமான ஆத்ம ஞானத்தை உண்டுபண்ணுபவர் குருநாதரே. பிரஹ்மத்தையறிந்தவர் பிரஹ்மமேயென்ற முறையில், அவர் வேறு, இஷ்ட தேவதை வேறு என்பது கிடையாது. அவர் மூலமாய் ஞானத்தையடைந்து அவ்வுத்தமமான புருஷார்த் தத்தையடைவதற்கு வேண்டிய ஸாதனங்களே இக்கிரந்தத்தின் விஷயங்களாகும். ஆகவே கிரந்த-ஆரம்பத்திற்கு வேண்டிய மூன்று அம்சங்களையுமே ஒருங்கே சேர்ந்து முதல் சுலோகத்தில் சொல்கிறுர்.

दृष्टान्तो नैव दृष्टः त्रिभुवनजठरे सद्गुरोर्ज्ञानदातुः
स्पर्शश्चेत् तत्र कल्प्यः स नयति यदहो स्वर्णतामश्मसारम् ।
न स्पर्शत्वं तथाऽपि श्रितचरणयुगे सद्गुरुः स्वीयशिष्ये
स्वीयं साम्यं विधत्ते भवति निरुपमः तेन वाऽलौकिकोऽपि ॥ १ ॥

त्रि-भुवन-जठरे மூன்று-உலகங்களுக்கும்உள்ளே ज्ञान-दातुः ஞானத்தைக்கொடுக்கும் सत्-गुरोः ஸத்தான-

குருவிற்கு दृष्टान्तः உபமானமானது न एव दृष्टः பார்க்கப் பட்டதே கிடையாது. अश्मसारं இரும்புக்கு स्वर्णतां தங்கமா யிருக்கும் தன்மையை अहो ஆச்சர்யப்படும்படி सः அது (ஸ்பர்சமணியானது) नयति ஏற்படுத்துகிறது यत् என்ன காரணத்தினால் स्पर्शः ஸ்பர்சமணி तत्र அவ்விஷயத்தில் (திருஷ்டாந்தமாக) कल्प्यः चेत् கல்பிக்கப்படலாமே யென்றால், तथाऽपि அப்படியிருந்தும் (இரும்பைத் தங்க மாக்கினாலும்) स्पर्शत्वं (அந்த இரும்புக்கு) ஸ்பர்ச மணியின் தன்மையை न ஏற்படுத்தாது. सत्-गुरुः ஸத்தான-குருவோ வென்றால் श्रित-चरण-युगे தன் இரண்டு பாதங்களிலும் சரணமடையும் स्वीय-शिष्ये தன்னுடைய சிஷ்யனிடத்தில் स्वीयं தனக்கு साम्यं ஸமானமாயிருக்கும் தன்மையை विधत्ते ஏற்படுத்திவிடுகிறார். तेन அந்தக் காரணத்தினால் निरूपमः உபமானமற்றவராக भवति இருக் கிறார். अलौकिकः अपि वा (அந்தக்காரணத்தினாலேயே) உலகத்திற்கெல்லாம் மேல் போனவர் என்றும் (ஏற்படுகிறது).

'ஸத்தான-குருவிக்கு'—தைத்திரீய உபநிஷத்தில் अस्ति ब्रह्मेति चेद्वेद सन्तमेनं ततो विदुः 2-6 (பிரஹ்மம் 'இருக்கிறது' என்று ஒருவர் ஸாக்ஷாத்தாக அறிந்தாரேயானால், அவரை அந்தக்காரணத்தால் ஸத் என்று பெரியோர்கள் அறிகிறார்கள்) என்று சொல்லியிருப்பதால், 'ஸத்' என்றால் 'பிரஹ்மவித்' என்று தாத்பர்யம். स देव सोम्येदमग्र आसीत् 6-2 (1) (முதலில் இந்த ஜகத் ஸத்தாகவேயிருந்தது) என்று சாந்தோக்கிய உபநிஷத்திலிருந்து 'ஸத்' என்றால் என்றைக்கும் பாதிக்கப் படாமல் இருந்து வரும் பிரஹ்மம் என்றும் ஏற்படுகிறது. स यो ह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति 3-2 (9) (எவர் ஒருவர் அந்த உத்தமமான பிரஹ்மத்தை அறிகிறாரோ அவர் பிரஹ்மமாகவே ஆகிவிடுகிறார், இருக்கிறார்) என்று முண்டகோபநிஷத் சொல் வதினால் பிரஹ்மவித்திற்கும் பிரஹ்மத்திற்கும் வித்தியாஸமில்லை ஆகையால் 'ஸத்தாயும்—குருவாயுமிருக்கிற' என்றும் அர்த்தம் கிடைக்கிறது. அவ்விதகுருவிற்குத்தான் திருஷ்டாந்தம் இல்லையே தவிர பிரஹ்மவித்தையைத் வேறுவித்யைகளை சொல்லி கொடுக்கும் ஸாமான்ய குருக்களுக்கு திருஷ்டாந்தம் கிடைக்கும்.

'ஞானத்தைக் கொடுக்கும்' — ஜகத்தில் அறியப்படாத விஷயங்கள் பலவிதமாயும் அனந்தமாயுமிருக்கலாம். அவை விஷயமான அறியாமையை நிவிருத்தி செய்துகொள்வதையும் 'ஞானம்' என்று சொல்வதுண்டு. ஆனால் அவ்விஷயமான அறியாமையிருந்தால் எவ்வித கெடுதலுமில்லை. தான்யார் என்று தெரியாமலிருப்பதாகிய அவித்யையினாலேயே காமம், கர்மா, சரீரம், துக்கம் எல்லாம் ஏற்படுவதினால், அந்த மூல காரணமான அவித்யையை போக்கடிக்க வேண்டும். அதை போக்கடிக்க ஆத்மதத்வ ஞானமே வேண்டியிருப்பதால் அது தான் வாஸ்தவமான உத்தமமான ஞானமாகும். அந்த ஞானத்தைக் கொடுப்பவர்தான் மேலானவராவார். திரவியத்தை தானம் செய்தால் வாங்குகிறவனுக்கு போதும் என்ற எண்ணம் ஏற்படுவதில்லை; அன்னதானத்தில் வாங்குகிறவன் அப்பொழுது போதும் என்று எண்ணி சொன்னாலும் மறுநாள் பசிக்கும்; எப்படியும் தானம் வாங்கும் திரவியத்தில் போதுமென்று தோன்றினாலும், மற்ற திரவியங்கள் விஷயமாயுள்ள ஆசையை நிவிருத்தி செய்யாது. ஆத்ம ஞானத்தில் அந்த ஞானம் பெற்றவருக்கு ஸகலவித ஆசைகளும் நிவருத்தியாகி விடுகிற படியால் இந்த தானமே உத்தமமாகும். மேலும் திரவியதானத்தில் வாங்குகிறவனுக்கு லாபம் இருந்த போதிலும் அந்த திரவியம் ஸம்பந்தப்பட்டமட்டில் கொடுப்பவனுக்கு குறைவு ஏற்பட்டேதீரும் ஞானதானத்தில் கொடுப்பவருக்கும் எவ்விதக் குறைவும் ஏற்படாது. இந்த காரணத்தினாலும் ஞானதானம் உத்தமம்

"ஸ்பர்சமணியின் தன்மையை ஏற்படுத்தாது" - இரும்பை தன்னுடைய ஸ்பர்சத்தினால் இந்த மணி தங்கமாக ஆக்கிவிடும் என்பது வாஸ்தவம். ஆனால் அவ்விதம் தங்கமாகவான இரும்பை வேறு இரும்பு தொட்டதேயானால் அது தங்கமாக ஆகிவிடாது. குருவினிடமிருந்து ஆத்மஞானம் பெற்ற சிஷ்யன் தானும் இன்னொருவனுக்கு இந்த ஆத்மஞானத்தைக் கொடுத்து அவனை யும் ஞானியாகச்செய்துவிட யோக்கியதை பெற்றுவிடுவதால், ஸ்பர்சமணி திருஷ்டாந்தமாகாது.

"தனக்கு ஸமானமாயிருக்கும் தன்மையை ஏற்படுத்தி விடுகிறார்" – ஏற்படுத்திவிடுகிறார் என்றால் இதற்கு முன்னில்லாத ஒரு தன்மையை உண்டாக்கிக் கொடுக்கிறார் என்று தோன்றலாம். அப்படியானால் यत्त कृतकं तत्त अनित्यं (எது செய்யப்படுகிறதோ, அதாவது, உண்டாகிறதோ, அது அநித்யம்) என்கிற நியாயப்படி,

அத்தன்மை சாசுவதமாயிருக்க முடியாது என்று ஏற்பட்டுவிடும். தவிரவும் ஸமானமாயிருக்கும் தன்மை என்றால் குருவின் தன்மை வேறு, சிஷ்யனுக்கு ஏற்படும் தன்மை அதைப்போல வேறு என்ற அர்த்தம் த்வனிக்கும். ஆகையால் 'தனக்குள்ள ஸமமாயிருக்கும் தன்மை' என்று அர்த்தம் செய்வது சிலாக்யம். निर्दोषं हि समं ब्रह्म 6-19 (எவ்வித தோஷமற்று ஸமமாயிருப்பது பிரஹ்மம்) என்ற பகவத்கீதா வாக்கியத்தின்படி 'ஸமம்' என்றாலே பிரஹ்மம் என்று தெரிவதால், ஸமமாயிருக்கும் தன்மையென்றால் பிரஹ்மமாயிருக்கும் தன்மை என்ற அர்த்தம் கிடைக்கிறது. மேலும் 'தனக்குள்ள' என்பதற்கு 'குருவினுடைய' என்று அர்த்தம் கொள்வதைவிட 'சிஷ்யனுடைய' என்றே எடுத்துக் கொண்டால் சிஷ்யனுக்கு ஏற்கனவேயிருந்து வரும் பிரஹ்மத் தன்மையை குரு வெளிப்படுத்துகிறார் என்ற அர்த்தம் கிடைக்கும். இதினால் அத்தன்மை ஏதோ புதிதாக ஏற்பட்டதில்லை, முன்னமே இருந்தது, என்பதினால் அநித்யமாவதற்கு இடமில்லை.

'तेनवाऽलौकिकोऽपि' அதினால் உலகத்திற்கு அதீதரும், முன் மூன்று உலகங்களிலும் திருஷ்டாந்தம் கிடையாது என்று சொல்லி யிருப்பதினால் உலகத்திற்குள் அடங்காமல் ஏதேனும் திருஷ்டாந் தம் இருக்கலாமோ அல்லது கவிகளால் கல்பித்து உத்பிரேக்ஷை செய்யக் கூடியதாக ஏதேனும் திருஷ்டாந்தம் இருக்கலாமோ என்று ஸந்தேஹம் ஏற்படலாம். அதுவும் ஸாத்திய மில்லையென்று தாத்பர்யம் எடுத்துக்கொண்டால், 'அதினால் உலகத்திற்கு வெளிப்பட்ட திருஷ்டாந்தம் கூடக் கிடையாது' என்று 'அலௌகிகம்' என்ற வார்த்தையை திருஷ்டாந்தம் என்பதற்கு விசேஷணமாக வைத்து அர்த்தம் செய்யலாம். மேலும், பிரிக்கும்போது 'லௌகிக' என்று பிரிக்கலாம். அப்படி பிரித்தால், ஆத்ம ஞானம் கொடுக்கும் குருவைத்தவிர ஸாமான்ய மான குருவைக்கூட தனக்குத் தெரிந்ததையெல்லாம் சிஷ்யனுக்குச் சொல்லிக்கொடுத்து அவனை தனக்கு ஸமானமாகச் செய்துவிடுகிறபடியால், அந்த ஸாமான்ய குருவிற்குக் கூட திருஷ்டாந்தம் அகப்படாது; அப்படியிருக்க ஆத்மஞானத்தைக் கொடுக்கும் குருவிற்கு திருஷ்டாந்தம் எப்படி அகப்படும் என்ற விசேஷதாத்பர்யமும் கிடைக்கிறது.

(2)

இவ்விதம் ஆத்ம ஞானோபதேசம் செய்கிற ஆசார்யாளின் பெருமையிருப்பதுடன் அவருடன் கூடவிருந்து பழகினவர்

களுக்கும் அவருடைய உபதேசத்தைப்பெற்றவர்களுக்கும் கூட மற்றவர்களை கிருதார்த்தர்களாகச் செய்யக்கூடிய யோக்கியதை ஏற்பட்டுவிடுகிறதென்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார்—

**यद्वत् श्रीखण्डवृक्षप्रसृतपरिमलेनाभितोऽन्येऽपि वृक्षाः**
**शश्वत् सौगन्ध्यभाजोऽप्यतनुतनुभृतां तापमुन्मूलयन्ति ।**
**आचार्यात् लब्धबोधा अपि विधिवशतः सन्निधौ संस्थितानां**
**त्रेधा तापं च पापं सकरुणहृदयाः स्वोक्तिभिः क्षालयन्ति ॥ २ ॥**

**श्रीखण्डवृक्ष** சந்தன மரத்திலிருந்து **प्रसृत** வெளியில் பரவுகிற **परिमलेन** வாஸனையினால் **अभितः** நாலாபக்கத்திலும் **अन्ये** வேறு **वृक्षाः** மரங்கள் **अपि** கூட **शश्वत्** எப்பொழுதும் **सौगन्ध्य-भाजः** நல்ல வாஸனையுடன்-கூடியவைகளாக இருக்கின்றன, **अपि** மேலும் **अतनु-तनु भृतां** ஏராளமான-பிராணிகளுடைய **तापं** தாபத்தை (உஷ்ணத்தினால் ஏற்படும் சிரமத்தை) **उन्मूलयन्ति** நன்கு போக்கடித்து விடுகின்றன என்பது **यद्वत्** எப்படியோ (அப்படியே), **आचार्यात्** ஆசார்யாரிடமிருந்து **विधिवशात्** முன் செய்திருந்த புண்ணியங்களின் பலனாக **लब्ध-बोधाः** ஞானத்தை அடைந்தவர்கள் **अपि** கூட **सन्निधौ** தங்கள் முன்பு **संस्थितानां** இருக்கக் கூடியவர்களுடைய **त्रेधा** (வியாதி முதலிய ஆத்யாத்மிகம், தேள் முதலிய ஆதி பௌதிகம், பனி முதலிய ஆதிதைவிகம், ஆகிய) மூன்று விதமாயிருக்கும் **तापं** துன்பத்தையும், (மனஸ், வாக்கு, காயம் என்றவைகளால் செய்யப்படும் மூன்று விதமான) **पापं च** பாபத்தையும், **सकरुण-हृदयाः** கருணையுடன் கூடிய ஹ்ருதயமுள்ளவர்களாக இருந்து கொண்டு **स्व-उक्तिभिः** தங்களுடைய வார்த்தைகளினால் **क्षालयन्ति** அலம்பி விடுகிறார்கள் (போக்கடித்து விடுகிறார்கள்).

**सौगन्ध्य भाजः**— சந்தன விருக்ஷத்தின் ஸமீபத்திலிருந்தாலோ அதன் வாஸனை காற்றினால் பக்கத்திலுள்ள மற்ற விருக்ஷங்களில் அடிக்கடி படுவதினால் அவைகளும் ஒருவாறு அந்த வாஸனையுள்ளதாக ஆகிவிடும். சந்தன விருக்ஷமாக

ஆகிவிடாமல் போனாலும் அந்த வாஸனை கொஞ்சம் ஏற்பட்டுவிடு மல்லவா? அதைப்போல ஞானிகளின் ஸமீபத்தில் இருந்து வந்தாலே அவர்களுடைய ஸஹவாஸ பலத்தினால் மற்றவர் களுக்கும் ஒருவாறு யோக்கியதை ஏற்பட்டுவிடும். நேராக அந்த ஞானிகளை அடைவதற்கு முடியாதவர்கள் இந்த மற்றவர்கள் மூலமாயும் க்ஷேமத்தை அடையலாம். ஸஹவாஸத்திற்கே இவ்வளவு யோக்கியதை ஏற்படுத்தக்கூடிய சக்தியிருக்கிறபோது, அந்த ஞானிகளின் கருணைக்குப் பாத்திரமாகி அவர்களுடைய உபதேசத்தைக் கேட்கும் பாக்கியத்தையும் பெற்றவர்களிடம் அந்த யோக்கியதை மிகவும் அதிகமாக இருக்குமென்பதிலும், இவர்களை அண்டினால் அவசியம் க்ஷேமம் கைகூடும் என்பதிலும் என்ன ஸந்தேஹம்?

**अतनु तनुभृतां** — என்பதில் 'அதநு' என்ற பதத்திற்கு 'குறைவில்லாத' அதாவது 'ஏராளமான' என்று முன் அர்த்தம் சொல்லப்பட்டது. அதற்கே 'சிறியதில்லாத' அதாவது 'பருமனான' (ஸ்துலமான) என்று அர்த்தம் செய்தால் 'ஸ்தூல மான சரீரத்தையுடையவர்களுக்கு' என்று ஏற்படும் மனுஷ்யர் களில் பெருத்த சரீரமுள்ளவர்களுக்கும் மிருகங்களில் யானைக்கும் உஷ்ணத்தினால் ஏற்படும் தாபத்தைத் தாங்குவது மிகவும் சிரமம் என்பது யாவரும் அறிந்ததே. அவர்களுடைய தாபத்தைகூட இந்த வாஸனை போக்கடிக்குமேயானால், சிறிய சரீரத்துடன் இருப்பவர்களின் தாபத்தை போக்கடிக்காதா? அப்படியே, சரீரத்தில் 'நான்' என்ற அபிமானம் மிகவும் தடித்திருப்பவர் களுடைய தாபத்தை நீக்குமானால், அவ்வபிமானத்தை விவேகத் தினால் குறைத்துக்கொண்டிருப்பவர்களுடைய தாபத்தை நீக்குவது சிரமமாகும்?

**विधिवशात्** :— பூர்வ புண்யத்தினால் குருவினிடம் ஞானோப தேசம் பெற்றவர்களென்று சொன்னோம். இதையே பின்னால் வரும் 'தன் முன்பு இருப்பவர்' என்பதுடன் அன்வயம் செய்தால் அவ்விதம் ஞானோபதேசம் பெற்றவரின் எதிரில் போயிருக்கும்படி கிடைப்பதற்கும் பூர்வபுண்யம் நிரம்பவேண்டுமென்ற தாத்பர்யம் கிடைக்கிறது.

**अघा** :— மூன்றுவிதமாக தாபத்தையும் பாபத்தையும் முன் எடுத்துச் சொன்னோம். 'தங்களுடைய வார்த்தைகளினால்' என்பதுடன் அன்வயம் பண்ணினால், அவ்வார்த்தைகளும்

மூன்றுவிதம் என்று அறியலாம். புருஷார்த்த ஸாதனங்களைச் சொல்லும் வேதத்தை கர்மகாண்டம், உபாஸனகாண்டம், ஞான காண்டம் என்று மூன்றாகப் பிரிப்பார்கள். ஸாதகர்களுடைய அதிகாரத்திற்கு தக்கபடி சிலர்களுக்கு சித்த சுத்திக்கு ஸாதன மான கர்மாவையும், சித்த-ஐகாக்ரிய ஸாதனமான உபாஸனை யையும், அவித்யா நிவிருத்திக்கு ஸாதனமான ஞானத்தையும், பெரியோர்கள் உபதேசிப்பார்கள் என்னும் தாத்பர்யம்.

**क्षालयन्ति :—** அலம்பிவிடுகிறார்கள் என்று சொன்னதினால் அலம்பிவிடக்கூடிய தாபமோ பாபமோ புதிதாக வந்து ஒட்டிக் கொண்ட அழுக்குகளே தவிர, ஆத்மஸ்வரூபத்தைச் சேர்ந்தவை கள் அல்ல; ஸ்வரூபத்தில் சேர்ந்திருக்குமேயானால் அவைகளை அலம்பிவிடவே முடியாது. ஆகையால் ஆத்மா எவ்வித தாபமும் பாபமுமில்லாத சுத்த ஆனந்த ஸ்வரூபம் என்பது தெளிவாகிறது.

(3)

இவ்விதம் உத்தமமான குருவினால் உபதேசிக்கப்பட்ட ஆத்ம ஞானம் வாஸ்தவமாக ஸபலமாக வேண்டுமானால் பரோக்ஷமாய் மாத்திரம் ஏற்பட்டிருந்தால் போதாது, அதை சிஷ்யன் குருவினிட மிருந்து ஸந்தேஹமற்று கேட்டுத் தெரிந்துகொண்ட பின்பு அதையே அனுஸந்தானம் செய்து அனுபவத்திற்கு கொண்டு வந்து அபரோக்ஷ ஞானமாய் செய்யவேண்டியதுண்டு, அதை எப்படிச் செய்வது என்பதை அடுத்த சுலோகத்தில் விவரித்துச் சொல்லுகிறார் —

**आत्मानात्मप्रतीतिः प्रथममभिहिता सत्यमिथ्यात्वयोगात्**
**द्वेधा ब्रह्मप्रतीतिः निगमनिगदिता स्वानुभूत्योपपत्त्या ।**
**आद्या देहानुबन्धाद्भवति तदपरा सा च सर्वात्मकत्वात्**
**आदौ ब्रह्माहमस्मीत्यनुभव उदिते खल्विदं ब्रह्म पश्चात् ॥ ३ ॥**

**आत्म-अनात्म-प्रतीतिः** ஆத்மா-ஆத்மாவல்லாதது-என்ற அறிவு **सत्य-मिथ्यात्व-योगात्** ஸத்யமாயிருத்தல்-மித்யையா யிருத்தல்-என்ற ஸம்பந்தத்தினால் **प्रथमं** முதலில் **अभिहिता** சொல்லப்பட்டிருக்கிறது. **ब्रह्म-प्रतीतिः** பிரஹ்ம விஷய மான-அறிவு **स्व-अनुभूत्या** தன்னுடைய அனுபவத்தினாலும், **उपपत्त्या** யுக்தியினாலும், ஆக **द्वेधा** இருவிதமாக **निगम-निगदिता** வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(இவ்விரண்டில்) आद्या முதலாவது (அறிவு) देह-अनुबन्धात् சரீரத்தை-ஸம்பந்தித்தே भवति ஏற்படுகிறது. तत्-अपरा அதற்கு வேருகிய (இரண்டாவது) सा च அந்த அறிவோ सर्व-आत्मकत्वात् எல்லா-ஸ்வரூபமாயிருப்பதிஞல் (ஏற்படு கிறது). अहं நான் ब्रह्म பிரஹ்மமாகவே अस्मि இருக்கிறேன் इति என்று अनुभवे அனுபவம் आदौ முதலில் उदिते ஏற்பட்டதேயாஞல், पश्चात् பின்ஞல் इदं இந்த ஜகத் ब्रह्म பிரஹ்மம் खलु தானே (என்ற அனுபவம் ஏற்படும்).

ஜகத்தின் தத்வத்தை பரிசீலனம் செய்வதற்காக ஆரம்பிக்கும் எந்த அறிவாளிக்கும் ஜகத்தில் அறியும் சக்தியுள்ள சேதனும்சம் ஒன்றிருப்பதாயும், அறியப்படும் தன்மையுள்ள ஜடாம்சம் ஒன்றிருப்பதாயும், முதலிலேயே நன்கு தட்டுப்படும். அதையே आत्मानात्मप्रतीतिः என்கிருர். அச்சேதனும்சத்தை ஆத்மா என்றும், ஜடாம்சத்தை அனுத்மா (ஆத்மாவல்லாதது) என்றும் சொல்லப்படுகிறது. ஆத்மஞானம் ஏற்படவேண்டுமாஞல் ஆத்மா எது, ஆத்மாவல்லாதது எது, என்று தெரியவேண்டி யிருப்பதால் முதலில் ஆத்மாவையும் ஆத்மாவல்லாததையும் பிரித்தறியத் தெரியவேண்டும். இதை 'விவேகம்' என்பார்கள். பிரித்தறியவேண்டுமாஞல் இரண்டின் ஸ்வரூபமும் நன்கு அறியப் படவேண்டும். அந்த ஸ்வரூபத்தையே सत्यमिथ्यात्वयोगात् என்ற பதத்திஞல் குறிக்கிருர். அதாவது, அறிகிறதான ஆத்மா எப்பொழுதுமிருக்கும் தன்மையுள்ளது, அறியப்படும் அனுத்மா ஒரு நிலையில்லாமல் மாறுபட்டுக்கொண்டு தோன்றி மறையும் தன்மையுள்ளது. தோன்றி மறையும் தன்மையுள்ள அனுத்மாவை பொருட்படுத்தாமல், தன்னிடமிருந்து விலக்குவது 'வைராக்யம்' எனப்படும். பிறகு ஆத்மாவிலிருந்து அனுத்மாவை நன்கு பிரித்துப் பார்க்கும்போது, இந்த அனுத்மா கலந்ததிஞல் தான் ஆத்மா சிறியதாகத் தோன்றினதென்றும் வாஸ்தவத்தில் ஆத்மா வியாபகமான பிரஹ்மம் என்றே தெரியவரும். அதன் பிறகு, விலக்கிவிட்ட அனுத்மாவின் ஸ்வரூபத்தை கவனித்துப் பார்க்கும் போது அது வெறும் தோற்றமாயிருப்பதால், சிப்பியில் தோன்றும் வெள்ளி எப்படி சிப்பியைத் தவிர வேறில்லையோ அப்படியே, அனுத்மாவும் அதற்கும் அடிப்படையான பிரஹ்மத்தைத்தவிர வேறில்லையென்ற அறிவு ஏற்படும். இவ்விதமாக ஆத்மா என்பது பிரஹ்மமே, அனுத்மாவென்பதும் பிரஹ்மத்தைவிட வேறில்லை,

என்று இரண்டு விதமாக பிரஹ்ம விஷயமான அறிவு ஏற்படும் என்பதையே द्वेधा ब्रह्म प्रतीतिः என்ற பதங்களால் சொல்லியிருக்கிறார். தான் பிரஹ்மம் என்று அனுபவத்தினால் அறியவேண்டுமென்றும், தன்னைத்தவிர வேறாகத்தோன்றும் அனாத்மாவும் பிரஹ்மந்தானென்று அறிவது யுக்தியினாலேயே ஸாத்தியமென்றும், அவ்விரண்டு அறிவுகளுக்கும் ஸாதனங்கள் வெவ்வேறு என்பதை स्वानुभूत्या उपपत्त्या என்று பிரித்துச்சொல்லியிருக்கிறார். இவ்விரண்டு அறிவுகளிலும் முதலில் தான் யார் என்ற ஆத்ம தத்வத்தின் அறிவே ஏற்படவேண்டுமென்பதை आदौ (முன்னால்) पश्चात् (பின்னால்) என்கிற வார்த்தைகளால் காட்டுகிறார்.

ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்தறியவேண்டும் என்றும், பிரித்து அறியும்போது ஆத்மா பிரஹ்மந்தானென்று தெரியவருமென்றும், அவ்விதம் தெரிந்துகொள்ள தேஹ ஸம்பந்தமான தன் அனுபவமே உதவுமென்றும் பொதுவாக சொல்லிவிட்டு, இனி பிரித்தறியவேண்டிய ஆத்மாவின் லக்ஷணத்தையும், எதிலிருந்து அதைப் பிரிக்கவேண்டுமோ அதன் லக்ஷணத்தையும், தேஹ ஸம்பந்தமான அனுபவம் எவ்வகையுள்ளதென்பதையும், 4 சுலோகங்களில் விளக்குகிறார்-

आत्मा सच्चित्सुखात्माऽनुभवपरिचितः सर्वदेहादियन्ता
सत्येवं मूढबुद्धिः भजति ननु जनोऽनित्यदेहात्मबुद्धिम् ।
बाह्येऽस्थिस्नायुमज्जापलरुधिरवसाचर्ममेदोयुगन्तः
विण्मूत्रश्लेष्मपूर्णं स्वपरवपुरहो संविदित्वाऽपि भूयः ॥ ४ ॥

आत्मा ஆத்மாவானது सत्-चित्-सुख-आत्मा ஸத்தாயும்-ஞானமாயும்-ஆனந்தமாயும்-இருக்கும் தன்மையுள்ளது; अनुभवपरिचितः அனுபவத்தினாலேயே (இவ்விதமென்று) பழக்கத்தினால் அறியப்பட்டது; सर्व-देहादि-यन्ता எல்லா-சரீரம் (இந்திரியம், பிராணன், மனஸ்) முதலியவைகளை அடக்கி ஏவுவது. एवं இவ்விதமாக सति இருந்தும், मूढ-बुद्धिः மோஹத்தையடைந்த-புத்தியையுடைய जनः ஜனங்கள் (இந்த தேஹத்திற்கு) बाह्ये வெளியில் (இந்த தேஹம்) अस्थि - स्नायु - मज्जा - पल - रुधिर - वसा - चर्म - मेदो - युक्

எலும்பு - நரம்பு-மஜ்ஜை-மாம்ஸம்-ரத்தம்-வஸை-தோல்-கொழுப்பு-இவைகளுடன் கூடியதாயும் अन्तः உள்ளே विट्-मूत्र-श्लेष्म-पूर्णं மலம்-மூத்திரம்-சிலேஷ்மம்-இவைகள் நிறைந்ததாயும் स्व-पर-वपुः தன்னுடைய சரீரமும்-மற்றவர்களுடைய சரீரமும் (இருக்கிறதென்று) संविदित्वा अपि நன்கு தெரிந்து கொண்டும் கூட भूयः வெகுவாக अनित्य-देह-आत्म-बुद्धिं அநித்யமான-சரீரத்தில்-ஆத்மாவென்கிற-எண்ணத்தை भजति ननु அடைகிறார்களல்லவா? अहो இது வெகு ஆச்சர்யம்.

चिद्वित्सुखात्मा என்றே அச்சுப் புஸ்தகங்களில் காணப்படுகிறது. 'சித்' என்பதற்கும் 'வித்' என்பதற்கும் அர்த்தத்தில் அதிக வித்யாஸமில்லாததினால் सच्चित्सुखात्मा என்பதுதான் சரியான பாடம் பின்னால் சரீரத்தை அநித்யமென்று கண்டிருப்பதினால், ஆத்மா நித்யம் என்று சொல்லவேண்டியதும் அவசியமாகும். सत् 'ஸத்' (ஒரு நாளும் பாதிக்கப்படாமல் எப்பொழுதும் இருந்துவரும் தன்மையுள்ளது) என்றேயிருந்தால் பொருத்தமாயிருக்கும்.

अनुभव परिचित:- ஆத்மா ஸத் சித் ஆனந்தஸ்வரூபம் என்பது ஏதோ வேதத்தினால் சொல்லப்பட்டிருக்கிறது என்று நினைக்கவேண்டாம். நம்முடைய பிரதிதின அனுபவத்தினாலேயே அறியப்படுகிறது ஜாக்கிரத் காலத்தில் "நான் இருக்கிறேன், நான் அறிகிறேன், நான் ஸுகியாக இருக்கிறேன்" என்று மூன்றுவித அனுபவமுமிருக்கிறது; ஆனால் "நான் அறியவில்லை, நான் துக்கியாக இருக்கிறேன்" என்ற அனுபவமும் சிலஸமயம் கலந்திருக்கிறது; எப்படியும் "நான் இருக்கிறேன்" என்பது எப்பொழுதுமிருந்துவருகிறது. ஸ்வப்ன ஸமயத்திலும் "நான் இருக்கிறேன், நான் அறிகிறேன், நான் ஸுகியாக இருக்கிறேன்" என்ற மூன்றுவித அனுபவமிருக்கிறது. ஆனால் "நான் துக்கியாக இருக்கிறேன்" என்ற அனுபவமும் சில ஸமயம் கலந்துவிடுகிறது. எப்படியும் "நான் அறிகிறேன்" என்பது இருந்துவருகிறது. நல்ல தூக்கத்திலும் "நான் இருக்கிறேன், நான் அறிகிறேன், நான் ஸுகியாக இருக்கிறேன்" என்ற அனுபவமிருக்கிறது. ஆனால் அந்த ஸமயத்தில் "நான் இருக்கிறேன்" என்றுவது, "நான் அறிகிறேன்" என்றுவது,

"நான் ஸுகியாக இருக்கிறேன்" என்றுவது, தோன்று வதில்லை. பின்னுல் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டபிறகு "நான் ஸுகமாக இருக்கிறேன்" என்று ஞாபகத்துடன் சொல்வதினுல், தூக்க ஸமயத்தில் அனுபவம் இருந்தது என்பது தெளிவாகிறது. இந்த அனுபவத்தில் துக்கம் கொஞ்சமேனும் கலப்பதில்லை. ஆக பொதுவாக, ஜாக்கிரத்தில் "ஸத்" அம்சத்திற்கும், ஸ்வப்னத்தில் "சித்" அம்சத்திற்கும், ஸுஷுப்தியில் "ஆனந்த" அம்சத்திற்கும், பிரதான்யம் உண்டென்று சொல்லலாம். இவ்வம்சங்களுடையதே ஆத்மா.

सर्वदेहादियन्ता:- தேஹம், இந்திரியம், மனஸ் முதலான வைகளை நியமனம் செய்கிற சக்தி ஆத்மாவிற்கு இருக்கிற தென்பதும் எல்லாருடைய அனுபவத்தினுலேயே தெரிந்த விஷயம்; அப்படியே, தேஹம் முதலியவைகள் நியமனம் செய்யப்படுபவைகள் என்பதும் அனுபவத்தினுல் அறியப் பட்டதே.

मूढबुद्धि :—ஆத்மா ஸத்தாய், சித்தாய், ஆனந்தமாய் இருக்கும் தன்மையுள்ளது, நியமனம் செய்வது, என்று அனுபவத்தினுலேயே தெரிந்திருந்துங்கூட அநித்யமாய், ஜடமாய், வெறுக்கத்தக்கதாய், நியமனம் செய்யப்படுவதாய், இருக்கும் சரீரத்தில் ஆத்மாவென்கிற எண்ணம் வரவேண்டு மானுல் மூடத்தனத்தைத் தவிர வேறு எவ்வித காரணமும் சொல்வதற்கில்லை என்பதை இந்த பதத்தினுல் காட்டுகிருர்.

(5)

அனுத்மாவாயிருக்கிற தேஹாதிகளில் 'நான்' என்ற எண்ணம் எப்படி மூடத்தனத்தினுல் ஏற்பட்டிருக்கிறதோ, அப்படியேதான் தேஹம் முதல் வெளியிலுள்ள பதார்த்தங்களில் வைக்கும் 'என்னுடையது' என்ற எண்ணமும் என்று அடுத்த சுலோகத்தில் விளக்குகிருர் :—

देहस्त्रीपुत्रमित्रानुचरहयवृषाः तोषहेतुर्ममेत्थं
सर्वे स्वायुर्नयन्ति प्रथितमलममी मांसमीमांसयेह ।
एते जीवन्ति येन व्यवहृतिपटवो येन सौभाग्यभाजः
तं प्राणाधीशमन्तर्गतममृतममुं नैव मीमांसयन्ति ॥ ५ ॥

देह-स्त्री-पुत्र-मित्र-अनुचर-हय-वृषाः தேஹம் - மனைவி - புத்திரன் - ஸ்நேஹிதன் - வேலைக்காரன் - குதிரை - மாடு இவைகள் मम எனக்கு तोष-हेतुः ஸந்தோஷத்திற்கு-காரணம் इत्थं என்று இவ்விதமாக इह இவ்வுலகத்தில் सर्वे யாவருமாகிய अमी இந்த ஜனங்கள் मांस-मीमांसया மாம்ஸத்தைப்பற்றி-விசாரணை செய்து கொண்டே प्रथितं (எவ்வளவோ சிரமப்பட்டு அடைந்திருக்கும்) பிரஸித்தமான स्व-आयुः தங்களுடைய-வாழ்நாளை अत्र பூராவும் नयन्ति நடத்துகிறார்கள். एते இவைகளெல்லாம் (தேஹம் முதலியவை) येन எதினால் जीवन्ति ஜீவித்திருக்கின்றனவோ, (எதினால்) व्यवहृति-पटवः வியவஹாரம் செய்வதில் - ஸாமர்த்தியமுள்ளவைகளாக இருக்கின்றனவோ, येन எதினால் सौभाग्य-भाजः நல்ல க்ஷேமத்தை-அடைந்தவைகளாக இருக்கின்றனவோ, तं அந்த अन्तर्गतं உள்ளேயிருக்கிற अमृतं நாசமற்றதான अमुं இந்த प्राण-अधीशं பிராணனுக்கு - அதிபதியை (ஆத்மாவை) न एव मीमांसयन्ति விசாரிப்பதே கிடையாது.

அநேகமாய் "நான்" என்றும் சில ஸமயங்களில் 'என்னுடையது' என்றும் சரீரம் எண்ணப்படுகிறது. சரீரத்திற்கு அடுத்தபடியாக "என்னுடையது" என்று பார்யை எண்ணப்படுகிறாள்; அதற்கு அடுத்தபடியாக புத்திரன்; அதற்கு அடுத்தபடியாக மித்திரன்; அதற்கு அடுத்தபடியாக வேலைக்காரர்; அதற்கு அடுத்தபடியாக மாடு, குதிரை முதலிய சொத்துக்கள் இவைகளை ஸம்பாதிப்பதும் சிரமம், பரிபாலிப்பதும் சிரமம், கையை விட்டுப் போய்விட்டாலும் சிரமம். ஆக இவை யாவும் துக்கத்திற்கே காரணமாயிருந்தும், அவைகள் ஸந்தோஷத்திற்குக் காரணம் என்று எண்ணுவது மூடத்தனமல்லவா? என்கிறார் ஆசார்யார். தவிரவும், ஒருவனைப் பார்த்து 'நீ சௌக்கியமா? பார்யை குழந்தை முதலானவர்கள் சௌக்கியமா? மாடும் குதிரையும் ஏன் மெலிந்திருக்கிறது?" என்றெல்லாம் குசலப் பிரசினம் கேட்பது அங்கங்கேயுள்ள மாம்ஸம் குறையாமல் இருக்கிறதா? ஏன் குறைந்திருக்கிறது? என்றுதானே அர்த்தம்? இது மாம்ஸத்தைப்பற்றின விசாரந்தான் அல்லவா? என்கிறார். பிராணன் இல்லையானால் தேஹம் தனித்து இருக்குமா? சேஷ்டிக்க முடியுமா? மங்களமாயிருக்கிறதென்று சொல்லமுடியுமா?

அப்படியே பார்வை முதலான 'என்னுடையது' என்பதெல்லாம் இவைகளுக்கெல்லாம் ஸ்வான்தாரான 'நான்' என்கிற ஆத்மாவைப் பொறுத்துத்தானே பெருமை கொண்டாட முடிகிறது. அப்படியிருக்க, அந்த ஸ்வான்தாரான 'நான்' என்கிற ஆத்மாவைப்பற்றி விசாரிக்காமலேயிருப்பது மூடத்தனமில்லையா? என்று ஆசார்யார் மிகவும் அனுதாபத்துடன் ஆச்சர்யத்துடன் கேட்கிறுர். அந்த ஆத்மா ஒருவன் உண்டென்று தெரியாது என்று சொல்லமுடியாது என்பதை முந்தின சுலோகத்தில் தெளிவுப்படுத்தியிருப்பதுடன் இந்த சுலோகத்திலும் கொஞ்சம் யோஜித்தால் தானுகவே தெரியவரும் என்பதைத் துவக்கி இருக்கிருர்.

**प्रथितं ... इह** — பலவிதமாக கோடிக்கணக்காக பிராணிகள் இருந்துவருவதில் மனுஷ்ய ஜன்மம் கிடைப்பது மிகவும் அரிது. மஹத்தான புண்ணியமிருந்தால்தான் கிடைக்கும். அதிலும் புருஷனுய் பிறப்பது, அதிலும் பிராஹ்மணனுய்ப் பிறப்பது, மிகவும் அரிது. இவ்வளவு அரிதான பிறவி கிடைத்தும் வீணுக்கு கிருர்களே என்று மிகவும் வருந்துகிருர் ஆசார்யார். அதுவும் பரமபுருஷார்த்தத்தை அடைவதற்கு வேண்டிய ஸாதனங்களை அனுஷ்டிப்பதற்குரியதான கர்மபூமியான 'இங்கே' பூவுலகத்தில், அதிலும் கர்மதேசமான 'இங்கே' பாரத தேசத்தில், அதிலும் 'இங்கே' மஹரிஷிகளின் வம்சத்தில், பிறந்தும்கூட தன் வாழ்நாட்களை எவ்விதம் உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டுமோ அவ்விதம் செய்யாமல் வீணுக எவ்விதப்பிரயோஜனமில்லாத அனுத்ம விசாரணையிலேயே காலத்தைக் கழிக்கிருர்களே என்று அனுதாபமும் வியப்பும் கலந்து ஆசார்யார் இவ்விதம் சொல்கிருர்.

(6)

அநித்யமாய், ஜடமாய், துக்கத்திற்குக் காரணமாயுள்ளதும் வெறுக்கத்தக்கதுமான சரீரத்தில் ஆத்மாவிற்கு 'நான்' என்கிற எண்ணம் நியாயமில்லையென்றிருக்கலாம். ஆனுலும் அவ்வெண்ணம் இருந்துவருகிறதே, அதற்குக் காரணம் என்ன? என்ருல் அதை அடுத்த சுலோகத்தில் திருஷ்டாந்த பூர்வமாக எடுத்துச் சொல்கிருர்—

**कश्चित् कीटः पट्टपतिरभितः कण्टकानां कुटीरं**
**कुर्वन् तेनैव साकं व्यवहृति विषये चेष्टते यावदायुः ।**

तद्वत् जीवोऽपि नानाचरित समुदितैः कर्मभिः स्थूलदेहं
निर्मायात्रैव तिष्ठन्ननुदिनममुना साकमभ्येति भूमौ ॥ ६ ॥

पटु-मतिः நல்ல-புத்திசாலியான कश्चित् ஒரு कीटः பூச்சி अभितः தன்னைச்சுற்றி कण्टकानां முட்களைக்கொண்டு कुटीरं குடிசையை कुर्वन् ஏற்படுத்திக்கொண்டு तेन साकं एव அதன் கூடவே, व्यवहृति-विषये ஸகல வியவஹாரமும்-செய்வதின் பொருட்டு, यावत्-आयुः ஆயுட்காலம்-இருக்கும் வரை चेष्टते சேஷ்டிக்கிறது. तद्वत् அதைப்போல, जीवः अपि ஜீவனும் नाना-चरित-समुदितैः பலவிதமாக-முன்னால் செய்யப்பட்டிருக்கும் கர்மாக்களிலிருந்து-எடுக்கப்பட்ட कर्मभिः (இந்த சரீரம் ஏற்படுவதற்கு வேண்டிய பிராரப்த) கர்மாக்களைக் கொண்டு स्थूल-देहं ஸ்தூல-சரீரத்தை निर्माय நிர்மாணம் செய்து கொண்டு अत्र एव இந்த ஸ்தூல சரீரத்திலேயே तिष्ठन् இருந்து கொண்டு अनुदिनं பிரதிதினம் (எப்பொழுதும்) अमुना साकं அதனுடன் கூடவே भूमौ உலகத்தில் अभ्येति பல வியவஹாரங்களைச் செய்து வருகிறான்.

நத்தை, முத்துச்சிப்பிப்புழு, முதலிய பிராணிகள் இருக்கும் வீடுகள் போலுள்ள கூடுகளை தாங்களே ஏற்படுத்திக்கொண்டு அக்கூடுகளை விட்டுப் பிரியாமல் அவைகளையும் எப்பொழுதும் தூக்கிக்கொண்டே ஸஞ்சரிக்கின்றன என்பது பிரஸித்தம். அக் கூடுகள் சேதனமற்ற ஜடமானவைகள் என்பதும், அவைகளுக் குள்ளிருக்கும் பிராணி சேதனம் என்பதும், யாரும் அறிந்த விஷயம். அதைப்போலவே, ஜீவன் சேதனனாயிருந்தும், அசேதனமான ஸ்தூல சரீரத்தை ஏற்படுத்திக்கொண்டு அதற்குள் இருந்துகொண்டு அதை எப்பொழுதும் சுமந்துகொண்டு உலகத்தில் ஸகல வியவஹாரங்களையும் செய்கிறான். தனக்கு இருப்பிடமாயிருந்துவரும் வீடுபோலுள்ள ஸ்தூல சரீரத்தையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு அதையும் 'நான்' என்று பாவிக்கிறான். வஸ்திரத்தைப் போர்த்திக்கொண்டு இருப்பவன், மற்றொருவன் அந்த வஸ்திரத்தைத் தொட்டால், 'என்னை ஏன் தொட்டாய்?' என்று கேட்பதில்லையா? அவன் வேறு, வஸ்திரம் வேறு, என்றிருந்தபோதிலும் இவ்வித உலக வியவ

ஹாரம் எப்படி இருக்கிறதோ, அப்படியேதான், ஜடமான சரீரம் வேறு, அதிலுள்ள சேதனனுன ஜீவன் வேறு, என்றிருந்த போதிலும் அந்த சரீரத்தை ‘தான்’ என்றும், அந்த சரீரத்தின் தர்மங்களையும் ஸுகதுக்க அனுபவங்களையும் ‘தன்னுடையது’ என்றும் ஜீவன் நினைக்கிறுன். அவ்விதம் நினைப்பதற்குக் காரணம், இரண்டையும் பிரித்து அறியாததுதான். இந்த அறியாமையைத் தான் முன் சுலோகங்களில் ‘மூடத்தனம்’ என்று சொல்லப் பட்டது.

அந்தப்புழு எப்படி தன்னுடைய எச்சில் முதலிய அம்சங்களால் தானுகவே கூட்டை உண்டுபண்ணிக்கொள்கிறதோ, அதைப்போலவேதான், ஜீவனும் தன்னுடைய புண்ணிய பாபச் செயல்களினுல் இந்த ஸ்தூல சரீரத்தை ஏற்படுத்திக்கொள்கிறுன். இந்த சரீரம் ஏற்படுவதற்கு முன்னுல் அனுதி காலந்தொட்டு பலவிதமாய் அனந்தமாய் புண்ணிய பாபங்கள் செய்திருப்பதினுல் அவ்வெல்லா புண்ணிய பாபங்களுக்கும் சேர்த்து ஒரே பலனுக இந்த சரீரம் ஏற்பட்டிருக்கிறதென்பது கிடையாது. அனந்தமான அக்கர்மாக்களிலிருந்து இப்பொழுதுள்ள சரீரத்தை உண்டு பண்ணுவதற்கு போதுமான கர்மாக்களை மாத்திரம் உபயோகித்து இந்த சரீரம் ஏற்பட்டிருக்கிறதென்பதை नानाचरित समुदितैः कर्मभिः என்ற வார்த்தைகளால் தெளிவுபடுத்தியிருக்கிறுர்.

ஜீவன் ஸ்தூல சரீரத்தையும் சேர்த்துக்கொண்டு ‘தான்’ என்றே வியவஹாரம் செய்துவந்தபோதிலும், தன்னுடைய வாஸ்தவமான சேதன ஸ்வரூபத்தை மறந்தே விட்டானென்று சொல்ல முடியாது, என்பதை இரண்டு திருஷ்டாந்தங்கள் சொல்லி அடுத்த சுலோகத்தில் எடுத்துக்காட்டுகிறுர்—

स्वीकुर्वन् व्याघ्रवेषं स्वजठरभृतये भीषयन् यश्च मुग्धान्
मत्वा व्याघ्रोऽहमित्थं स नरपशुमुखान् बाधते किन्नु सत्त्वान् ।
मत्वा स्त्रीवेषधारी स्त्र्यहमिति कुरुते किं नटो भर्तुरिच्छां
तद्वच्छारीर आत्मा पृथगनुभवतो देहतो यः स साक्षी ॥

यः எவனெருவன் स्व-जठर भृतये தன்-வயிற்றை-நிரப்புவதற்காக (பிழைப்புக்காக) व्याघ्र-वेषं புலி-வேஷத்தை स्वीकुर्वन् எடுத்துக்கொண்டு मुग्धान् (குழந்தைகள்

முதலான) அறிவில்லாதவர்களை भीषयन् च-பயமுறுத்திக் கொண்டும் இருக்கிறானே, सः-அவன் "अहं-நான் व्याघ्रः-புலி" इत्थं-என்றிவ்விதம் मत्वा-எண்ணிக்கொண்டு नरपशून्-மனிதன், பசு (ஆடு, மான்) முதலிய सत्वान्-பிராணிகளை किं नु बाधते-பாதிப்பானா? स्त्री-वेष-धारी ஸ்திரீ-வேஷம்-தரித்துக்கொண்டிருக்கிற नटः-நடன் "अहं-நான் स्त्री-ஸ்திரீ" इति-என்று मत्वा-எண்ணிக்கொண்டு भर्तुः பர்த்தா விஷயமான (தனக்கு பர்த்தா வேண்டுமென்று) इच्छां-விருப்பத்தை किं कुरुते-கொள்வானா? तद्वत्-அதைப் போலவே, शारीरः-சரீரத்திலுள்ள आत्मा-ஆத்மாவானவர் यः-எவரோ सः-அவர் देहतः-தேஹத்திலிருந்து पृथक्-अनुभवतः-வேறு பட்டவர் என்கிற அனுபவமிருப்பதனால் साक्षी-வெறும் பார்த்துக்கொண்டிருப்பவர் தான்.

புலிவேஷம் போட்டுக்காட்டிப் பிழைப்பவன் புலி மாதிரியே சரீரத்தில் அடையாளங்கள் செய்துகொண்டு வால், பல், முதலியதை தரித்துக்கொண்டு அங்குமிங்கும் பாய்ந்துகொண்டு குழந்தைகளை பயமுறுத்திக்கொண்டிருந்தாலும், தான் மனிதன் என்பதை மறந்துவிட மாட்டான். தனக்குப் பசி வந்தபோது பக்கத்திலுள்ள வேறு மனிதனையோ ஆட்டையோ மாட்டையோ அடித்துத் தின்பது கிடையாது. தவிரவும் வேறு மனிதனோ மிருகமோ இவனை எதிர்க்கவந்தால் இவனே ஓடி ஒளிந்து கொள்வான். இவை போலுள்ள கார்யங்களிலிருந்து இவன் தன்னை மறந்தவனில்லையென்பது நன்றாகத் தெரிகிறது.

அப்படியே நாடகத்தில் ஸ்திரீ வேஷம் போட்டுக்கொள்ளுபவன் அதற்குரிய நடை உடை பாவனை பேச்சு முதலிய யாவற்றையும் உடையவனாகத் தோன்றினபோதிலும், அவன் தன்னை ஸ்திரீதான் என்று நினைத்து புருஷனென்பதை மறந்துவிடுவது கிடையாது. தனக்கு ஒரு நாயகன் இருந்தால் நல்லது என்று ஒருக்காலும் நினைக்கவுமாட்டான். भर्तुः इच्छां என்பதற்கு பர்த்தா விஷயமான விருப்பம் என்று மேலே அர்த்தம் சொல்லப் பட்டது. அதற்கே "பர்த்தாவினுடைய விருப்பம்" என்றும் அர்த்தம் செய்யலாம். அதாவது, அந்த நாடகத்தில் அந்த ஸ்திரீக்கு ஒரு பர்த்தா இருப்பான்; அவனுக்கு ஸ்திரீ போகத்தில் விருப்பம் ஏற்பட்டால், அதை பூர்த்தி செய்துகொடுக்க இந்த

ஸ்திரீ வேஷதாரியான நடனுக்கு ஸாமர்த்தியம் உண்டா? என்று தாத்பர்யம். இவ்விதம் இரு வகையாக கவனித்தாலும் இவன் தன்னுடைய புருஷத் தன்மையை மறந்தவனில்லை யென்பது நிச்சயமாய் தெரிகிறது.

அது போலவே தான், ஆத்மாவும் இந்த சரீரமாகிற வேஷத்தை தரிக்கும்போது சில ஜன்மாக்களில் மனிதனாகவும் சில ஜன்மாக்களில் பசு பக்ஷி மிருக ரூபமாகவும் சில ஜன்மாக்களில் புருஷனாகவும் சில ஜன்மாக்களில் ஸ்திரீயாகவும் மற்றும் பலவாருகவும் வேஷம் தரித்து அந்தந்த வேஷத்திற்குரிய நடை உடை பாவனைகளுடன் இருந்துவருகிறுன். அப்படியிருந்துங்கூட, தான் சேதனன், ஜடமில்லை, தான் நித்யன் தனக்கு நாசமில்லை, தான் ஆனந்தஸ்வரூபி தனக்கு துக்கம் ஸ்வரூபமில்லை, தான அறிகிறவன் அறியப்படும் பதார்த்தமில்லை, தான் நியமனம் செய்கிறவன் நியமனம் செய்யப்படும் பதார்த்தமில்லை என்பதை எல்லாம் மறந்துவிட்டான் என்பது கிடையாது. தன்னுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தின் ஞானம் உள்ளூரயிருந்துகொண்டேதான் இருக்கிறது என்று தாத்பர்யம். அதாவது தான் ஜடமான சரீரத்தைவிட வேறு என்கிற அறிவு மங்கலாமேதவிர இல்லாமலே போய்விடாது. சரீராதிகளில் ஏற்படும் பால்யம், யௌவனம், ஜரை, வியாதி. ஆரோக்கியம் முதலிய யாவற்றையும் பார்த்துக் கொண்டு, தான் எவ்வித மாறுதலையுமடையாமல் ஒரே நிலையில் எல்லா ஸமயங்களிலும், ஜாக்கிரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி முதலிய அவஸ்தைகளிலும், "நான், நான்" என்று ஒரே மாதிரியாக இருந்துவருவதே ஆத்மா, தன் முன்பு நடக்கும் வியவஹாரங்களை பார்த்துக்கொண்டு அவைகளில் ஸம்பந்தப்படாமல் உதாஸீனமாயிருக்கும் ஸாக்ஷியைப் போலவே ஆத்மா இருந்துவருகிறார் என்கிறார்.

(8)

இவ்விதம் ஆத்மா தேஹாதிகளை நியமனம் செய்கிறவர், அவைகளிலிருந்து வேறுபட்டவர், என்ற அறிவு அனுபவத்திலேயே ஏற்படத்தகுந்தது என்றுல், ஆத்ம தத்வத்தை எடுத்து சொல்வதற்கு வேதம் எதற்காக? அந்த வேதமும் தான் பலவிதமாகச் சொல்வதற்கு என்ன காரணம்? என்று கேட்கலாம். இவ்வறிவு ஏற்படவேண்டியது நியாயமாயிருந்தும், ஏற்படாமலிருப்பதற்கு காரணம் மூடத்தனம் என்று முன்னமேயே சொல்லப்பட்டது. அந்த மூடத்தனம் இருக்கும்வரை தானுகவே

தத்வத்தை அறிந்துகொள்ள முடியாது. உலகத்தில் ஏதாவது பதார்த்தத்தின் அறிவு ஏற்படவேண்டுமானால், ஸாமான்யமாக கண் காது முதலிய ஞானேந்திரியங்கள் மூலமாகவே ஏற்படுகிறது. சில ஸமயங்களில் அவ்விந்திரியங்களால் கிரஹிக்கப்பட்ட அறிவை உபயோகித்து அதிலிருந்து அனுமானத்தினால் ஊஹிக்கக் கூடிய சில விஷயங்களையும் அறிந்துகொள்ள முடிகிறது. ஆத்ம தத்வமோ அதிஸூக்ஷ்மமாயிருப்பதினால் இந்திரியங்களால் பிரத்யக்ஷமாய் அறியவோ மனஸினால் அனுமானத்தினால் அறியவோ முடியாத பதார்த்தமாயிருப்பதால், அதை அறிவிக்க எவ்வித தோஷமுமற்ற உத்தமமான பிரமாணமாகிய வேதந்தான் வேண்டியிருக்கிறது. மூடத்தனத்தை நிவிருத்தி செய்து கொடுப்பதே அதன் உத்தேசமாயிருப்பதிஞல், அந்த மூடத்தனம் தாரதம்யத்துடன் பலவகையாயிருப்பதை உத்தேசித்து அதை நிவிருத்தி செய்யக்கூடிய உபாயங்களும் பலவிதமாகவே இருக்க வேண்டியிருக்கிறது. இந்தக் காரணத்தினலேயே வேதம் ஆத்ம ஸ்வரூபத்தை பலவாருக எடுத்துச்சொல்கிறது. அவரவர் களுகது யுக்தமாய் தோன்றும் உபாயத்தைக் கைப்பற்றிக்கொண்டு எல்லோருமே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தையடைய வேண்டுமென்ற ஒரே எண்ணத்துடன் வேதம் மிகக்கருணையுடன் பல உபாயங்களை உபதேசிக்கிறது. பசி தீர்ந்து திருப்தி ஏற்பட வேண்டியதென்பது ஒரே நோக்கமாயிருந்தபோதிலும், வந்திருக்கும் விருந்தினர் களுக்கு ருசிககக்கூடிய பலவித பதார்த்தங்களை தயாரித்து விருந்தளிக்கிறதில்லையா ? குழந்தை அழுதுகொண்டிருந்தால் அழுவதை நிறுத்தி அது சாந்தமாயிருக்க வேண்டுமென்ற கருத்து ஒன்ருகவே இருந்தபோதிலும் அக்குழந்தைக்கு பலவித பழங்களை யும் பக்ஷணங்களையும் கொடுத்துப் பார்ப்பதில்லையா ? ஒரு குழந்தைக்கு திராக்ஷைப்பழம் கொடுத்து அழுகையை நிறுத்த முடிந்தாலும், வேறு குழந்தை அப்பழத்தினால் திருப்தியடையாமல் இருந்தால் மாம்பழம் கொடுத்துப் பார்ப்பதில்லையா ? அதுபோலத் தான் வேதம் பலவிதமாகச் சொல்லி அறிவையுண்டுபண்ணப் பார்க்கிறது என்று ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிருர்—

यद्वद् बालं रोदमानं चिरतरसमयं शान्तिमानेतुमग्रे
द्राक्षं खार्जूरमाम्रं सुकदलमथवा योजयत्यम्बिकाऽस्मै ।
तद्वत् चेतोऽतिमूढं बहुजननभवात् मौढ्यसंस्कारयोगात्
बोधोपायैरनेकैरवसदुपनिषद् बोधयामास सम्यक् ॥ ६ ॥

चिरतर-समयं-வெகு நாழிகையாக रोदमानं - அழுது கொண்டிருக்கிற स्वे-தன்னுடைய बाले-குழந்தைக்கு शान्ति-சாந்தியை (அழுவதின் நிறுத்தலை) आनेतुं-ஏற்படுத்துவதற்காக अस्य - அக்குழந்தையின் अम्बिका-தாயார் अग्रे-அதன் முன்னால் द्राक्षं-திராக்ஷைப்பழம், खार्जूरं-பேரீச்சம்பழம், आम्रं மாம்பழம், अथवा - அல்லது, सुकदलीं-நல்ல வாழைப்பழம் இவைகளை योजयति-கொடுப்பாள். तद्वत्-அதைப்போலவே, बहु-जनन-भवात् அநேக-ஜன்மாக்களில்-ஏற்பட்டிருக்கும் मौढ्य-संस्कार-योगात्-மூடத்தனத்திலேயே பழகிவந்ததினால் ஏற்பட்டிருக்கும் ஸம்ஸ்காரத்தின்-சேர்க்கையினால் अतिमूढं-வெகு மூடமாயும், अवशं-ஸ்வாதீனமற்றுமிருக்கும் चेतः-புத்தியை उपनिषत्-உபநிஷத்தானது अनेकैः-பல बोध-उपायैः-அறிவுண்டு பண்ணக்கூடிய-உபாயங்களால் सम्यक्-நன்றாக बोधयामास-அறிவூட்டுகிறது.

(9)

ஆத்மா எவருக்கும் அத்யந்தப் பிரீதிக்கு விஷயமானதினால் அதன் ஸாக்ஷாத்காரம் எப்படியும் அடையவேண்டுமென்பதற்கு உள்ள பிருஹதாரண்யக உபநிஷத் வாக்கியங்களின் தாத்பர்யத்தை இரண்டு சுலோகங்களால் எடுத்துச்சொல்கிறார் —

यत्प्रीत्या प्रीतिपात्रं तनुयुवतितनूजार्थमुख्यं स तस्मात्
प्रेयानात्माऽथ शोकास्पदमितरदतः प्रेय एतत् कथं स्यात् ।
भार्याद्यं जीवितार्थी वितरति च वपुः स्वात्मनः श्रेय इच्छन्
तस्मादात्मानमेव प्रियमधिकमुपासीत विद्वान् न चान्यत् ॥

यत् प्रीत्या-எதினிடத்தில் பிரீதியிருப்பதினால் तनु-युवति-तनूजं-अर्थ-मुख्यं-சரீரம்-பார்யை-புத்திரன்-சொத்து முதலியவை प्रीति-पात्रं-பிரீதிக்கு-விஷயமாக இருக்கின்றனவோ, सः-அந்த आत्मा-ஆத்மாவானது तस्मात् (சரீரம், பார்யை முதலிய) அவைகளைவிட प्रेयान्-அதிகப் பிரியமான வஸ்து. अथ-மேலும், इतरत्-(ஆத்மாவைத் தவிர) வேறாயுள்ளது. शोक-आस्पदं-சோகத்திற்கே-

காரணம். अतः–ஆகையால் एतत्-(வேருயுள்ள) இது प्रेयः–பிரியமானதாக कथं–எப்படி स्यात् – இருக்கமுடியும்? जीवित - अर्थी–பிழைத்திருக்க - விரும்புகிறவன் भार्या-आद्यं-பார்யை-முதலானவைகளை वितरति கொடுத்துவிடுகிறுன் (தியாகம் செய்துவிடுகிறுன்) स्व - आत्मनः–தன்னுடைய ஆத்மாவின் श्रेयः–க்ஷேமத்தை इच्छन् – விரும்புகிறவன் वपुः च – சரீரத்தைக்கூட (தியாகம் செய்துவிடுகிறுன்). तस्मात्–ஆகையால் विद्वान्–அறிவுள்ளவன் आत्मानं–ஆத்மாவை एव–தான் अग्र्यं–மேலான प्रियं – பிரியமான வஸ்துவாக उपासीत – உபாஸிக்கவேண்டும். (தேடியடையவேண்டும்). अन्यत्–வேறு எதையும் न च–உபாஸிக்கக்கூடாது.

ஓரிடத்தில் தீபம் பிரகாசித்துக் கொண்டிருக்கையில் அந்த தீபத்திற்கு எவ்வளவுக்கெவ்வளவு ஸமீபத்தில் பதார்த்தமிருக்கிறதோ அவ்வளவுககவ்வளவு அதிகமாக பிரகாசிக்கிறதென்பதையும், தூரம் போகப்போக பிரகாசம் குறைகிறதென்பதையும், பார்த்திருக்கிறோம். அப்படியே ஆத்மாவிடம் நெருங்க நெருங்க பதார்த்தங்களில பிரீதி அதிகமாவதையும், ஆத்மாவிடமிருந்து தள்ளிப் போகப் போக பிரீதி குறைவதையும் கவனித்தால், ஆத்மாதான் அத்யந்தப் பிரீதிக்கு விஷயம் என்று தெரியவரும் என்கிறார். ஆத்மாவிற்கு மிகவும் நெருங்கியது சரீரம்; அதில் பிரீதி ஏற்படுகிறது; அந்த சரீரத்திற்கு அனுகூலமாயிருப்பதினுல் பார்யையிடத்தில் ப்ரீதி; தனககும் பாரயைக்கும் பிரீதியுண்டு பண்ணுவதால் குழந்தையிடததில் பிரீதி; எல்லோருக்கும் ஸுக ஸாதனமாயிருப்பதினுல் சொத்தில் பிரீதி; அந்த சொத்து ஸம்பாதிக்க ஸாதனமாயிருப்பதினுல் உத்தியோகம் முதலானதில் பிரீதி. இவ்விதமாக ஆத்மாவைத்தவிர மற்ற பதார்த்தங்கள் எல்லாம் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ ஆத்மாவிற்கு ஸுகஸாதனமாயிருப்பதினுலேயே பிரீதிக்கு விஷயமாகின்றன. ஆகையால் அத்யந்த பிரீதி விஷயம் ஆத்மாதான் என்று ஏற்படுகிறது.

இதுவும் தவிர, தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு பார்யை முதலானவைகளை பரித்யாகம் செய்யவேண்டி வந்தால் பரித்யாகமே செய்துவிடுகிறுன்; தனக்கு அனுகூலமில்லாமல்

பிரதிகூலமாயிருந்தாலும் பரித்யாகம் செய்துவிடுகிறுன். தன் ஆத்மா நல்ல கதியடைய வேண்டுமென்ற எண்ணத்துடன் பிரயாகை முதலான இடங்களில் அல்லது யுத்தகளத்தில் சரீரத்தைக்கூட தியாகம் செய்துவிடுகிறுன். சரீரம் துக்கத்தையே கொடுக்கிறதென்ற எண்ணம் வந்து அதைத்தொலைத்துவிட்டால் ஸௌக்கியமடையலாமென்ற மோஹத்திஞல் தற்கொலைகூட செய்துகொள்வதில்லையா? இவைகளிலிருந்தும் மிகவும் பிரியமான வஸ்து ஆத்மாதான் என்று நன்ருய்த் தெரிகிறது. மற்ற வஸ்துக்கள் பலவிதமான துன்பங்களையே உண்டுபண்ணுவதால், அவைகளில் பிரீதி வைப்பது நியாயமில்லை.

(10)

அவை ஏதேனும் ஒரு ஸமயத்தில் ஸுகம் கொடுப்பதாகத் தோன்றிப் பிரியப்படக்கூடியதாயிருந்தாலும், அதுவே வேறு ஸமயங்களில் துக்கத்தைக கொடுப்பதிஞல் பிரியமில்லாததாக ஆகிவிடும். ஆத்மா மாத்திரம் எப்பொழுதும் பிரியமாகவிருக்கும் வஸ்து என்பதை அடுத்த சுலோகத்தில் விளக்குகிருர்—

यस्माद् यावत् सुखं स्यादिह हि विषयतः तावदस्मिन् प्रियत्वं
यावद् दुःखं च यस्माद् भवति खलु ततः तावदेवाप्रियत्वम् ।
नैकस्मिन् सर्वकालेऽस्त्युभयमपि कदाऽप्यप्रियोऽपि प्रियः स्यात्
प्रेयानप्यप्रियो वा सततमपि ततः प्रेय आत्माख्यवस्तु ॥ १० ॥

यस्मात्-எந்த विषयतः-விஷயத்திலிருந்து यावत्-எதுவரை (எவ்வளவு) सुखं ஸுகமானது इह-இங்கே स्यात्-ஏற்படுமோ, अस्मिन्-இதில (அந்த விஷயத்தில்) तावत्-அதுவரை (அவ்வளவு) प्रियत्वं-பிரியமாயிருக்கும் தன்மையும, यस्मात्-எதிலிருந்து यावत्-எதுவரை (எவ்வளவு) दुःखं च-துக்கமும் भवति-ஏற்படுகிறதோ, ततः-அதில் तावत् एव-அதுவரை (அவ்வளவு) தான் अप्रियत्वं-அபபிரியமாயிருக்கும் தனமையும், हि खलु-உண்டென்பது பிரஸித்தமலலவா? एकस्मिन्-ஒரே விஷயததில் सर्वकाले-எல்லா ஸமயத்திலும் अपि-கூட उभयं-இரண்டும (பிரியமாயிருக்கும் தன்மையும் அப்பிரியமாயிருக்கும்

தன்மையும்) न अस्ति – இருப்பதில்லை. अप्रियः अपि– அப்பிரியமாயிருக்கும் வஸ்துகூட कदापि–ஏதோவொரு ஸமயத்தில் प्रियः – பிரியமாக स्यात् – இருக்கலாம்; (அப்படியே). प्रेयान् अपि–மிகவும் பிரியமான வஸ்துகூட (வேறு ஸமயத்தில்) अप्रियः वा–அப்பிரியமாகவும் (ஆகலாம்). ततः–ஆகையால் आत्माख्य - वस्तु – ஆத்மா வென்று சொல்லப்படும் வஸ்து (ஒன்றுதான்) सततं अपि– எப்பொழுதும் (இடைவிடாமல்) प्रेयः–மிகவும் பிரியமா யிருக்கும் வஸ்து.

(11)

அத்யந்தப் பிரியமாயிருக்கும் ஆத்மாவை ஸாக்ஷாத்காரம் செய்தால்தான் பரமபுருஷார்த்தமான மோக்ஷமென்ற நிரதிசய மான ஆனந்தநிலை கிடைக்கும். ஸகல துக்கங்களும் விலகும். அப்படிக்கன்னியில் பிரியமாய்த் தோன்றும் மற்ற வஸ்துக்களை ஸம்பாதனம் செய்வதினால் ஸ்திரமான ஸுகம் கிடைக்காது என்பது மாத்திரமில்லை, துக்கம் விலகாது என்பது மாத்திரமும் இல்லை; மேலுக்குமேல் துக்கமேதான் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். ஆகையால் விஷயமறியாதவர்கள்தான் அவ்வஸ்துக்களை விரும்பு வார்கள்; விஷயமறிந்தவர்கள் ஆத்மஸ்வரூபத்தையே அறிய விரும்புவார்கள். இவ்விஷயம் காடகோபநிஷத்திலும் சொல்லப் பட்டிருக்கிறதென்று எடுத்துக்காட்டுகிறார்—

श्रेयः प्रेयश्च लोके द्विविधमभिहितं काम्यमात्यन्तिकं च
काम्यं दुःखैकबीजं क्षणलवविरसं तच्चिकीर्षन्ति मन्दाः ।
ब्रह्मैवात्यन्तिकं यत् निरतिशयसुखस्यास्पदं संश्रयन्ते
तत्त्वज्ञाः तच्च काठोपनिषदभिहितं षड्विधायां च वल्ल्याम् ॥

श्रेयः–சிரேயஸ் (சிலாக்கியமானது) प्रेयः च–பிரேயஸ் (மிகவும் பிரியமானது) என்றும் लोके–உலகத்தில் द्विविध– இரண்டு விதமாக, अभिहितं சொல்லப்படுகிறது, அதாவது काम्यं–ஆசைப்படும் வஸ்து आत्यन्तिकं च–எல்லையற்றது (எதற்குமேல் எதுவும் கிடையாதோ அந்த உத்தமமான வஸ்து) என்றும் काम्यं–ஆசைப்படும் வஸ்து दुःखैक-बीजं– துக்கத்திற்கே - விதை (காரணம்), क्षणलव-विरसं – ஒரு

க்ஷணத்தின் அம்சத்திலேயே ரஸமற்று போகக் கூடியது. तत्–அதை मन्दाः – அறிவில்லாதவர்களே चिकीर्षन्ति–ஸம்பாதிக்க விரும்புவார்கள். आत्यन्तिकं- எல்லையற்றது என்பது यत्–எது निरतिशय-सुखस्य–எதற்கு மேல் கிடையாதோ–அவ்வித ஸுகத்திற்கு आस्पदं இருப்பிடமான ब्रह्म एव – பிரஹ்மமேதான். (அதை) तत्त्वज्ञाः–தத்வமறிந்தவர்கள் संश्रयन्ते–நன்கு ஆசிரயிக் கிறார்கள். तत् च – அதுவும் षष्ठियाथां - ஆறுவிகமான वल्ल्यां–வல்லியில் च–கூட काठोपनिषत् - अभिहितं–காடகோப நிஷத்திறல் சொல்லப்பட்டிருக்கிறது.

द्विविधं இந்த பதத்தையே, சிரேய்ஸ் இரண்டுவிதம் (பலனை உத்தேசித்து செய்யப்படுவது, மோக்ஷத்தையுத்தேசித்து செய்யப் படுவது), பிரேயஸ்ஸும் இரண்டுவிதம் (பார்யை புத்திராதிகள், மோக்ஷம்) என்று சிலர் அர்த்தம் செய்கிறார்கள். அவ்விதம் அர்த்தம்செய்ய காடகோபநிஷத்தில் பிரமாணமில்லை. அங்கே

अन्यत श्रेयोऽन्यदुतैव प्रेयः ते उभे नानार्थे पुरुषं सिनीतः ।
तयो श्रेय आददानस्य साधु भवति हीयतेऽर्थाद्य उ प्रेयो वृणीते ॥
II-1

श्रेयश्च प्रेयश्च मनुष्यमेतः तौ संपरीत्य विविनक्ति धीरः ।
श्रेयो हि धीरोऽभिप्रेयसो वृणीते प्रेयो मन्दो योगक्षेमाद्व वृणीते ॥
II-2

சிரேயஸ் பிரேயஸ் என்றே இரண்டாகப் பிரித்துக்காட்டியிருக் கிறது. பின்னல் காம்யம் ஆத்யந்திகம் என்கிற சப்தங்களை "முறையே" என்று எடுத்துக்கொள்ளக் கூடாது; சிரேயஸ் என்பது ஆத்யந்திகம்; பிரேயஸ் என்பது காம்யம்.

दुःखैकबीजं காம்ய பதார்த்தங்கள் ஸம்பாதிக்கிற காலத் திலும் துக்கத்தையே கொடுக்கிறது, அனுபவ காலத்திலும் துக்கமே, விலகிவிட்டால் அதைவிட துக்கம். ஆசைப்படும் போது நல்லதாகத் தோன்றினபோதிலும் அனுபவிக்கும்போதே அல்லது அனுபவித்த பிறகு அதிலுள்ள ருசிபோய் வெறுக்கத் தக்கதாகவே தெரியவரும். இத்தன்மையை நன்கு உணராமல் நல்லதாகத் தோன்றுகிறதென்பதினல் மோஹங்கொண்டு அதில்

ஆசையேற்படுகிறது. அதிலேயே அவ்விதம் ஆசைப்படுகிற வர்களை 'மந்தர்கள்' என்கிறார் ஆசார்யார்.

तत्त्वज्ञाः வஸ்துக்களின் த்த்வத்தை நன்கு அறிந்தவர்கள் அவ்வித ஆசைக்கு இடங்கொடுக்காமல் சாசுவதமாயுள்ள ஆனந்த ஸ்வரூபமான பிரஹ்மத்தன்மையேயடைய விரும்புவார்கள்.

(12)

அவ்விதம் நிரதிசய-ஆனந்த ஸ்வரூபத்தை அறிந்து அடைய விரும்புகிறவர்களுடைய அனுபவமும் மேன்மையும் எப்படியிருக்கும் என்று இரண்டு சுலோகங்களில் வர்ணிக்கிறார்—

आत्माम्भोधेस्तरङ्गोऽस्म्यहमिति गमने भावयन् आसनस्थः
संवित्सूत्रानुविद्धो मणिरहमिति वाऽस्मीन्द्रियार्थप्रतीतौ ।
दृष्टोऽस्म्यात्मावलोकादिति शयनविधौ मग्न आनन्दसिन्धौ
अन्तर्निष्ठो मुमुक्षुः स खलु तनुभृतां यो नयत्येवमायुः ॥ २ ॥

गमने-நடக்கும்போது अहं-நான் आत्म-अम्भोधेः ஆத்மாவாகிற-ஸமுத்திரத்தின் तरङ्गः-அலையாக अस्मि-இருக்கிறேன் इति-என்றும், आसन-स्थः-ஆஸனத்தில்-இருக்கும்போது संवित-सूत्र-अनुविद्धः-சைதன்யமாகிற-கயிற்றில்-கோர்க்கப்பட்டிருக்கும் मणिः-ரத்தினமாக अहं-நான் अस्मि-இருக்கிறேன் इति वा-என்றும், इन्द्रिय-अर्थ-प्रतीतौ-இந்திரியங்களுடைய-விஷயங்கள்-தென்படும்போது आत्म अवलोकात्-ஆத்மா தென்படுவதினால் दृष्टः-ஆத்மாவை பார்த்துவிட்டவனாக अस्मि-இருக்கிறேன் इति-என்றும், शयन-विधौ-படுத்துக்கொண்டிருக்கும்போது आनन्द-सिन्धौ-ஆனந்தக் கடலில் मग्नः-மூழ்கியிருக்கிறேன் என்றும், (பாவித்துக்கொண்டு) तनुभृतां-மனிதர்களுக்குள் यः-எவர், एवं-இவ்விதமாக, आयुः-தன் வாழ்நாளை, नयति-செலுத்துகிறாரோ, सः-அந்த, मुमुक्षुः-மோக்ஷத்தை விரும்புகிறவர், अन्तर्निष्ठः-உள்ளேயே (ஆத்மாவிலேயே) நிலைத்திருப்பவர், खलु-என்பது பிரஸித்தம்.

தான் நடந்தாலும், உட்கார்ந்திருந்தாலும், பார்த்துக் கொண்டிருந்தாலும், படுத்துக்கொண்டிருந்தாலும், எந்த ஸமயத்திலும் இடைவிடாமல் ஆத்ம தத்வத்தையே அனுஸந்தானம் செய்துகொண்டிருப்பார் முமுக்ஷுவாயிருப்பவர்.

(13.)

அவர் வெளிப்பார்வையுள்ளவராய் ஜகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவருடைய அனுஸந்தானம் எவ்வகையாக இருக்குமென்று அடுத்த சுலோகத்தில் சொல்கிறார் —

वैराजव्यष्टिरूपं जगदखिलमिदं नामरूपात्मकं स्यात्
अन्तःस्थप्राणमुख्यात् प्रचलति च पुनर्वेत्ति सर्वान् पदार्थान् ।
नायं कर्ता न भोक्ता सवितृवदिति यो ज्ञानविज्ञानपूर्णः
साक्षादित्थं विजानन् व्यवहरति परात्मानुसन्धानपूर्वम् ॥

नाम-रूप-आत्मकं-பெயர்-உருவம்-இவைகளையே ஸ்வரூபமாயுடைய इदं-இந்த जगत्-உலகம் अखिलं-பூராவும் वैराज व्यष्टिरूपं-விராட்டைச் சேர்ந்ததாயும் (ஸமஷ்டியாயும்) வியஷ்டியாயும் இருக்கும் தன்மையுடையதாக स्यात्-இருக்கும். (அந்த ஜகத்) अन्तःस्थ प्राण-मुख्यात्-உள்ளே இருக்கும் பிராணன் முதலானதினால் प्रचलति-சேஷ்டிக்கிறது. (உள்ளே சைதன்யமிருப்பதினாலேயே) सर्वान्-எல்லா पदार्थान्-பதார்த்தங்களையும் पुनः-கூட वेत्ति-அறிந்தும்கொள்கிறது. "अयं-இது (அந்த சைதன்யம்) कर्ता-(கர்மாக்களை) செய்பவர் न-அல்ல; भोक्ता-(கர்ம பலன்களை) அனுபவிப்பவரும் न-அல்ல; (அவர்) सवितृवत्-ஸூர்யனைப்போல" इति-என்று ज्ञान-विज्ञान-पूर्णः-(சாஸ்திர ஆசார்யோபதேசத்தினால் ஏற்பட்ட) ஞானம்-(அதை அப்யாஸம் செய்கதினால் ஏற்பட்ட) அனுபவம்-இவை நிறைந்தவராகவிருந்து इत्थं-இவ்விதம் साक्षात्-நேரில் विजानन्-அறிந்து यः-எவர் (இருக்கிறரோ), (அவர்) पर-आत्म-अनुसन्धान-पूर्वं-மேலான-ஆத்ம ஸ்வரூபத்தின்-அனுஸந்தானத்தை-முன்னிட்டுக்கொண்டே (உலகத்தில்) व्यवहरति-வியவஹாரம் செய்வார்.

वैराज-व्यष्टि-रूप — பல மரங்களிருக்கும் இடத்தை பொதுவாக தோப்பு, வனம், என்பார்கள். எல்லாவற்றையும் சேர்த்துப் பார்க்காமல் தனித்தனி மரமாகப் பார்க்கும்போது தோப்பு, வனம் என்று சொல்வதில்லை. எல்லாவற்றையும் சேர்த்து ஒன்ருக பார்ப்பதை ஸமஷ்டி என்றும், தனித்தனியாக பார்க்கப் படுவதை வியஷ்டி என்றும் சொல்வார்கள். வீடு என்பது ஸமஷ்டி; சுவர், உத்திரம், தூண் என்ருல் வியஷ்டி. சுவர் என்ருல் ஸமஷ்டி; செங்கல்கள் என்ருல் வியஷ்டி. இவ்விதமே உலகம் பூராவையும் ஒன்ருக்க் கருதும்போது ஸமஷ்டியாகும். அதிலுள்ள ஜீவர்களேயோ பதார்த்தங்களேயோ தனித்தனி கவனித்தால் வியஷ்டியாகும். ஆகையால் உலகத்தை ஸமஷ்டியாகவும் பார்க்கலாம், வியஷ்டியாகவும் பார்க்கலாம். ஸ்தூலமான உலகத்தைப் பூராவும் தன் சரீரமாகக்கொண்டு அதில் 'நான்' என்று அபிமானம் வைத்துக்கொண்டிருக்கும் சைதன்யத்தை 'விராட்' என்பார்கள். அவரைச் சேர்ந்ததாக ஸமஷ்டி பிரபஞ்சமிருப்பதினுல் ஸ்வராஜம் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது. ஸமஷ்டியாஞலும் வியஷ்டியாஞலும் அவைகளை சேஷ்டிக்கும்படிச் செய்யும் சைதன்யம் ஒன்றே. ஆஞலும், அவைகளுக்குள் வியவஹார தசையில் பெயர்கள் வெவ்வேறு, உருவங்கள் வெவ்வேறு என்பதை नामरूपात्मकं "பெயர் உருவம் இவைகளை ஸ்வரூபமாயுடைய" என்ற பதம் தெளிவுபடுத்து கிறது.

अन्तस्स्थ प्राणमुख्यात् ஸமஷ்டியாகவோ வியஷ்டியாகவோ உலகத்தை சேஷ்டிக்கும்படிச் செய்வதற்கு கிரியா சக்தி வேண்டியிருப்பதால் அதற்கு பிராதான்யம் கொடுத்து "பிராணன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. வாஸ்தவத்தில் கிரியா சக்தி, ஞான சக்தி இரண்டுமே சைதன்யத்தைச் சேர்ந்தது. அந்த ஞான சக்தியை உபயோகித்துக்கொண்டு वेत्ति सर्वान् पदार्थान् எல்லா பதார்த்தங்களேயும் அறிகிறது என்று மேலால் சொல்லப் படுகிறது.

சேஷ்டிக்கச் செய்வதினுல் சைதன்யத்திற்கு 'செய்கிறவர்' என்ற தன்மை ஏற்படுமோவென்ருல், கிடையாது என்கிருர் नायं कर्ता என்ற வார்த்தைகளால். ஸூர்யன் உதயமாஞல் ஜனங்கள் எழுந்திருந்து அவரவர்கள் காரியங்களைச் செய் கிருர்கள். இதற்காக, இவர்கள் செய்யும் காரியங்களைச் செய் யும்படி ஸூர்யன் ஏவிஞர் என்று ஆகாது. அப்படியே, சைதன்ய

மிருப்பதினுல்தான் மனஸிற்கு ஸுக துக்கங்களை அனுபவிக்க முடிகிறது, அதினுல் இவ்வனுபவங்கள் சைதன்யத்தினுடைய தாக ஆகாது என்பதை न भोक्ता என்று சொல்கிறுர். ஸூர்யன் தானிருப்பதினுலும் பிரகாசிப்பதினுலும் ஜீவர்களை சேஷ்டிக்கும் படிக்கும் அனுபவிக்கும்படிக்கும் செய்தபோதிலும், அந்த சேஷ்டையாவது அனுபவமாவது எப்படி வாஸ்தவத்தில் ஸூர்ய னிடம் ஸம்பந்தப்பட்டு பாதிக்காதோ, அதேமாதிரி சைதன்யம் இருந்துகொண்டு அறிவு ஸ்வருபமாயிருப்பதினுல் உலகத்தில் ஸகல வியாபாரங்களும் ஸகலவித அனுபவங்களும் ஏற்பட்ட போதிலும், இவை யாதொன்றும் அந்த சைதன்யத்தினிடம் ஸம்பந்தித்து பாதிக்காது என்பதை விளக்குவதற்காக सवितृवत् ஸூர்யனைப்போல என்று திருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருக் கிறது. இவ்விதம் உலகத்தில் ஏற்படும் எல்லா வியவஹாரங் களையும் அனுபவங்களையும் பார்த்துக்கொண்டிருந்தபோதிலும், அவைகளில் ஸம்பந்தப்படாமல் அவைகளால் பாதிக்கப்படாமல் எப்பொழுதும் ஆத்ம தத்வத்தை அனுஸந்தானம் செய்துகொண் டிருப்பவரே ஞானியாவார் என்று சுலோகத்தின் தாத்பர்யம்.

(14)

அவ்வித ஞானமேற்படுவதற்கு முக்கிய ஸாதனமாகிய வைராக்யம் இரண்டுவிதமென்று எடுத்துக்காட்டுகிறுர் —

नैर्वेद्यं ज्ञानगर्भं द्विविधमभिहितं तत्र वैराग्यमाद्यं
प्रायो दुःखावलोकात् भवति गृहसुहृत्पुत्रवित्तैषणादेः ।
अन्यत् ज्ञानोपदेशात् यदुदितविषये वान्तवत् हेयता स्यात्
प्रव्रज्याऽपि द्विधा स्यात् नियमितमनसां देहतो गेहतश्च ॥

तत्र-அதில் (ஞானமேற்படவேண்டிய விஷயத்தில்) वैराग्यं- ஆசையற்றிருப்பது नैर्वेद्यं-வெறுப்பினுல் ஏற்படுவது, ज्ञान-गर्भं-ஞானத்தை-உள்ளேயுடையது, என்று द्विविधं- இரண்டுவிதமாக अभिहितं-சொல்லப்பட்டிருக்கிறது. आद्यं- முதலாவது (வெறுப்பினுல் ஏற்படும் வைராக்யம்) गृह-सुहृत्-पुत्र-वित्त-एषणादेः-வீடு-நண்பர்-புத்திரன்-சொத்து- இவைகளிலுள்ள ஆசைமுதலானதுகளால் दुःख-अवलोकात्- துக்கம் ஏற்படுகிறதென்பதை-பார்ப்பதினுல்தான் प्रायः- அநேகமாய் भवति-உண்டாகிறது. अन्यत् -மற்ருென்று

(ஞானத்தையுள்ளே உடையது) यत्-எது उदित-विषये-முன்சொன்ன (வீடு முதலிய)-விஷயத்தில், वान्तवत्-வாயிலெடுத்ததில் போல, हेयता-தள்ளிவிட வேண்டிய தென்ற எண்ணமாக स्यात्-இருக்குமோ (அது) ज्ञान-उपदेशात्-ஞான-உபதேசத்தினுல (உண்டாகிறது). (அதே மாதிரி) प्रव्रज्या-புறப்படுதல (ஸன்னியாஸம்) अपि-கூட நியமित-मनसां-நன்கு கட்டுப்படுத்தப்பட்ட-மனஸுள்ளவர்களுக்கு देहत:-சரீரத்திலிருந்து என்றும் गेहत: च-வீட்டிலிருந்து எனறும் द्विधा-இரண்டு விதமாக स्यात्-இருக்கும்.

ஒரு பதார்த்தத்தில் ஆசை ஏற்பட வேண்டுமானுல், அப் பதார்த்தம் நல்லது, அனுகூலமானது, ஸுகத்தைக் கொடுகக் கூடியது என்கிற எண்ணமிருந்தால்தான் ஏற்படும். உலகத்தில் ஒரு பதார்த்தமும் பூராவும் நல்லது, எப்பொழுதும் ஸுகத்தையே கொடுக்கும் என்பது கிடையாதென்று முன் 10வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. ஆகையால் எல்லா பதார்த்தங்களிலும் நல்லதுடன் கெட்டதும், அனுகூலத்துடன் பிரதிகூலமும், ஸுகத் துடன் துக்கத்தைக் கொடுக்கும் அம்சமும் கலந்துதான் இருக்கும். அவைகளிலுள்ள நல்ல அம்சத்திற்கு பிராதான்யம் கொடுக்காமல் கெட்ட அம்சத்திற்கு பிராதான்யம் கொடுத்தால் அவைகளில் உள்ள ஆசை தானுகவே குறையும். கிருஹம், ஸ்திரீ, புத்திராதி களினுல் பலவிதமாக துக்கமேற்படுகிறதெனபது யாவராலும் அனுபவத்தில் தெரிந்துகொண்ட விஷயமே. அந்த துக்கத்தை நினைத்துப் பார்த்து அவைகளில் ஆசையை விடுவது निर्वेदं வெறுப்பினுல் ஏற்படும் வைராக்கியமாகும். ஸாதாரணமாக உலகத்தில் முதலில் வைராக்கியமேற்படுவது இம்முறையில்தான் என்பதை प्राय: (அநேகமாய்) என்ற பதத்தினுல் குறிக்கிருர்.

இவ்வித வைராக்கியமேற்பட்டு பெரியோர்களை அண்டி சாஸ்திரங்களையும் அப்பெரியோர்களின் உபதேச மொழிகளையும் கேட்கக் கேட்க, அப்பதார்த்தத்தின் ஸ்வரூபத்தை பரிசீலனம் செய்து பார்க்கும்போது, அதில் ஏதோ கொஞ்சம் நல்ல அம்சம் இருப்பதாகத் தோன்றினதும் வாஸ்தவமில்லையென்றும், அப் பதார்த்தமே வாஸ்தவமில்லாத வெறும் தோற்றமே தவிர வேறில்லையென்றும் தெரியவரும். அப்பொழுது அப்பதார்த்தத்தில்

விருப்பமும் இருக்காது, வெறுப்பும் இருக்காது. அந்த நிலையை वान्तवत् ஞானத்தையுள்ளேயுடைய வைராக்கியமென்று சொல்லியிருக்கிறார். அப்பொழுது வாஸ்தவத்தில் வெறுப்பு இல்லையானாலும், கொஞ்சம்கூட விருப்பமில்லாததினால் அப் பதார்த்தமும் தள்ளுபடிசெய்ய வேண்டியதிலேயே சேரும். தள்ளுபடிசெய்ய வேண்டியதென்ற அம்சத்தில் மாத்திரம் திருஷ் டாந்தமாக वान्तवत् (வாயிலெடுத்ததுபோல) என்று சொல்லப் பட்டிருக்கிறது. வாயிலெடுத்தது என்று பொதுவாய் சொல்லி யிருப்பதினால், தான் வாயிலெடுத்ததையும் எடுத்துக்கொள்ள லாம், வேறு யாரேனும் வாயிலெடுத்ததையும் எடுத்துக்கொள்ள லாம். தான் வாயிலெடுத்ததுதானே என்று அதை மறுபடியும் எடுத்து சாப்பிடுவது கிடையாது. அதுபோல, தான் அனுபவித்து வந்த விஷயங்களை பிரதிகூலமென்றோ ஸாரமற்றதென்றோ விலக்கிவிட்ட பிறகு மறுபடியும் அவைகளை விரும்புவது கொஞ்ச மேனும் நியாயமில்லை. பெரியோர்கள் பிரதிகூலமென்றோ ஸார மற்றதென்றோ விலக்கிவிட்டு நம்மையும் விலக்கிவிடச் சொல்லும் போது, நாம் அதை எடுத்துக்கொண்டோமேயானால், வேறொருவர் வாயிலெடுத்ததை உட்கொள்வதுபோலவே ஆகும்.

प्रव्रज्या "நன்றாக வெளியேறல்" என்பது ஏற்பட்ட அர்த்தம். இதை இரண்டுவிதமாக ஆசார்யர் பிரித்திருக்கிறார், தேஹத்திலிருந்து வெளியேறல், வீட்டிலிருந்து வெளியேறல், என்று. தேஹத்திலிருந்து வெளியேறல் என்பது மரணம் என்று அர்த்தமில்லை. மரணம் என்பது இந்த சரீரத்திற்கு காரணமாகிய பிராரப்தகர்மா முடிந்துவிட்டதேயானால் தானாகவே ஏற்படும். அப்பொழுது தேஹத்தை விட்டுவிடுவது ஜீவன் ஸ்வதந்திரமாய் செய்யும் கார்யமேயல்ல. ஆகையால் அவ்வித "வெளியேறலை" அவன் செய்கிறானென்று சொல்லமுடியாது. அவன் ஸ்வதந்திர மாய் செய்யக்கூடிய "வெளியேறல்" தேஹத்தில் நானென்றும் என்னுடையதென்றும் வைத்திருக்கிற அபிமானத்தை விடுவது தான். அந்த அபிமானத்தை ஒருவாறு விட்டால்தான், வீட்டை விட்டு வெளியேறமுடியும். அதினால்தான் "தேஹத்திலிருந்து" என்பதை முதலில் சொல்லிவிட்டு இரண்டாவதாக "வீட்டில் இருந்து" என்று கண்டிருக்கிறார். வீட்டிலிருந்து வெளிக்கிளம்பிய போதிலும் குருவை அடைந்து உபதேசம் பெற்று நன்கு ஆத்ம தத்வானுஸந்தானம் நிலைக்கிறவரையில் தேஹத்தில் கொஞ்சம் நானென்பதும் என்னுடையதென்பதும் இருந்தேதீருமானதினால்,

முதலில் "வீட்டிலிருந்து" என்றும் பின்னுல் தேஹத்திலிருந்து என்றும் வரிசையை மாற்றி அர்த்தம் செய்தாலும் தோஷமில்லை. அப்படியே ஒரு வியாக்யாதா அர்த்தம் செய்திருக்கிருர். வைராக்கியத்தை நைர்வேத்யம், ஞானகர்ப்பம் என்று இரண்டு விதமாக சொல்லியிருப்பதை அனுஸரித்து, நைர்வேத்ய வைராக்கியம் வீட்டை விட்டு வெளியேறலுக்கு முன்னமேயும், வீட்டைவிட்டு வெளியேறினதற்குப் பிற்பாடு ஞானகர்ப வைராக்கியம் என்றும் இருப்பது உசிதமேயாகும். ஆகையால் தேஹாபிமானத்தை விடுவது முதலில் ஸாதனமாகவும் பின்னுல் ஸித்தமாகவும் இருந்துவரும்.

(15)

வெறுப்பினுல் ஏற்படும் வைராக்கியம் துக்கத்தின் அனுபவத்தினுல் என்று சொல்லப்பட்டதே, அந்த துக்கம் ஏற்படுவதற்கு நிமித்தம் தேஹத்தில் "நான்" என்கிற எண்ணமும் அதற்கு ஸம்பந்தப்பட்ட பதார்த்தங்களில் "என்னுடையது" என்கிற எண்ணமுந்தான் என்று அடுத்த சுலோகத்தில் விளக்குகிருர்.

यः कश्चित् सौख्यहेतोः त्रिजगति यतते नैव दुःखस्य हेतोः
देहेऽहंता तदुत्था स्वविषयममता चेति दुःखास्पदे द्वे ।
जानन् रोगाभिघाताद्यनुभवति यतोऽनित्यदेहात्मबुद्धिः
भार्यापुत्रार्थनाशे विपदमथ परामेति नाशाविनाशे ॥ १५ ॥

त्रि-जगति-மூன்று-உலகத்திலும் यः कश्चित्-யாராயிருந்தாலும் सौख्य-हेतोः-ஸுகம் வேண்டுமென்ற-காரணத்தினுலேயே यतते-யத்தினம் செய்கிருன்; दुःखस्य-துக்கம் வேண்டுமென்ற हेतोः-காரணத்திற்காக न यत-யத்தினம் செய்வதே கிடையாது. देहे-சரீரத்தில் अहंता-"நான்" என்கிற பாவனையும் तत्-उत्था-அந்த பாவனையிலிருந்து ஏற்படுகிற स्व-विषय-ममता च-தனக்கு-விஷயமாயுள்ள பதார்த்தங்களில் -"என்னுடையது" என்கிற பாவனையும் इति-என்ற द्वे-இரண்டும் दुःख-आस्पदे-துக்கத்திற்கு-காரணங்கள். यतः-ஏனென்ருல், जानन्-(சரீரம், தானில்லையென்று) தெரிந்துகொண்டிருப்பவனு

யிருந்தும் अनित्य-देह-आत्म-बुद्धिः—அநித்யமான-சரீரத்தில்-தான் என்கிற-எண்ணமுள்ளவனாய் (அந்த சரீரத்தைச் சேர்ந்த) रोग-अभिघातादि-வியாதி-அடி-முதலியதை (தன்னைச் சேர்ந்ததென்று) अनुभवति-அனுபவிக்கிறான். अथ-அத்துடன், (தன்னுடையது என்று எண்ணிக் கொண்டிருக்கிற) भार्या-पुत्र-अर्थ-नाशे-பார்யை-புத்திரன்-சொத்து-இவைகளுக்கு நாசம் ஏற்படும் போது (தனக்கே நாசம் ஏற்பட்டது போல்) परां-அதிகமான विपद्-துக்கத்தை एति-அடைகிறான்; (தன்னைச் சேராததாக பாவிக்கப்படுகிற) अराति-नाशे-சத்துருவிற்கு நாசம் ஏற்பட்டால் न-துக்கத்தையடைவதில்லை.

यः कश्चित्- "யாரும்" என்று சொல்லியிருப்பதால் சிறு புழு முதல் நான்முகன் வரையில் ஸகலஜீவர்களையும் குறிக்கும். எல்லா ஜீவர்களுடைய பிரயத்தினம் ஸுகத்தை உத்தேசித்தே ஏற்பட்டிருந்தபோதிலும், யாரும் துக்கத்தை உத்தேசித்து பிரயத்தினம் செய்வது கிடையாதென்று இருந்த போதிலும், உலகத்தில் துக்கம் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கிறதென்பது அனுபவத்தில் நன்றாக தெரிகிறது. இதற்கு காரணம் நாசத்தையடையக்கூடிய சரீரத்தில் "நான்" என்ற எண்ணமும், அப்படியே அதை யொட்டி நாசத்தையடையக் கூடிய பதார்த்தங்களில் 'என்னுடையது' என்ற எண்ணமும், என்கிறார். விரோதியாயிருப்பவனிடம் "நான்" என்றாவது "என்னைச் சேர்ந்தவன்" என்றாவது எண்ணமேயில்லாததினால், அவனுக்கு ஏதேனும் கெடுதல் வந்தால் நாம் துக்கப்படுவதில்லை. சரீரத்தில் 'நான்' என்ற எண்ணம் இராமலிருந்தால் அதிலுள்ள வியாதி முதலியவைகளால் ஜீவன் பீடிக்கப்படமாட்டான். அப்படியே மனைவி மக்கள் முதலியவைகளில் "என்னைச்சேர்ந்தது" என்ற எண்ணமிராமலிருந்தால் அவர்களுக்கு ஏற்படும் கெடுதல்களினால் இவன் பீடிக்கப்படமாட்டான்.

नित्यदेहात्मबुद्धिः என்று பாடமிருக்கும் பக்ஷத்தில் "எப்பொழுதும் தேஹத்தில் ஆத்மா என்ற எண்ணம்" என்று அர்த்தம் செய்துகொள்ளவேண்டும். 4வது சுலோகத்தில் अनित्य-देहात्मबुद्धिः என்று வந்திருப்பதால் அப்படியே இங்கேயும் இருப்பதுதான் உசிதமாகத் தோன்றுகிறது.

(16)

சரீரத்தில் கொஞ்சம் விவேகத்தினுல் "நான்" என்ற பாவனையை விட்டுவிட்டாலும் அதில் 'என்னுடையது' என்ற பாவனை விலகாது போலிருக்கிறதேயென்ருல் அதுவும், ஸாத்தியந் தான்; வீட்டை விட்டு வெளியேறுவதற்கு ஏதேனும் காரணத் தினுல் முடியாமல் போனுலும், அங்கே இருந்துகொண்டே சரீரத் திலும் வீடு முதலியவைகளிலும் "என்னுடையது" என்ற எண்ணமில்லாமல் இருக்கமுடியும் என்பதை திருஷ்டாந்தத்தினுல் தெளிவுபடுத்துகிருர்.

तिष्ठन् गेहे गृहेशोऽप्यतिथिरिव निजं धाम गन्तुं चिकीर्षुः
देहस्थं दुःखसौख्यं न भजति सहसा निर्ममत्वाभिमानः ।
आयात्यायास्यतीदं जलदपटलवत् यातृ यास्यत्यवश्यं
देहाद्यं सर्वमेव प्रविदितविषयो यश्च तिष्ठत्ययत्नः ॥ १६ ॥

निजं—தன்னுடைய சொந்தமான धाम—இருப்பிடம் गन्तुं-போக चिकीर्षुः—விரும்புகிற अतिथिः इव—அதிதியைப் போலவே, गृहेशः अपि—வீட்டிற்கு யஜமானனுய் (கிரஹஸ் தனுய்) இருந்தபோதிலும் गेहे—வீட்டில் तिष्ठन्—இருந்து வருபவன், देहस्थं—சரீரத்திலுள்ள दुःख-सौख्यं—துக்கத் தையும்-ஸுகத்தையும், निर्ममत्व-अभिमानः—"என் னுடையது" என்ற அபிமானமில்லாதவனுக, सहसा— உடனே न भजति—அடைவதில்லை. आयातृ—அவசியம் வர வேண்டியதாயுள்ள इदं—இது आयास्यति—வந்தேதீரும், जलद-पटलवत्-மேக-வரிசையைப் போல; यातृ—போவதும் अवश्यं-அவசியம யாस्यति—போயேதீரும். एवं—இப்படியே தான் देहाद्यं—தேஹம் முதலானது सर्वं—எல்லாமும் என்று यः—எவர் विदित-विषयः-விஷயம் அறிந்தவரோ (அவர்) अयत्नः च-பிரயத்தினம் செய்யாமலே तिष्ठति—இருப்பார்.

निजं धाम – அதிதியானவர் ஒரு வீட்டிற்கு வந்திருந்த போதிலும், தான் போய்ச் சேர வேண்டியது தன் சொந்தமான வீடு என்பதை எப்படி மறக்கமாட்டாரோ, அப்படியே ஜீவனும் ஏதோ கர்மகதியினுல் ஒரு சரீரத்தில் வந்திருக்கும்படி நேரிட்ட

போதிலும், தான் போய்ச்சேர வேண்டிய சாசுவதமான தன் சொந்தமான இடம் பிரஹ்மஸ்வரூபநிலை என்பதை மறந்துவிடக் கூடாது என்று தாத்பர்யம்.

देहस्थ (சரீரத்திலுள்ள) என்று சுலோகத்தில் கண்டிருந்த போதிலும் गेहस्थ (வீட்டிலுள்ள) என்றதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

निर्ममत्वाभिमान: ('என்னுடையது' என்ற அபிமானம் இல்லாதவன்) என்பதை அதிதி ஸம்பந்தப்பட்ட மட்டில் அவன் தங்கியிருக்கும் வீட்டையும், ஜீவன் ஸம்பந்தப்பட்ட மட்டில் அவன் இப்பொழுது அடைந்திருக்கும் தேஹத்தையும் அந்த தேஹம் இப்பொழுது குடியிருந்து வரும் வீடு, குடும்பம், ஊர், தேசம், லோகம், எல்லாவற்றையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அதிதி எப்படி தான் தங்கியிருக்கும் வீட்டை தன்னுடையதென்று நினைக்கமாட்டாரோ, அப்படியே ஜீவனும் தன் சரீரம், வீடு முதலியவைகளை தன்னுடையதென்று நினைப்பது உசிதமில்லை.

जलदपटलवत् (மேக வரிசையைப்போல) — மேகத்திற்கு எவ்வித ஸ்வாதந்திரியமில்லாமல் காற்று கொண்டுபோகுமிடம் எல்லாம் போய்க்கொண்டும் அக்காற்று சிதறடித்துவிட்டால் சிதறியும்போய்விடுகிறதோ, அதேமாதிரி பிராரப்த கர்மாவின் வேகத்தைத் தடுக்க எவ்வித ஸ்வாதந்திரியமுமில்லாமல் ஜீவன் அக்கர்மாவினால் ஏற்படும் ஸுக துக்க அனுபவங்களை அனுபவித்தே தீரவேண்டும். இவனுடைய விருப்பத்தையாவது பிரயத்தினத்தையாவது அபேக்ஷிக்காமல் அவ்வனுபவங்கள் தானாகவே ஏற்படுமானதினால், இவன் ஸுகம் வேண்டுமென்று விரும்பிப் பிரயத்தினம் செய்வதற்கோ, துக்கம் விலகவேண்டும் என்று விரும்பி அதற்காகப் பிரயத்தினம் செய்வதற்கோ, வாஸ்தவத்தில எவ்வித அவசியமும் கிடையாது. இந்த தத்வத்தை அறியாதவர்கள்தான் ஸுகப் பிராப்திக்காகவும் துக்க நிவிருத்திக்காகவும் பிரவிருத்தி செய்வார்கள்; அறிந்தவர்கள் எவ்வித பிரயத்தினமும் செய்யமாட்டார்கள்.

देहाद्यं (தேஹம் முதலானது) — அவ்விதம் தானாகவே இவனை எதிர்பாராமல் இவனைக் கேட்காமல் வந்துபோகும் பதார்த்தங்களில் சரீரமும் சேர்ந்தது என்பதை ஞாபகப்படுத்துகிறார். இன்னவிதமான பிறவி ஏற்படவேண்டும், இவ்வளவு

காலம் ஜீவித்திருக்க வேண்டும், இவ்விதமான போகங்களை அனுபவிக்கவேண்டும் என்று தீர்மானிக்க ஜீவனுக்கு அதிகாரமே இல்லை. அவையாவும் முன் செய்திருக்கும் கர்மாவை அனுஸரித்து முன்னமேயே தீர்மானிக்கப்பட்டவைகளேயாகும். அவைகள் ஏற்படுவதை இவன் பார்த்துக்கொண்டிருப்பதைத் தவிர இவன் செய்யவேண்டியதோ, செய்யக்கூடியதோ யாதொரு பிரயத்தினமும் கிடையாது.

(17)

முன் 14வது சுலோகத்தில் வீட்டை விட்டுப் போவதற்குமுன் தேஹாதிகளில் வைராக்கியம் ஸாதன ரூபமாய் ஏற்பட்டிருக்க வேண்டுமென்றும், வீட்டை விட்டுப் போனபிறகு தேஹாதிகளில் வைராக்கியம் திருடப்பட்டு ஸாத்யரூபமாக ஆகுமென்று சொல்லப் பட்டது. அவ்வித திருடமான வைராக்கியமேற்பட்டுவிட்ட போதிலும், சரீரம் இருக்கிற வரையில் பசிதாஹமிருக்குமே? அவைகளை நிவிருத்தி செய்வதற்காவது சரீரத்தில் 'தான்' என்ற எண்ணமும் அதினுல் ஏற்படக்கூடிய ஸுக துக்க அனுபவமும் ஏற்பட்டுதானே தீரும்? அப்பொழுது தத்வமறிந்தவன் எப்படி இருப்பானென்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிருர்.—

शक्त्या निर्मोकतः स्वात् बहिरहिरिव यः प्रव्रजन् स्वीयगेहात्
छायां मार्गद्रुमोत्थां पथिक इव मनाक् संश्रयेत् देहसंस्थाम् ।
क्षुत्पर्याप्तं तरुस्थः पतितफलमयं प्रार्थयेत् भैक्षमन्नं
स्वात्मारामं प्रवेष्टुं स खलु सुखमयं प्रव्रजेत् देहतोऽपि ॥

स्वात्-தன்னுடைய निर्मोकतः-சட்டையிலிருந்து अहिः-பாம்பு बहिः-வெளியே इव-(போவது) போல, यः-எவர் शक्त्या-வைராக்கிய பலத்திஞல் स्वीय-गेहात्-தன்-வீட்டி லிருந்து प्रव्रजन्-வெளியே போகிறவர், पथिकः-வழிப் போக்கன் मार्ग-द्रुम-उत्थां-வழியிலிருக்கும்-மரத்திஞல்-ஏற்படும் छायां-நிழலை इव-(எப்படி ஆசிரயிப்பானே அதைப்) போல, देह-संस्थां-சரீரத்தில்-இருப்பதை मनाक्-ஏதாவது ஸமயத்தில் संश्रयेत्-ஆசிரயிப்பார். तरुस्थः-மரங்களிலிருந்து क्षुत्-पर्याप्तं-பசியைப் போக்குவதற்கு-

போதுமான पतित-फल-मयं-உதிர்ந்த-பழங்கள்-ஆகிய भैक्ष्-பிக்ஷையால் கிடைக்கும் अन्नं-ஆஹாரத்தை प्रार्थयेत्-விரும்புவார். सः-அவர் सुखमयं-ஆனந்தஸ்வரூபமான स्व-आत्म-आरामं-தன்-ஆத்மாவாகிற-உத்யான வனத்தை प्रवेष्टुं-பிரவேசிப்பதற்காக ननु-அல்லவா देहतः अपि-தேஹத்திலிருந்தும் கூட प्रव्रजेत्-வெளியேறுவார்.

பாம்பின் சட்டை அதன் சரீரத்துடன் ஒட்டிக்கொண்டிருக்கும்போது அதையும் சேர்த்து 'தான்' என்று பாவித்துக் கொண்டிருக்கும். பிறகு அந்த சட்டை முற்றி தனியாக எடுத்து விடக்கூடிய பக்குவதசை ஏற்பட்டவுடன், அதில் 'தான்' என்றோ 'தன்னுடையது' என்றோ, எண்ணம் போய்விடுவதால், அந்தப் பாம்பு தானாகவே அந்த சட்டையை கழற்றிவிட்டு அதை கொஞ்சமேனும் கவனிக்காமல், அதினால் கட்டுப்படாமல், ஸ்வதந்திரமாக வெளியே போய்விடுகிறது. அப்படியேதான், தத்வமறிந்தவரும் வீட்டில் 'தான், தன்னுடையது' என்ற எண்ணம் போய்விட்டவுடன் வீட்டை விட்டு வெளிக்கிளம்பி விடுவார். அவ்வளவு ஸுலபமாக பிராரப்த கர்மா இருக்கும்வரை சரீரத்தை விட்டுப்போக முடியாததினால், அந்த சரீரம் கூடவே இருந்து வரும். அதற்கு பசி, தாஹம் ஏற்படும்போது, அதை நிவிருத்தி செய்யவேண்டியதற்காக அவரும் அந்த ஸமயத்தில் மாத்திரம் கொஞ்சம் 'தன்னுடையது' என்று பாவிக்க நேரிடும். ஆனால் அதற்காக விசேஷ பிரயத்தினம் ஒன்றும் செய்யமாட்டார். வழி நடப்பவன் வெய்யில் கடுமையாயிருந்தால் மரத்து நிழலில் தங்குவதினால் அந்த மரம் தன்னுடையதுதான் என்று நினைப்பது உண்டோ? அதுபோல்தான். இவரும் சரீரத்தை ஆசிரயிப்பதும் மரத்திலுள்ள பழத்தை தானாக பறிக்காமல் அதுவாக கீழே விழுந்ததேயானால் அதை ஆஹாரமாக உட்கொள்வார். அதுவும் பசியாகிற வியாதிக்கு மருந்து என்ற முறையிலேயே கிரஹிக்கிற படியால் அவசியத்திற்கு மேல் கிரஹிக்கமாட்டார். அடுத்த வேளைக்கு வேண்டுமென்று எடுத்துக்கொண்டும் போகமாட்டார். இவ்விதம் பசித்தஸமயம் பிக்ஷை எடுத்துவரும் ஞானி வாஸ்தவத்தில் தேஹத்திலிருந்தும் வெளிக்கிளம்பினவரே தேஹமேயில்லாத நிலை விதேஹ கைவல்ய தசையில் ஏற்படுவதாயிருந்த போதிலும், அதற்கு முன்பே ஜீவன் முக்த தசையில் சரீரத்தில் "தான், தன்னுடையது" என்கிற அபிமானம் இல்லாத காரணத்தினால் அப்பொழுதே சரீரத்திலிருந்து வெளியேறினவரேயாவார்.

पतितफलसमयं என்பதை पतितफल (கீழே உதிர்ந்த பழம்) अयं (இவர்) என்று இரண்டு வார்த்தைகளாகவும் எடுத்துக் கொள்ளலாம். அப்படி எடுத்துக்கொண்டால், பழம் தான் ஆஹாரமென்பதில்லை; பிக்ஷையெடுப்பதினால் கிடைப்பதும் ஆஹாரமாகும் என்று தாத்பர்யம் கிடைக்கும்.

स्वात्मारामं – தன்னுடைய ஆத்மா ஸந்தோஷமாக இருக்கக் கூடிய நிலை, என்று பொதுவாகவும் அர்த்தம் செய்யலாம்.

ननु – அல்லவா? என்று பிரஸித்தியைக் காட்டுகிறார். அதாவது, தன்னுடைய சொந்த வீட்டிற்குப் போய்ச்சேரவேண்டு மென்ற ஆவலுடன் போய்க்கொண்டிருக்கும் வழிப்போக்கன் நிழலுக்காக ஒரு மரத்தடியில் கொஞ்சம் ஒதுங்கினாலும், அங்கே கீழே கிடக்கும் ஏதேனும் பழத்தை சாப்பிட்டாலும், அந்த மரம் யார் வைத்து உண்டு பண்ணினது என்று விசாரப்படுவானா? அவன்தான் அந்த மரம் நன்கு வளரவேண்டுமென்று நினைத்து அதற்கு உரம் போடுவானா? ஜலம் தான் பாய்ச்சுவானா? அதே மாதிரி ஞானியானவர் சரீரத்தைப் பற்றி எவ்வித கவலையும் படமாட்டார். அதை போஷிப்பதற்காக எவ்வித பிரயத்தினமும் செய்யமாட்டார். முந்தின சுலோகத்தில் சொன்னபடி உதாஸீன மாகவேயிருப்பார் இந்த நிலையைத்தான் தேஹத்தை விட்டு வெளியேறல் என்கிறார் ஆசார்யார்.

(18)

15வது சுலோகத்தில் "நான்" என்பதும் அதிலிருந்து ஏற்படும் "என்னுடையது" என்பதுந்தான் துக்கத்திற்குக் காரணம் என்று சொல்லி அந்த "என்னுடையது" என்று எண்ணத்தை விட்டவன் எப்படியிருப்பானென்பதை 16, 17 சுலோகங்களில் காட்டினார். இனி அவ்வெண்ணம் எவ்விதம் துக்கத்திற்குக் காரணமாகிறதென்பதை விவரித்துக்கூறுகிறார்.

कामो बुद्धावुदेति प्रथममिह मनस्युद्दिशत्यर्थजातं
तत् गृह्णातीन्द्रियास्यैः तदनधिगमतः क्रोध आविर्भवेच्च ।
प्राप्तावर्थस्य संरक्षणमतिरुदितो लोभ एतत् त्रयं स्यात्
सर्वेषां पातहेतुः तदिह मतिमता त्याज्यमध्यात्मयोगात् ॥

इह-இங்கே अर्थ-जातं-(சப்தம் முதலிய) விஷய-ஸமூஹத்தை मनसि மனஸானது उद्दिशति-குறிவைத்ததேயானல், प्रथमं-முதலில் बुद्धौ-புத்தியில் कामः- ஆசை उदेति-உண்டாகிறது; तत्-அதை इन्द्रिय-आद्यैः-இந்திரியங்கள் மூலமாக गृह्णाति-கிரஹித்துக் கொள்கிருன். तत्-अनधिगमतः-அது-கிடைக்காமலிருந்தால் क्रोधः च-கோபமும் आविर्भवेत् வெளிக்கிளம்பும். अर्थस्य-பதார்த்தம் प्राप्तौ-கிடைத்து விட்டதேயானல் संरक्षण-मतिः-அதை நன்கு பாதுகாக்க வேண்டுமென்ற-எண்ணம் लोभः-லோபம் उदितः-என்று சொல்லப்படுகிறது. एतत्-இந்த त्रयं-(காமம், கோபம், லோபம் ஆகிய) மூன்றும் सर्वेषां-எல்லாருக்குமே पात-हेतुः-கீழ் வீழ்ச்சிக்கு-காரணம். तत् ஆகையால் (அல்லது, இந்த மூன்றும்) इह-இங்கே मतिमता-புத்தியுள்ளவனல் अध्यात्म-योगात् - ஆத்ம ஸ்வரூபத்தை- அனுஸந்தானம் பண்ணுவதால் त्याज्यं-தள்ளத்தகுந்தது.

ஸ்ரீமத் பகவத்கீதையில், ஒரு பதார்த்தத்தைப்பற்றி மனஸ் அடிக்கடி நினைத்துப் பார்த்தால் அதில் பற்றுதல் ஏற்படுகிறது, அந்தப் பற்றுதலிலிருந்து ஆசை ஏற்படுகிறது,

ध्यायतो विषयान् पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात् संजायते कामः कामात् क्रोधोऽभिजायते ॥ II-68

என்று சொல்லியிருக்கிறதை அனுஸரித்து மேலே இந்த சுலோகம் முதல் பாதத்திற்கு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. சிலர் उद्दिशति என்ற வார்த்தையை ஏழாம் வேற்றுமை ஏகவசனமாக எடுத்துக்கொள்ளாமல் 'உத்தேசிக்கிறது' என்று வினைச் சொல்லாகவே எடுத்துக்கொள்கிருர்கள். அவ்விதம் எடுத்துக் கொண்டால் 'மனஸில் விஷய ஸமூஹத்தை உத்தேசிக்கிருன்' என்று அர்த்தம் செய்யவேண்டிவரும், அதாவது அந்த பதார்த்தத்தை அடையவேண்டும் என்று தீர்மானித்துக்கொள்கிருன் என்று சொல்லவேண்டும்.

மனஸ் பதார்த்தத்தைப்பற்றி நினைக்கலாம், ஆசைப்படலாம்; ஆனல் அதை அனுபவிப்பதற்கு இந்திரியங்கள் மூலமாய்த்தான் முடியும் என்பதை इन्द्रियाद्यैः என்ற பதம் காட்டுகிறது. அத்

துடன், இந்திரியங்கள் கருவிகளே தவிர, ஸுகத்துக்கு அனுபவம் மனஸிற்குத்தான் என்பதையும் காட்டுகிறது. இந்திரியங்களுக்கும் பதார்த்திற்கும் ஸம்பந்தமிருந்தபோதிலும், அந்த இந்திரியங்களுடன் மனஸ் ஸம்பந்தப்படாமலிருந்தால் எவ்வித அனுபவமும் ஏற்படாது.

ஆசைக்கு விஷயமான பதார்த்தம் கிடைப்பதற்கு ஏதேனும் இடைஞ்சல் ஏற்பட்டால், அவ்வாசையே கோபமாக மாறுகிறது. பதார்த்தம் கிடைத்துவிட்டால், அது தன்னைவிட்டு விலகவே கூடாது என்ற பிடிமானம்தான் லோபம் எனப்படுகிறது. ஆகையால் காமம், குரோதம், லோபம் மூன்றுமே ஒரே மனோ விருத்தியின் மாறுதல்களேயாகும். மனஸ் சாந்தமாய் அடங்கி இருந்ததை முதலில் ஆசை ஏற்பட்டுக் கலக்கிவிடுகிறது, பிறகு குரோதம் ஏற்படும்போது அதிகமான கலக்கத்தை அடைகிறது. லோபமாக மாறும்போது தமோகுணம் மேலிடுகிறது. ஆக இம் மூன்றுமே சாந்தியைக் கெடுத்து ஜீவனை துன்பத்திற்கு ஆளாக்கு கின்றன. இவைகளுக்கு அவன் இடம் கொடுத்துவிட்டால் மதம், மாத்ஸரியம், அஸூயை முதலிய துர்குணங்கள் ஏற்படு கின்றன. அவைகளால் தூண்டப்பட்டு பாபம்செய்யத் துணிந்து விடுகிறான். அதன் பலனாக துக்கத்தையே அனுபவிக்கும்படி ஏற்படுகிறது. ஆகையால் இம் மூன்றும் இவனை கீழேதள்ளி விடும் என்று ஆசார்யார் சொல்கிறார். இந்த சுலோகம் பகவத் கீதையிலுள்ள,

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधः तथा लोभः तस्मादेतत् त्रयं त्यजेत् ॥
XVI-21

ஆத்மாவைக் கெடுக்கக்கூடியதாய் நரகத்திற்கு வழியாக காமம், குரோதம், அப்படியே லோபம், ஆகிய இந்த மூன்றும் இருந்துவருகின்றன. ஆகையால் இம் மூன்றையும் விலக்க வேண்டும் என்ற வாக்கியத்தின் வியாக்யானமேயாகும். எப்படி விலக்குவது என்பதை "ஆத்மானு ஸந்தானத்தினால்" என்ற வார்த்தையினால் குறிக்கிறார்.

இம் மூன்றில் ஏதேனும் ஒன்றில் எப்பொழுதாவது கொஞ்சம் அஜாக்கிரதையாயிருந்தால் யாராயிருந்தாலும் கெடுத்துவிடும் என்பதை सर्वेषां (எல்லோருக்கும்) என்ற பதத்தினால் காட்டுகிறார்.

புராணங்களிலுள்ள கதைகள் எல்லாம் இதையே ருசுப்படுத்துகின்றன. நம் அனுபவத்தை நன்கு கவனித்துப் பார்த்தாலும் இதன் உண்மை நன்கு விளங்கும்.

(19)

இவ்வளவு ஆபத்திற்குக் காரணமாயிருக்கிற காமம் முதலானதுகளை எந்த ஸாதனங்களைக்கொண்டு விலக்கமுடியும் என்று கேட்டால், ஸாமவேதத்தில் 'கல்பாஷஸாமம்' என்றும் 'ஸேதுஸாமம்' என்றும் பிரஸித்தி பெற்றிருக்கிற வாக்கியங்களையே அனுவதித்து சுலோகத்தில் அமைத்து ஆசார்யார் பதில் சொல்கிருர். அந்த ஸாமத்தில் பிரகிருதத்தில் வேண்டிய அம்சங்கள் இவை —

सेतूंस्तर दुस्तरान् । दानेन अदानं ... अक्रोधेन क्रोधं... श्रद्धयाऽश्रद्धां .... सत्येनानृतं ... एषा गतिः । एतदमृतम् । स्वर्गच्छ । ज्योतिर्गच्छ । सेतूंस्तीर्त्वा चतुरः ॥

'(மற்ற உபாயங்களால்) கடக்கமுடியாத அணைகளைக்கடந்து செல்லு. தானம் செய்வதால் தானம் செய்யாமலிருப்பதையும், குரோதமில்லாமலிருப்பதால் குரோதத்தையும், சிரத்தையில்லாமல் இருப்பதை சிரத்தையாலும், ஸத்யத்திஞல் பொய்யையும் (தாண்டு) இதுதான் வழி. இதுதான் சாவு அற்றநிலை. இந்த நான்கு அணைகளையும் கடந்து ஸ்வர்க்கம் செல்லு. ஜ்யோதிஸ் ஸ்வருபத்தை அடைவாயாக!'

இதிலுள்ள பதங்களின் தாத்பர்யத்தை ஸ்ரீமத் ஆசார்யார் தன் சுலோகத்தில் விவரித்துச் சொல்லுகிருர் —

दानं ब्रह्मार्पणं यत् क्रियत इह नृभिः स्यात् क्षमाऽक्रोधसंज्ञा
श्रद्धाऽऽस्तिक्यं च सत्यं सदिति परमतः सेतुसंज्ञं चतुष्कम् ।
तत् स्यात् बन्धाय जन्तोरिति चतुर इमान् दानपूर्वैः चतुर्भिः
तीर्त्वा श्रेयोऽमृतं च श्रयत इह नरः स्वर्गति ज्योतिराप्तिम् ॥

नृभिः — மனிதர்களால் यत् — எது ब्रह्म - अर्पणं — பிரஹ்மத்திற்கு-அர்ப்பணமாக क्रियते-செய்யப்படுகிறதோ (அதுதான்) दानं-''தானம்'' ஆகும். क्षमा-பொறுமை

தான் अक्रोध-संज्ञा-''அக்குரோதம்'' (கோபமில்லாமை) என்ற-பெயருள்ளது. आस्तिक्यं-ஆஸ்திக்யம் (''இருக்கிறது'' என்று நம்புவது) தான். श्रद्धा-''சிரத்தை'' என்பது. सत्यं-ஸத்யம் என்றால் सत्-(எப்பொழுதும் ஒரு காலத்திலும் பாதிக்கப்படாமல்) ''இருக்கிற'' வஸ்து इति-என்று. अतः-இவைகளிலிருந்து (தானம், பொறுமை, ஆஸ்திக்யம், ஸத்யம், இவைகளி லிருந்து) परं-வேறுபட்டதான (அதானம், குரோதம், அசிரத்தை, அஸத்யம் ஆகிய) चतुष्क-நான்கும் सेतु-संज्ञं-அணையென்று-பெயரிடப்பட்டிருக்கிறது. तत्-அந்த நான்கும் जन्तोः-பிராணியினுடைய बन्धाय-பந்தத்திற் காகத் தான் स्यात्-இருக்கும் इति-என்று இருப்பதினால் नरः-மனிதன் इह-இங்கே इमान्-இந்த चतुरः-நான்கையும் दान-पूर्वैः-தானம் முதலான चतुर्भिः-நான்கு ஸாதனங் களினால் तीर्त्वा-கடந்து श्रेयः-மேலான நன்மையையும் अमृतं-சாவு அற்ற நிலையையும் स्वः-गतिं-(துக்கம் கலக்காத) ஸ்வர்க்கம்-போவதையும் ज्योतिः-आप्तिं-ஜ்யோதிஸ் ஸ்வரூபப் பிராப்தியையும் श्रयते-அடைகிறான்

போக்கடிக்கவேண்டியதாகவுள்ள வாஸனைகள் இருந்தால் அவைகளை போக்கடிப்பதற்கு அந்தந்த வாஸனைகளுக்கு நேர் விபரீத வாஸனைகளை ஏற்படுத்தினால்தான் போகுமென்பது உலக அனுபவம். அப்படியே ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாயிருந்து வருகிற லோபம், கோபம், அவநம்பிக்கை, அஸத்யம், இவைகளை நிவிருத்தி செய்வதற்கு முறையே தானம், பொறுமை, சிரத்தை, ஸத்யம், இவைகளே தேவை.

அதிலும் தன் கையிலுள்ள பதார்த்தத்தை இன்னொரு வருக்குக் கொடுத்துவிட்டால் மாத்திரம் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலை செய்யக்கூடிய தானம் ஆகாது. பகவான் கீதையில்,

**यत् करोषि यत् अश्नासि..... तत् कुरुष्व मदर्पणम्** IX-27

'எது செய்கிறாயோ, எது அனுபவிக்கிறாயோ, அதை எனக்கு அர்ப்பணம் செய்.

என்று சொல்லியிருக்கிறபடி பகவானுக்கு அர்ப்பணம் செய்தால் தான் வாஸ்தவமான தானம் ஆகும். எந்த தேவதைக்கோ, மனுஷ்யனுக்கோ, வேறு பிராணிக்கோ, எது கொடுத்தாலும் அவர்களிடமுள்ள பகவானுடைய அம்சத்திற்கே கொடுப்பதான பாவனை வேண்டும்

கோபம் வந்து அடக்கிக் கொள்வது சிலாக்கியமில்லை. தனக்கு யாரேனும கெடுதல் செய்தால் அதற்கு பதில் செய்ய வேண்டும் என்ற எண்ணமேயில்லாமல் கோபமே வராமல் உதாஸீனமாயிருக்கும் தன்மையாகிய பொறுமை என்பதுதான் சிலாக்கியம்.

சிரத்தை என்பதற்கு ஆஸ்திக்யம் என்றே ஆசார்யார் அர்த்தம் செய்திருக்கிறார். அதாவது, பகவான் இருக்கிறார், பரலோகம் உண்டு, ஜன்மாந்தரம் உண்டு, வேதமே பிரமாணம். என்றெல்லாம் திருடமாயுள்ள நம்பிக்கை.

ஒரு காலத்திலிருந்து இன்னொரு காலத்தில் இல்லாமல் இருக்கும் பதார்த்தம் 'ஸத்யம்' என்று சொல்லத் தகுதி அற்றது. அப்படியே ஓரிடத்திலிருந்து வேறு இடத்தில் இல்லாமலிருக்கும் பதார்த்தமும் 'ஸத்யம்' ஆகாது. 'இல்லை' என்கிற சப்தத்தை சேர்க்கமுடியாமல் எது எப்பொழுதும் எங்கேயும் இருக்கிறதோ, அதுதான் வாஸ்த்தவமாய் 'ஸத்யம்'. அது பிரஹ்மத்தைத் தவிர வேறு கிடையாததினால் 'ஸத்யம்' என்பதே பிரஹ்மம்தான் என்று ஆசார்யார் இந்த சுலோகத்தில் கண்டிருக்கிறார்.

பந்தத்திற்குக் காரணமாயிருக்கிற 'அதானம்' முதலிய நான்கையும் 'தானம்' முதலிய ஸாதனங்களால் விலக்கிவிட்டால், ஆத்மா தன் ஸ்வரூப நிலையான ஆனந்தத்தை அடைகிறார் என்கிறார். அந்த நிலையை அடையவொட்டாமல் தடுத்துக் கொண்டிருப்பதினால் அந்த நான்கையும் வேதம் 'ஸேது' (அணை) என்ற சொல்லால் சொல்கிறது.

## (20)

தானம் என்பதில் அன்னதானம் மிகவும் சிலாக்கியமானது. அதை முன் சுலோகத்தில் கண்டபடி பிரஹ்மார்ப்பணமாகச் செய்வது எப்படி என்பதை இரண்டு சுலோகங்களில் எடுத்து விரிவாய்ச் சொல்கிறார் —

अन्नं देवातिथिभ्योऽर्पितममृतमिदं चान्यथा मोघमन्नं
यश्चात्मार्थं विधत्ते तदिह निगदितं मृत्युरूपं हि तस्य ।
लोकेऽसौ केवलाघो भवति तनुभृतां केवलादी च यः स्यात्
त्यक्त्वा प्राणाग्निहोत्रं विधिवदनुदिनं योऽश्नुते सोऽपि मर्त्यः ॥

देव-अतिथिभ्यः – தேவர்களுக்கும்–அதிதிகளுக்கும் अर्पितं–அர்ப்பணம் செய்யப்பட்ட इदं-இந்த अन्नं–அன்னம் अमृतं - அமிருதமேயாகும். अन्यथा च – வேறுவிதமாயோ (தேவர்களுக்கும் அதிதிகளுக்கும் அர்ப்பணம் செய்யப் படாத) अन्नं – அன்னமானது मोघं – வீணே (எவ்வித பிரயோஜனமுமில்லை) தவிரவும் यः च – எவனொருவன் आत्मार्थं–தன்னுடைய பிரயோஜனத்தை மாத்திரம் உத்தே சித்து विधत्ते (அன்னத்தை) ஏற்படுத்துகிறானோ, तस्य– அவனுக்கு तत् – அந்த அன்னம் इह – இங்கேயே मृत्युरूपं - மிருத்யு-தன்மையுடையது என்று निगदितं–(வேதத்தில்) சொல்லப்பட்டிருக்கிறது हि - என்பது பிரஸித்தம். तनुभृतां - மனிதர்களுக்குள் यः च–எவனொருவன் केवल-आदी– தனித்து-சாப்பிடுகிறவனாக स्यात् – இருப்பானோ, असौ – அவன் लोके உலகத்தில் केवल-अघः–பாபமேயுள்ளவனாக भवति–ஆகிறான். यः–எவன் अनुदिनं–பிரதிதினம் विधिवत्– வேதத்தில் விதித்தபடி प्राणाग्निहोत्रं பிராண–அக்னி ஹோத்திரத்தை त्यक्त्वा–விட்டுவிட்டு (செய்யாமல்) अश्नुते–சாப்பிடுகிறானோ, सः अपि– அவனுங்கூட मर्त्यः– மரணத்திற்குரியவன் (நாசமடைய வேண்டியவன்).

இந்த சுலோகத்தில் தைத்திரீய பிராஹ்மணத்தில் உள்ள அடியில் கண்ட மந்திரத்தின் தாத்பர்யத்தை எடுத்துச் சொல்லி இருக்கிறார்.

मोघमन्नं विन्दते अप्रचेताः सत्यं ब्रवीमि वध इत् स तस्य ।
नार्यमणं पुष्यति नो सखायं केवलाघो भवति केवलादी ॥ II-8 8)

"ஸத்யமாகச் சொல்கிறேன். புத்தி கெட்டவன் வீணான் அன்னத்தையேயடைகிறான், அது அவனுக்கு வதம் (மித்ருயு)

போலத்தான். எவன் ஸூர்யனுக்கு (தேவதைகளுக்கு) ம் (இவனுக்கு க்ஷேமத்தைக் கொடுக்க வந்திருக்கும் அதிதியான) நண்பனுக்கும் கொடுக்கவில்லையோ, எவன் தனித்திருந்து சாப்பிடுகிருனே அவன் பாபத்தையேயுடையவனுக ஆகிருன்.

मृत्युरूपं—தேவர்களுக்கும் அதிதிகளுக்கும் கொடுத்தது அமிருதம் என்று சொல்லியிருப்பதால், அவ்விதம் கொடுக்காமல் தான் மாத்திரம் சாப்பிட நினைக்கும் அன்னம் விஷமாகயிருந்து, இவனைக் கெடுத்துவிடும்.

प्राणाग्निहोत्रं — பகவான் எல்லா பிராணிகளின் தேஹங்களிலும் ஜாடராக்னி ரூபமாக வைசுவாநரன் என்ற பெயருடன் இருந்து வருவதால் அந்த அக்னிக்கு ஆஹுதியாக பசி தீரும்படி அன்னம் கொடுத்தால் அதுவே அக்னி ஹோத்திரத்திற்கு ஸமானமாகும். இதினல் வைசுவதேவம் அதிதிஸத்காரம் இரண்டுமே சொன்னதாக ஆகிறது. இதைச் செய்யாமலிருந்தால் அவன் பாவிதான் என்பதில் சந்தேஹமில்லை. இது பிரதி தினம் செய்ய வேண்டிய கார்யம் என்பதை अनुदिनं என்ற வார்த்தையும் இது வேத விஹிதமென்பதை विधिवत् என்ற வார்த்தையும் காட்டுகின்றன.

सोऽपि मर्त्यः "அந்த மனிதனுங்கூட" பாவிதான் என்றும் அன்வயம் செய்து கொள்ளலாம்.

(21)

அதிதியை நண்பன் என்று வேதவாக்கியத்தில் கண்டு இருப்பது எப்படி நியாயம் என்பதை பின்வரும் சுலோகத்தில் சொல்கிருர். அதில் ரிக்வேதத்திலுள்ள இரண்டு ரிக்குகளை எடுத்துக்கொண்டு அவைகளின் தாத்பர்யத்தை சுலோகத்தில் அமைத்திருக்கிருர்—

लोके भोजः स एवार्पयति गृहगतायार्थिनेऽन्नं कृशाय
यः तस्मै पूर्णमन्नं भवति मखविधौ जायतेऽजातशत्रुः ।
सख्ये नान्नार्थिने योऽर्पयति न स सखा सेवमानाय नित्यं
संसक्तायान्नमस्मात् विमुख इव परावृत्तिमिच्छेत् कदर्यात् ॥ २१ ॥

यः–எவன் गृह-गताय–வீட்டிற்கு வந்தவனாய் अर्थिने–வேண்டுபவனாய் कृशाय–மெலிந்தவனாய் (எளியவனாய்) இருக்கிறவனுக்கு अन्नं–அன்னத்தை अर्पयति–கொடுக்கிறானோ, स एव–அவன் தான் लोके–உலகத்தில் भोजः–போஜனம் செய்துவைப்பவன். तस्मै–அவனுக்கு मख-विधौ–யக்ஞம்-செய்வதில் अन्नं–அன்னமானது पूर्णं–நிறைய भवति–ஏற்படும். (அவன்) अजात-शत्रुः–சத்துருவே யில்லாதவனாக जायते ஏற்பட்டு விடுகிறான். यः–எவன் सख्ये–நண்பனாயும் अन्न-अर्थिने–அன்னத்தை-விரும்பு பவனாயும் नित्यं सेवमानाय–ஸேவித்துக் கொண்டிருப் பவனாயும் संसक्ताय–தன்னை நன்கு அண்டினவனாயு முள்ளவனுக்கு अन्नं–அன்னத்தை न अर्पयति–கொடுப்ப தில்லையோ, सः–அவன் सखा–நண்பன் न–ஆகமாட்டான். अस्मात्–அந்த कदर्यात्–கஞ்சனிடமிருந்து (பிச்சைக்காரன் கூட) विमुख इव–முகத்தைத் திருப்பிக் கொண்டவன்போல परावृत्ति–திரும்பிப்போய் விடுவதையே इच्छेत्–விரும்ப வேண்டும்.

இந்த சுலோகத்திற்கு மூலமான ரிக்வேத சுருதியாவது—

स इद्भोजो यो गृहवे ददात्यन्नकामाय चरते कृशाय ।
अरमस्मै भवति यामहूता उतापरीषु कृणुते सखायम् ॥ X 117 (3)

न स सखा यो न ददाति सख्ये सचाभुवे सचमानाय पित्वः ।
अपास्मात् प्रेयान्न तदोको अस्ति पृणन्तमन्यमरणं चिदिच्छेत् ॥ ,, (4)

मखविधौ (யக்ஞம் செய்வதில்)—'வேதோக்தமான யாகங் களை அனுஷ்டிக்கும் போது' என்று மாத்திரம் அர்த்தமில்லை. இவ்விதம் தானம் செய்கிறவருடைய தின வாழ்க்கையே யக்ஞமாகுமாதலால்' "எப்பொழுதும் வேண்டியபோதெல்லாம்" என்றே தாத்பர்யம்.

सख्ये—அன்னத்தை வேண்டி வீட்டுக்கு வருகிறவர் அந்த வீட்டிலுள்ள கிரஹஸ்தனுக்கு புண்ணியம் ஸம்பாதிப்பதற்கு அவகாசம் கொடுத்து உதவுவதால் 'நண்பர்' ஆகவேயிருக்கிறார்.

அவ்வித நண்பருக்கு அன்னம் கொடுக்கவில்லையானல் தோஷ முண்டென்பதுடன், இவனை யாரும் நண்பனுக பாவிக்க மாட்டார்கள்.

सेवमानाय-தன்னையே ஸேவித்துக் கொண்டு தன்னையே ஆசிரயமாக நம்பிக்கொண்டிருப்பவனுக்குக்கூட அன்னம் கொடுக் காதவன் முன்பின் தெரியாத அதிதிக்கா ஸத்காரம் செய்யப் போகிருன்? இவ்வளவு கஞ்சத்தனமுள்ளவன் வீட்டுப்பக்கமே பிச்சைக்காரன் கூட போகக்கூடாதென்று சொல்வதால் அவன் மிகவும் நிந்திக்கத்தக்க பாவியென்ற கருத்து. மூலசுருதியில் 'न तद् ओकः அது வீடேயாகமாட்டாது' என்று சொல்லப்பட்டிருக் கிறது.

(22)

ஆத்மாவல்லாத பதார்த்தங்களில் 'தான்' என்கிற எண்ணமும் 'தன்னுடையது' என்கிற எண்ணமும் 'மூடத் தனத்தினுல்' ஏற்படுகிறதென்று பொதுவாக முன்சொல்லப் பட்டது. அந்த 'மூடத்தனம்' என்பது தன்னைத்தான் சரியாக அறிந்துகொள்ளாமல் இருப்பதுதான். தன்னுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தை அறிந்துவிட்டால், தன்னைத்தவிர வேறு பதார்த்தம் இருப்பதாகவே தோன்ருது. ஆகையால் ஜகத் தோன்றுவதற்கே காரணம் தன்னைத் தெரிந்துகொள்ளாமல் இருப்பதுதான். தன்னை அறியாமல் இருக்கும்வரை ஜகத் தோன்றிக்கொண்டிருக்கும்; தன்னை அறிந்துவிட்டால் ஜகத் மறைந்துவிடும் என்ற தத்வத்தை உதாஹரண பூர்வமாக ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்கிருர் —

स्वाज्ञानज्ञानहेतू जगदुदयलयौ सर्वसाधारणौ स्तः
जीवेष्वास्वर्णगर्भं श्रुतय इति जगुः दृश्यते स्वप्रबोधे ।
विश्वं ब्रह्मण्यबोधे जगति पुनरिदं दृश्यते ब्रह्म यद्वत्
शुक्तौ रौप्यं च रौप्येऽधिकरणमथवा दृश्यतेऽन्योन्यमोहात् ॥ २२ ॥

जगत् - उदय-लयौ - உலகத்தின் -தோற்றமும்-மறைவும் आ-स्वर्णगर्भं- ஹிரண்ய கர்ப்பர் வரை (உள்பட) जीवेषु- ஜீவர்களிடத்தில் सर्व-साधारणौ - எல்லாருக்கும்-பொதுவாக (ஒரே மாதிரியாக) स्व-अज्ञान-ज्ञान-हेतू-தன் விஷயமான-

அறியாமை- அறிவு-இவைகளைக் காரணமாயுள்ளதாக ஸ்த:- இருக்கின்றன, இதி-என்று ஶ்ருதய: - வேதங்கள் ஜகு:- சொல்லுகின்றன. ஸ்வ ப்ரபோதே-தன்-அறிவு ஏற்பட்டால் ப்ரஹ்மணி - பிரஹ்மத்தினிடத்தில் விஶ்வ-ஜகத்தானது ஹூயதே- ஆஹுதி செய்யப்படுகிறது (மறைந்து விடுகிறது); அபோதே- தன்னை அறியாமலிருக்கையில் இதம்-இந்த ப்ரஹ்ம-பிரஹ்ம மானது புன:-முறையே ஜகதி-ஜகத்தில் ஹூயதே-ஆஹுதி செய்யப்படுகிறது (மறைந்து விடுகிறது). அன்யோன்ய-மோஹாத்- ஒன்றுக்கொன்று மோஹத்தினால் ஶுக்தௌ-கிளிஞ்சலில் (அறிவு இருக்கும்போது) ரௌப்யம் ச-(வெறும் தோற்றமாகிய) வெள்ளியும், அதவா-அல்லது, (அறியாமலிருக்கும்போது) ரௌப்யே - (தோற்றமாகிய) வெள்ளியில் அதிகரணம்- (கிளிஞ்சலாகிற) அடிப்படை வஸ்துவும், ஹூயதே- ஆஹுதி செய்யப்படுகிறது (மறைந்து விடுவது) யத்வத்-எப்படியோ (அப்படியேதான்).

கிளிஞ்சலை கிளிஞ்சல் என்று தெரிந்துகொள்ளாததினால்தான் வெள்ளி தோன்றுகிறது; வெள்ளி தோன்றும்போது வாஸ்தவத்தில் அடிப்படையாயிருந்து வரும் கிளிஞ்சல் தெரிவதில்லை. அப்படியே இது கிளிஞ்சல்தான் என்று தெரிந்துவிட்டால், அதில் தோன்றிக்கொண்டிருந்த வெள்ளி மறைந்துவிடும். இதைப் போலத்தான், பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரமேற்பட்டால், ஜகத் மறைந்துவிடும். ஸாக்ஷாத்காரமேற்படாமலிருக்கும் வரை, ஜகத் தோன்றிக்கொண்டுதான் இருக்கும். தானே ஸ்வரூபத்தில் பிரஹ்மமாயிருப்பதினால் தன்னையறிவதும், பிரஹ்மத்தையறிவதும் இரண்டுமே ஒன்றுதான்.

ஹிரண்யகர்ப்பருக்கும் தன் சரீரமாகிற ஜகத்தில் 'தான்' என்கிற அபிமானமிருப்பதினால் அவரையும் ஜீவர்களின் கோஷ்டியிலேயே ஸ்ரீமத் ஆசார்யார் சேர்த்திருக்கிறார். அவருக்கும், தான் சுத்த சைதன்யஸ்வரூபமே என்கிற அனுபவம் ஏற்படும் போது அவர் சரீரமாகிய ஜகத்தும் மறைந்துவிடும்.

(28)

அக்ஞானந்தான் ஜகத்திற்குக் காரணமென்றால், அதன் ஸ்வரூபம் என்ன? அது "இருக்கிற" வஸ்துவா? அல்லது,

,இல்லாத' வஸ்துவா ? 'இல்லாத' வஸ்துவானால், அதற்கு காரணமாயிருக்கும் தன்மை பொருந்தாது. 'இருக்கிற' வஸ்துவானால், அது பிரஹ்மத்தைத்தவிர வேறு, வேறல்லாததா ? வேறாயிருந்தால், அதுவும் 'இருக்கிறது' பிரஹ்மமும் 'இருக்கிறது' என்றால், பிரஹ்மம் 'ஏகம் ஏவ அத்விதீயம்' (ஒன்றுதான், இரண்டாவதற்றது) என்ற லக்ஷணம் பொருந்தாது. அது பிரஹ்மத்தைத்தவிர வேறில்லையானால், அது பிரஹ்மத்தை எப்படி மறைத்து ஜகத்தைத் தோற்றுவிக்க முடியும் ? ஆகையால், ஜகத்திற்குக் காரணமாய் சொல்லப்படும் அக்ஞானம் என்பது 'இருக்கிற வஸ்துவுமில்லை, 'இல்லாத' வஸ்துவுமில்லை, இரண்டிலிருந்தும் வேறுபட்டது என்றே சொல்லவேண்டும். இதையே மாயை என்கிறார்கள். இதன் தத்வத்தை ரிக்வேதத்தில்,

नासदासीन्नो सदासीत् तदानीं
नासीद्रजो नो व्योमापरो यत् ।
किमावरीवः कुहकस्य शर्मन्
अम्भः किमासीद्गहनं गभीरम् ॥ X 129 (1)

என்ற மந்திரத்தினால் சொல்லியிருப்பதை ஸ்ரீமத் ஆசார்யார் சுலோக ரூபமாக எடுத்துரைக்கிறார்—

तुच्छत्वात् नासदासीत् गगनकुसुमवत् भेदकं नो सदासीत्
किन्त्वाभ्यामन्यदासीत् व्यवहृतिगतिसत् नास लोकस्तदानीम् ।
किन्त्वर्वागेव शुक्तौ रजतवदपरो नो विराट् व्योमपूर्वः
शर्मण्यात्मन्यथैतत् कुहकसलिलवत् किं भवेत् आवरीवः ॥ २३ ॥

(ஜகத் உண்டாவதற்கு முன்னால் ஜகத் காரணமாயிருந்த வஸ்து) असत्-''இல்லாத'' வஸ்துவாக न आसीत्-இருக்கவில்லை, गगनकुसुमवत्-''ஆகாசத்தில் புஷ்பம்'' (என்றால் எப்படி ஒருக்காலும் இல்லாத வஸ்துவோ அதைப்) போல तुच्छत्वात्-(ஒரு காலத்திலும்) இருக்கக் கூடியதில்லையானதினால் (அது) भेदकं-(பிரஹ்மத்தை) பிரித்துக் காட்டக்கூடிய (வேறு) सत्-

“இருக்கிற” வஸ்துவாகவும் नो आसीत्-இருந்திருப்பதில்லை. किं तु-ஆனால் आस्यां-(இருக்கிற, இல்லாத, என்ற) இவ்விரண்டிற்கும் अन्यत्-வேறுபட்டதாக आसीत्-இருந்தது. (அப்பொழுது எவ்வித வியவஹாரமும் கிடையாது ஏனென்றால்) व्यवहृति गतिसत्-வியவஹாரம் நடக்க வேண்டியதற்குள்ள लोकः-உலகம் तदानीम्-அப்பொழுது न आस-கிடையாது; किं तु-மேலும் अर्वाक् एव-பின்னால்தான் शुक्तौ-கிளிஞ்சலில் रजतवत्-வெள்ளி தோன்றுவதுபோல (தோன்றுகிறது). अपरः-வேறாக व्योम-पूर्वः-ஆகாசத்தை முன்னிட்ட विराट्-விராட் என்பவரும் नो-கிடையாது. अथ-அப்படியிருக்கையில் शर्मणि-ஆனந்த ஸ்வரூபமான (சுத்தமான) आत्मनि-ஆத்மாவினிடத்தில் कुहक-सलिलवत्-மாயாவி காட்டுகிற-ஜலத்தைப்போல (அல்லது, பொய்யாகவுள்ள கானல் ஜலம் போல) தோன்றுகிற एतत्-இது आवरीवः-ஆவரணமாக (பிரஹ்மத்தை மறைக்கக்கூடியதாக) किं भवेत्-இருக்க முடியுமா?

பிரஹ்மத்தை மறைக்கக்கூடியது ‘அஸத்’ (இல்லாதது) என்றால் மறைப்பது ஸாத்தியமேயில்லை. ‘ஸத்’ (இருப்பது) என்றால் பிரஹ்மத்தைத் தவிர இது வேறு என்றால், பிரஹ்மத்திற்கு இரண்டாவதற்ற தன்மை, அத்விதீயத்வம், போய்விடும். ஆகையால், மறைக்கும் பதார்த்தம் ஸத்துமில்லை, அஸத்துமில்லை, என்று ஆகிறது. அதை ஸத்-அஸத்-விலக்ஷணம் என்பார்கள். இதுதான் மாயையின் ஸ்வரூபம். ஸ்ருஷ்டிக்கப்படும் ஸூக்ஷ்ம பிரபஞ்சமோ ஸ்தூல பிரபஞ்சமோ அவைகளில் அபிமானமுள்ள ஹிரண்யகர்ப்பரோ விராட்டோ ஸ்ருஷ்டிக்குமுன் கிடையாததினால் இது எதுவும் பிரஹ்மத்தை மறைக்க முடியாது. பின்னால் ஏற்பட்டிருக்கும் காலத்திலும், கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைப்போலவே வெறும் தோற்றமாகவே இருப்பதினால், பிரஹ்மத்தை பாதிக்கக்கூடியதில்லை. ஆகையால் ஸ்ருஷ்டிக்கு முன்னால் எப்படி பிரஹ்மம் இருந்ததோ, அப்படியேதான் எவ்வித மாறுதலுமின்னியில் ஸ்ருஷ்டி காலத்திலும் இருந்துவருகிறது.

(24)

ஜீவனுடைய வாஸ்தவ ஸ்வரூபமும் பிரஹ்மமேயானபடியால் அவனுக்கு ஸம்ஸார பந்தம் என்பதோ, அதிலிருந்து விடுதலை அடைவது என்பதோ, இரண்டும் தோற்றமே தவிர வாஸ்தவம் இல்லை. அவ்விரண்டும் தோன்றுவதினுல் ஜீவனுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தில் எவ்வித மாறுதலும் கிடையாது. நம் கண்ணிற்கு ஸூர்யன் தெரியும்போது பகல் என்றும், தெரியாதபோது இரவு என்றும், நாம் வியவஹாரம் செய்கிறோமே தவிர, வாஸ்தவத்தில் எப்பொழுதும் பிரகாசஸ்வரூபமாகவே இருக்கும் ஸூர்யனிடத்தில் பகல் இரவு என்ற வியவஹாரம் கிடையாது என்பதை திருஷ்டாந்தமாகக் கூறுகிறார் —

बन्धो जन्मात्ययात्मा यदि न पुनरभूत् तर्हि मोक्षोऽपि नासीत्
यद्वत् रात्रिर्दिनं वा न भवति तरणौ किं तु दृग्दोष एषः ।
अप्राणं शुद्धमेकं समभवदथ तत् मायया कर्तृसंज्ञं
तस्मादन्यच्च नासीत् परिवृतमजया जीवभूतं तदेव ॥ २४ ॥

जन्म-अत्यय-आत्मा—ஜனன-மரண-ஸ்வரூபமான बन्धः—ஸம்ஸார பந்தமானது न अभूत्—(வாஸ்தவமாக) கிடையாது என்று यदि पुनः—இருந்ததேயானுல். तर्हि—அப்பொழுது मोक्षः अपि—மோக்ஷமும் கூட न आसीत्—கிடையாதுதான்; यद्वत्—எதைப்போலவென்றால், तरणौ—ஸூர்யனிடத்தில் रात्रिः—இரவோ दिनं वा—பகலோ न भवति—கிடையாது, किं तु ஆனுல் एषः—இது (இரவு பகல் என்ற வியவஹாரம்) दृक् दोषः பார்க்கிறவனின்-தோஷமேயாகும். अप्राणं—பிராண ஸம்பந்தமில்லாததாய் शुद्धं—சுத்தமாய் एकं—ஒன்றாகவே (இரண்டாவதற்றதாய்) இருப்பதான तत्—அது (பிரஹ்மம்) अथ—பின்னுல் मायया—மாயையினுல் (ஸமஷ்டி அக்ஞானத்தினுல்) कर्तृ-संज्ञं—செய்கிறவர்-என்ற பெயருள்ளவராக (ஜகத்தை ஸ்ருஷ்டி செய்கிறார், ரக்ஷிக்கிறார், ஸம்ஹரிக்கிறார், என்று சொல்லக்கூடியவராக) समभवत्—ஆகிவிடுகிறார். तस्मात्—அந்த பிரஹ்மத்தைத்தவிர अन्यत् च—வேறு எதுவும் न

आसीत्-இருந்திருப்பதில்லை. अजया-பிறவியற்றதினால் (அனாதியாயிருந்து வரும் வ்யஷ்டி அக்ஞானத்தினால்) परिवृत-சூழப்பட்டதாய் तत् एव-அந்த பிரஹ்மமேதான் जीव-भूत-ஜீவனாக-ஆகியிருப்பவர்.

முண்டகோபநிஷத்தில் பிரஹ்மத்திற்கு லக்ஷணம் சொல்லும் போது अप्राणो ह्यमनाः शुभ्रः II 1 (2) 'பிராணன் இல்லாதவர், மனஸ் இல்லாதவர், நிர்மலமாயிருப்பவர்' என்று கண்டிருப்பதால் அவரிடம் பிராண கார்யமான 'கர்த்ருத்வம்' (செய்கிறவர் என்ற தன்மை) மனஸின் கார்யமான 'போக்த்ருத்வம்' (அனுபவிக்கிறவர் என்ற தன்மை), இரண்டுமே கிடையாதென்பது தெரிகிறது. அவரிடம் இவை இருப்பதாகத் தோன்றுவது மாயையினால்தான். அந்த மாயை இருவகைப்படும். வியாபகமாய் ஸமஷ்டியாய் எடுத்துக்கொண்டால் அது பிரஹ்மத்துடன் சேரும் போது பிரஹ்மத்திற்கு 'ஈசுவரன்' (ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்கிறவர்) என்ற பெயர் ஏற்படுகிறது. குறுகிய வ்யஷ்டி மாயையின் (அவித்யையின்) ஸம்பந்தமேற்படும்போது 'ஜீவன்' (கர்த்தா, போக்தா) என்ற பெயர் ஏற்படுகிறது. இந்த இருவித மாயா ஸம்பந்தத்தினால் பிரஹ்மத்தின் ஸ்வரூபம் ஒரு விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை.

(26)

ஜகத் தோன்றுவதற்குக் காரணமாயிருக்கும் அக்ஞானம் என்பது ஞானத்தின் இல்லாமையாகிய அபாவ பதார்த்தமா? அல்லது அதுவும் ஒரு பாவ பதார்த்தமா? என்று விசாரிக்கையில், வெறும் இல்லாமை எதற்கும் காரணமாகவிருக்கும் யோக்கியதை யுள்ளதாகாது; இந்த அக்ஞானமோ ஜகத்திற்கும் அதிலுள்ள ஸுக துக்கங்களுக்கும் காரணமாகவே இருப்பதால் இதுவும் பாவ பதார்த்தமாகத்தான் கருதவேண்டும் என்கிறார் —

प्रागासीद् भावरूपं तम इति तमसा गूढमस्मादतर्क्यं
क्षीरान्तर्यद्वदम्भो जनिरिह जगतो नामरूपात्मकस्य ।
कामाद्धातुः सिसृक्षोरनुगतजगतः कर्मभिः संप्रवृत्तात्
रेतोरूपैर्मनोभिः प्रथममनुगतैः संततैः कार्यमाणैः ॥ २५ ॥

प्राक् – (ஜகத்தோன்றுவதற்கு) முன்னல் तमः इति– ‘‘இருட்டு’’ என்று भाव-रूपं–பாவ-ரூபமுள்ளதாக आसीत्– இருந்தது. (அப்பொழுது இந்த ஜகத்) तमसा–அந்த இருட்டினுல் गूढं – மறைக்கப்பட்டிருந்தது. अस्मात्– அதிஞல் (மறைக்கப்பட்டிருந்ததினல்), क्षीर–अन्तः– பாலிற்கு-உள்ளேயிருக்கும் अम्भः – ஜலம் यद्वत्–எப்படியோ (எப்படி அறியப்படுவதில்லையோ அப்படியே இந்த ஜகத்தும் அப்பொழுது) अतर्क्यं–அறியப்படுவதில்லை. मनोभिः – மனஸ்களால் (மனஸுடன் கூடிய ஜீவர்களால்) प्रथमं – முதலில் (ஸ்ருஷ்டிக்கு முந்தின கல்பத்தில்) संततैः– இடைவிடாமல் कार्यमाणैः – செய்யப்பட்டதாய் अनुगतैः – கூடவே வருகிறதாயுள்ள रेतो-रूपैः – பீஜத்தன்மையை யடைந்திருக்கிற कर्मभिः – கர்மாக்களினுல் संप्रवृत्तात्–நன்கு ஏற்பட்ட अनुगत-जगतः–துயர்ந்து வரும்-ஜகத்தை सिसृक्षोः– ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று நினைக்கிற धातुः–ஈசுவரனுடைய कामात् – இச்சையினுல் नाम-रूप-आत्मकस्य– பெயரையும் - ரூபத்தையும் - ஸ்வபாவமாயுடைய जगतः – ஜகத்தினுடைய जनिः–உத்பத்தியானது इह–இதில் (இந்த அக்ஞானத்திலிருந்து ஏற்படுகிறது).

இந்த சுலோகத்திற்கு மூல சுருதி ரிக்வேதத்திலுள்ள

तम आसीत् तमसा गूढमग्रेऽप्रकेतं सलिलं सर्वमा इदम् । X 128 (3)

कामस्तदग्रे समवर्तताधि मनसो रेतः प्रथमं यदासीत् । ,, ,, (4)

என்றதும், தைத்திரீய உபநிஷத்திலுள்ள सोऽकामयत । बहुस्यां प्रजायेय .... II 6, என்றதும், மனுஸ்மிருதியிலும் இது சொல்லப் பட்டிருக்கிறது.

आसीदिदं तमोभूतं अप्रज्ञातं अलक्षणम् ।
अप्रतर्क्यं अनिर्देश्यं प्रसुप्तमिव सर्वतः ॥ I-5.

ஜகத் உண்டாவதற்கு முன்னால் காரண-அவஸ்தையில் பீஜ-ரூபமாக இருக்கும்போது நாமரூபங்கள் கிடையாததினால், அது இருப்பதாகவே நினைக்க இடமில்லாமல் இருக்கிறது. பாலில் உள்ள ஜலமோ, அல்லது பாலில் கலந்த ஜலமோ, எப்படி தனியாக அறியமுடியாமலிருக்குமோ, அப்படியே இதுவும் அறியக் கூடியதாக இல்லை. பின்னால் பெரிதாக வளரக்கூடிய விருக்ஷம் பூராவும் அதன் மூலகாரணமான விதையில் எப்படி தெரியாமல் ஸூக்ஷ்மமாக இருந்துவருகிறதோ, அதேபோல இந்த நாம ரூபாத்மகமான இந்தப் பெரிய ஜகத்தும் தோன்றுவதற்கு முன்னால் பீஜரூபமாக அடங்கித் தெரியாமலிருந்தது. இப்பொழுது ஏற்படும் விருக்ஷத்திற்குத் காரணமாகிய விதை முன்னிருந்த ஒரு விருக்ஷத்திலிருந்தே ஏற்பட்டிருக்குமாதலால், இந்த ஜகத்தின் பீஜம் ஏற்படுவதற்கு, முன்னால் அதற்குக் காரணமாக முன் ஒரு ஜகத் இருந்திருக்கவேண்டும். அந்த ஜகத்திற்கு ஒரு பீஜம், அந்த பீஜத்திற்கு முன் ஒரு ஜகத் என்று இப்படியே கவனித்து வந்தால் இந்த ஜகத்-பீஜம்-ஜகத்-பீஜம் என்கிற துடர்ச்சிக்கு ஆதியும் கிடையாது அந்தமும் கிடையாது என்றே ஏற்படும். இந்த தாத்பர்யத்தைத்தான் अनुगतजगतः (துயர்ந்துவந்த ஜகத்) என்ற பதத்தினால் குறிக்கிறார்.

பீஜமாயிருக்கும் தன்மையைவிட்டு விருக்ஷமாவதற்கு ஏதேனும் காரணமிருக்குமே? ஜகத் பீஜாவஸ்தையைவிட்டு நாமரூபாத்மகமாகத் தோன்றுவதற்கு என்ன காரணம்? என்று கேட்டால், பகவானுடைய ஸங்கல்பம் என்று சொல்வோம். அவருக்கு ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யவேண்டுமென்ற ஸங்கல்பம் ஏன் ஏற்பட்டது? என்று கேட்டால், பிராணிகள்முன் செய்திருந்த கர்மாக்கள் பலனைக்கொடுக்க வேண்டியதாய் பழுத்துவிட்டதால், என்கிறோம். ஆகையால ஸுகதுக்கங்களை அனுபவிக்கவேண்டியிருக்கிற ஜீவர்கள்தான் ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு காரணம். ஈசுவரன் பலனைக் கொடுப்பவரே தவிர, அவரைப்பலன் கொடுக்கச் செய்வது ஜீவர்களின் புண்ணிய பாப கர்மாக்களே. ஆகையால் ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கோ, இருப்புக்கோ, மறைவுதலுக்கோ, ஜீவர்கள்தான் பொறுப்புள்ளவர்கள். பகவானுக்கு எவ்வித பொறுப்பும் கிடையாது என்று தாத்பர்யம்.

(26)

ஜகத் தோன்றுவதற்குக் காரணம் ஆத்ம ஸ்வரூபமான பிரஹ்மத்தை அறியாமலிருப்பதுதான் என்றும், அந்த

அறியாமையே மாயை எனப்படும் என்றும், அது பாவரூபம் என்றும், ஸத்-அஸத்-விலக்ஷணம் என்றும், அதினால்தான் ஈசுவரன் ஜீவன் என்று வியவஹாரம் ஏற்பட்டிருக்கிறது என்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது அந்த மாயையின் மஹிமைகளையும் அதையொட்டி ஈசுவரரும் ஜீவனும் வேறுபோல் தோன்றுவதற்குள்ள காரணத்தையும் எடுத்துச் சொல்லும் ரிக்வேத வாக்கியங்களின் தாத்பர்யத்தை இரண்டு சுலோகங்களில் எடுத்துச் சொல்கிறார். அந்த மூல வாக்கியங்கள் இவை :

चतुष्कपर्दा युवतिः सुपेशा घृतप्रतीका वयुनानि वस्ते ।
तस्यां सुपर्णा वृषणा निषेदतुः यत्र देवा दधिरे भागधेयम् ॥

एकः सुपर्णः स समुद्रमाविवेश स इदं विश्वं भुवनं विचष्टे ॥

X 114 (3, 4)

चत्वारोऽस्याःकपर्दाः युवतिरथ भवेन्नूतना नित्यमेषा
माया वा पेशला स्यात् अघटनघटनापाटवं याति यस्मात् ।
स्यादारम्भे घृतास्या श्रुतिभववयुनान्येवमाच्छादयन्ती
तस्यामेतौ सुपर्णाविव परपुरुषौ तिष्ठतोऽर्थप्रतीत्या ॥ २६ ॥

अस्याः - இந்த மாயைக்கு चत्वारः - நான்கு कपर्दाः - விசேஷ மஹிமைகள் இருக்கின்றன:- (1) एषा - இந்த माया - மாயையானது युवतिः - யௌவனமுள்ளது; अथ - அதினால் नित्यं - எப்பொழுதும் नूतना - புதிதாகவே भवेत् - இருக்கும் (2) यस्मात् - எதினால் अघटन-घटना-पाटवं - சேர்க்க முடியாததை - சேர்த்து வைப்பதில் - ஸாமர்த்தியத்தை याति - அடைந்திருக்கிறதோ (அதினால்) पेशला वा - மிகவும் ஸாமர்த்தியசாலியாகவும் स्यात् - இருக்கும் (3) आरम्भे - ஆரம்பத்தில் घृत - आस्या - நெய்யையுடைய வாயுள்ளதாகவும் (மிகவும் மனோஹரமாயுள்ளதாக) स्यात् - இருக்கும் (4) श्रुति-भव-वयुनानि - வேதத்தில் - உள்ள - அறிவுகளை एवं - இவ்விதம் आच्छादयन्ती - நன்கு மறைப்பதாகவும் இருக்கும். तस्यां - அந்த மாயையில் एतौ - இந்த पर-पुरुषौ - ஈசுவரனும் - ஜீவனும், अर्थ-प्रतीत्या - பதார்த்தங்கள் - தெரிவதினால்,

सुपर्णौ-(நல்ல இறக்கைகளுடைய) பக்ஷிகள் इव-போல், स्थितः-இருக்கிறார்கள்.

மாயை என்பது பாவபதார்த்தம் என்பது, மாத்திரமல்ல அதில் விசேஷமான மஹிமைகளும் உண்டு என்று அம் மஹிமைகளை நான்கு விதமாக எடுத்துச்சொல்கிறார்.

1. மாயை அனாதியாயிருந்தபோதிலும் அதற்கு கிழட்டுத் தனமே கிடையாது. அது எப்பொழுதும் புதிதுபோலவேதான் தோன்றிக்கொண்டிருக்கும். அந்தத் தோற்றத்தில் பலவிதமாய் வைசித்திரியம் இருக்கின்றது என்பது மாத்திரமில்லை. அதே அனுபவம் திரும்பத்திரும்ப ஏற்பட்டாலும் அலுத்துப்போகாது.

2. எதெல்லாம் ஸாத்தியமில்லையென்று ஸாதாரணமாக நினைக்கிறோமோ அதையெல்லாம் செய்துகாட்டும் யோக்கியதை மாயைக்கு இருக்கிறது

3. மாயை முதலில் மிகவும் நம் மனஸை இழுக்கும் தன்மை யுடன் இருக்கும். பிறகுதான் அது நம்மை ஏமாற்றிவிட்டது, படுகுழியில் தள்ளி விட்டது, என்ற பிரக்ஞை ஏற்படும்.

4. வேத சாஸ்திரங்களை நன்கு பயின்றிருப்பவனைக் கூட அது மயக்கி அவைகளில் சொல்லியிருக்கிற விஷயங்களை இவன் சரியாக அர்த்தம் செய்து கொள்ளாமலோ மறந்துவிடும்படியோ செய்துவிடும்.

இவ்வித மஹிமையுள்ள மாயையின் ஸம்பந்தமுள்ளவர் களாகவேதான் ஜீவனும் ஈசுவரனும் இருக்கிறார்கள். அவர் களுக்குள் ஜீவன் மாயைக்குப் பராதீனனாயும், ஈசுவரனுக்கு மாயை பராதீனமாயும் இருக்கிறதினால்தான் வித்யாஸம், இருவரும் சைதன்ய ஸ்வரூபமாயிருப்பதினால், உலகத்திலுள்ள பதார்த்தங்களை தங்கள் அறிவிற்கு விஷயமாக்கிக்கொள்ள முடிகிறது என்ற அம்சத்தை अर्थप्रतीत्या என்ற பதத்தினால் குறிப் பிட்டிருக்கிறார். வெறும் ஸாக்ஷியாக மாத்திரம் பார்த்துக்கொண்டு அறிகிறவர் ஈசுவரன், அதிலேயே ஈடுபட்டு ஸுக துக்கங்களை அனுபவிப்பவன் ஜீவன். இருவருமே மாயையை ஆசிரயித்திருப் பதால் அவ்விருவரையும் சேர்த்து ஒரு மரத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பக்ஷிகளைப்போல என்று சொல்லப்பட்டிருக்கிறது, இதே திருஷ்டாந்தம் முண்டகோபநிஷத்திலும் இருக்கிறது.

द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते ।
तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति अनश्नन्नन्योऽभिचाकशीति ॥ III 1 (1).

(27)

ஈசுவரன் ஜீவன் இருவருமே மாயையை ஆசிரியத்திருந்த போதிலும் அவ்விருவர்களுக்குள் உள்ள வித்யாஸத்தை அடுத்த சுலோகத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

एकस्तत्रास्त्यसङ्गः तदनु तदपरोऽज्ञानसिन्धुं प्रविष्टो
विस्मृत्यात्मस्वरूपं स विविधजगदाकारमाभासमैक्षत् ।
बुद्ध्याऽन्तर्यावदैक्षत विसृजति तमजा सोऽपि तां एवमेकः
तावत् विप्रास्तमेकं कथमपि बहुधा कल्पयन्ति स्ववाग्भिः ॥

तत्र-அவ்விருவர்களில் एकः-ஒருவர் (ஈசுவரன்) असङ्गः-பற்றுதலில்லாதவராக अस्ति-இருக்கிறார். तदनु-அதன்பிறகு तत - अपरः - அவருக்கு-வேறுயுள்ளவன் (ஜீவன்) अज्ञान-सिन्धुं-அறியாமையாகிற-ஸமுத்திரத்தில் प्रविष्टः-மூழ்கினவனாய் आत्म-स्वरूपं - தன்னுடைய-வாஸ்தவமான ஸ்வரூபத்தை विस्मृत्य-மறந்துவிட்டு सः-அவன் विविध-जगत्-आकारं-பலவித-உலக-ரூபமாயுள்ள आभासं-தோற்றத்தை ऐक्षत् - பார்க்கிறான். (அவனே) यावत्-எப்பொழுது अन्तः - தனக்குள்ளே बुद्ध्या - நிர்மலமான புத்தியினால் ऐक्षत-பார்க்கிறானோ, (அப்பொழுது) तं-அவனை अजा-ஆதியற்ற மாயை विसृजति-விட்டு விலகி விடும்; सः अपि- அவனுங்கூட तां-அந்த மாயையைவிட்டு (விலகிவிடுவான்) एवं-இவ்விதமாக तावत्- அப்பொழுது एकः-ஒருவனாகவேயிருப்பான். एकं-இவ்விதம் ஒருவனாயிருக்கிற तं- அவரை विप्राः-வேதமறிந்த பிராஹ்மணர்கள் स्व-वाग्भिः-தங்களுடைய - வார்த்தைகளினால் कथं अपि-எப்படி எப்படியோ बहुधा - பலவிதமாக कल्पयन्ति - கல்பிக்கிறார்கள்.

முண்டகோபநிஷத்தில் இவ்விருவர்களுக்குள் ஜீவன் ஸுக துக்க ரூபமான பலனை அனுபவிக்கிறானென்றும் ஈசுவரன்

அனுபவிக்காமல் பார்த்துக்கொண்டு மாத்திரம் இருக்கிறரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதே விஷயத்தை இங்கே சொல்லும் போது ஒருவன் அக்ஞான ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கிறன் என்றும் மற்றெருவர் எவ்வித பற்றுதலுமில்லாமலிருக்கிறரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விருவரும் தனித்தனியென்று எண்ணிவிடக்கூடாது. சைதன்யம் என்பது ஒன்றுதான். அதுவே வெளிப் பார்வையுடன் உலகத்தில் ஈடுபட்டுக்கொண்டிருக்கு மாறல் ஜீவன் எனப்படுகிறது. உள்ளேயிருக்கும் ஆத்ம தத்வத்தை அறிந்துவிட்டால் அந்த ஜீவனே சுத்த சைதன்யமாய் விளங்குகிறன். அப்பொழுது மாயை அவனை கட்டுப்படுத்தாது. மாயை விலகிவிடுகிறபடியால் 'இரண்டு' என்கிற வியவஹாரத் திற்கும் இடம் கிடையாது. இவ்விதம் வாஸ்தவமாக ஒன்றுகவே இருக்கும் பிரஹ்ம தத்வம் நன்கு மனஸில் பதியவேண்டியதற்காக அதையே பலவிதமாக பெரியோர்கள் எடுத்துச்சொல்கிறர்கள். एकं सत् विप्रा बहुधा वदन्ति என்ற மந்திரத்தின் தாத்பர்யத்தை இந்த சுலோகத்தின் நான்காவது பாதத்தில் ஆசார்யார் கண்டிருக்கிறர் அவ்விதம் எடுத்துச்சொல்வதினுல் அப் பெரியார்களுக்கு பிரஹ்ம சைதன்யம் பலவிதமென்ற தாத்பர்யம் கிடையாது. அவர்கள் பலவிதமென்று சொல்லிவிட்டதாகக் கிரஹிப்பதும் பிசகு.

(28)

முன் 24-வது சுலோகத்தில் ஆத்மாவிற்கு வாஸ்தவத்தில் பந்தமோ மோக்ஷமோ கிடையாது என்று சொல்லப்பட்டது. அப்படியானுல் ஜனன மரணம், ஸுக துக்கம் ஆகிய ஸம்ஸாரம் யாருக்கு? என்ற கேள்வி ஏற்படக்கூடுமானதினுல் அதற்கு, ஆத்மாவிற்கு உபாதியாயிருந்து கொண்டு, ஆத்மாவை ஜீவனுகத் தோன்றும்படி செய்யும் மாயாகார்யமான அந்த:கரணத்திற்குத் தான் ஸம்ஸாரமே தவிர ஆத்மாவிற்கு இல்லையென்று, பதில் சொல்கிறர்.

नायाति प्रत्यगात्मा प्रजननसमये नैव यात्यन्तकाले
यत् सोऽखण्डोऽस्ति लिङ्गं मन इह विशति प्रव्रजत्यूर्ध्वमर्वाक् ।
तत्र कार्श्यं स्थूलतां वा न भजति वपुषः किं तु संस्कारजाते
तेजोमात्रा गृहीत्वा व्रजति पुनरिहायाति तैस्तैः स हैव ॥ २८ ॥

प्रत्यक्-आत्मा - உள்ளேயிருக்கிற-ஆத்மா (சுத்த சைதன்யம்) प्रजनन-समये-பிறக்கும்-போது (கர்ப்பம் ஏற்படும்போது) न आयाति வருவது கிடையாது; अन्त-काले-கடைசி-காலத்தில் (மரணஸமயத்தில்) न एव याति-போவதும் கிடையாது; यत् - ஏனென்றால் सः - அவர் अखण्डः-துண்டுபடாதவராக (பரிச்சின்னராகவில்லாமல்) अस्ति-இருக்கிறார். लिङ्ग-லிங்க சரீரத்துடன் சேர்ந்த मनः-அந்தஃகரணம் (தான்) इह - இங்கே (இந்த ஸ்தூல சரீரத்தில்) विशति-பிரவேசிக்கிறது; ऊर्ध्वं-மேலே (ஸ்வர்க்காதி லோகங்களுக்கும்) अवाक् - கீழே (கீழ் லோகங்களுக்கும்) प्रव्रजति-போகிறது. वपुषः-ஸ்தூல சரீரத்தினுடைய कार्श्यं-மெலிந்திருக்கும் தன்மையையோ स्थूलतां वा - பருத்திருக்கும் தன்மையையோ तत् - அது न भजति-அடைகிறதில்லை. किं तु-ஆனால் संस्कार-जाते-(புண்யம், பாபம் என்கிற) இரண்டு ஸம்ஸ்கார-கூட்டங்களையும் तेजोमात्राः-தேஜஸ் (முதலிய பஞ்சபூதங்களின்) ஸூக்ஷ்மாம்சங்களையும் गृहीत्वा-எடுத்துக்கொண்டு व्रजति-போகிறது; पुनः-மறுபடியும் इह-இங்கே तैः तैः सह एव-அந்த அந்த ஸம்ஸ்காரங்களுடனேயே आयाति-வருகிறது.

ஸர்வ வியாபகமாயிருக்கும் சுத்த சைதன்யத்திற்கு எங்கேயும் போவது வருவது என்ற வியவஹாரம் ஸாத்யமில்லை. அந்த சைதன்யத்தை பரிச்சின்னப்படுத்தி சிறிதாகக் காட்டும் உபாதியான ஸூக்ஷ்மசரீரந்தான் இங்கே பிறப்பு, இறப்பு, ஸ்வர்க்க நரகாதிலோக அனுபவம், மனிதபக்ஷிமிருகாதி ஜன்மம், முதலியவைகளை அடைகிறது. அதை ஸ்தூல தேஹத்திலுள்ள மெலிவு, பருமன் முதலியவை பாதிக்காதபோதிலும், அது இந்த சரீரத்தை விட்டுப் போகும்போது தனக்கு ஆசிரயமாய் பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்மமான அம்சங்களை எடுத்துக் கொண்டே போகிறது. அத்துடன் அதுவரை செய்யப்பட்டிருக்கும் புண்ய பாப கர்மாக்களின் ஸம்ஸ்காரங்களும் கூடவே வரும். அந்த ஸூக்ஷ்மாம்சங்களே போகுமிடத்தில் ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கு வேண்டிய புதிய ஸ்தூல சரீரத்திற்கு பீஜமாய் இருக்கின்றன. அந்த ஸம்ஸ்காரங்களே போகுமிடத்தில் புதிய

கர்மாக்களைச் செய்வதற்கும் அதன் பலனான ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கும் காரணமாயிருக்கின்றன. இவ்விஷயம் பிரஹ்மஸூத்திரத்தில்,

तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः

என்று ஆரம்பிக்கும் அதிகரணத்திலும் (3-1-1) பிருஹதாரண்யக உபநிஷத் IV-4.

स एतास्तेजोमात्राः समभ्याददान .... । तं विद्याकर्मणी समन्वारभेते पूर्वप्रज्ञा च ।

என்கிற பிரகரணத்திலும் உள்ள பாஷ்யத்தில் விஸ்தாரமாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

(29)

உபாதியான அந்தஃகரண விசிஷ்டமான லிங்கசரீரம்தான் லோகாந்தரம் போகிறதென்பதற்கு பிரமாணமாக ரிக்வேதத்தில் உள்ள ஒரு கதையை ஆசார்யார் உதாஹரிக்கிறார். ஸநாதி என்ற ஒரு அரசனுக்கு பந்து, ஸுபந்து, சுருதபந்து, விப்ரபந்து என்று நான்கு ஸஹோதரர்கள் புரோஹிதர்களாக இருந்தார்கள். ஒரு ஸமயம் அரசனின் இஷ்டப்படி ஆபிசார கர்மாவைச் செய்ய இவர்கள் ஸம்மதிக்கவில்லையானதினால் வேறு இரண்டு மாயாவிகளை அவன் புரோஹிதர்களாக ஏற்படுத்திக்கொண்டான். அவர்கள் ஆபிசாரப்பிரயோகம் செய்து அந்த நால்வரில் ஸுபந்து என்பவரைக் கொன்றுவிட்டார்கள். அதன்பேரில் மற்ற மூவரும் சேர்த்து வேத மந்திரங்களால் அவரை மறுபடியும் யமலோகத்திலிருந்து அழைத்துவிடுகிறார்கள். அப்படி அழைக்கும் மந்திரங்களில்

यत् ते यमं वैवस्वतं मनो जगाम दूरकम् ।
तत् त आवर्तयामसीह क्षयाय जीवसे ॥ X 58 (1)

"உன்னுடைய எந்த மனஸானது வெகுதூரத்திலிருக்கும் ஸூர்யன் குமாரரான யமனைப் போயடைந்ததோ, அந்த உன் மனஸை இங்கே வந்திருந்து ஜீவிக்கவேண்டியதற்காக திருப்பிக் கூப்பிடுகிறோம்" என்ற மந்திரம் இருக்கிறது. அதை ஆசார்யார் சுலோக ரூபத்தில் எடுத்துச்சொல்கிறார் :—

आसीत् पूर्वं सुबन्धुः भृशमवनिसुरो यः पुरोधाः सनातेः
भ्रात्रात् कूटाभिचारात् स खलु मृतिमितः तन्मनोऽगात् कृतान्तम् ।
तद्भ्राता श्रौतमन्त्रैः पुनरनयदिति प्राह सूक्तेन वेदः
तस्मादात्माभियुक्तं व्रजति ननु मनः कर्हिचिन्नान्तरात्मा ॥ २९ ॥

पूर्वं – முன்னொரு காலத்தில் सनातेः – ஸநாதியென்றவனுக்கு पुरोधाः – புரோஹிதராக भृशं – மிகவும் கியாதி பெற்றவரான सुबन्धुः – ஸுபந்து என்ற यः – எந்த अवनिसुरः – பிராஹ்மணர் आसीत् – இருந்தாரோ, सः – அவர் भ्रात्रात् – ஒரு பிராஹ்மணன் செய்த कूट -अभिचारात्- கபடமாகச் செய்த – ஆபிசாரப்பிரயோகத்தினால் मृतिं – மரணத்தை इतः खलु – அடைந்தாரல்லவா! तत् - मनः – அவருடைய மனஸ் कृतान्तं – யமனை अगात् – போய்ச்சேர்ந்தது. तत् - भ्राता – அவரது ஸஹோதரர் श्रौत – मन्त्रैः – வேத மந்திரங்களினால் पुनः – மறுபடியும் अनयत् – கொண்டுவந்தார் इति – என்று वेदः – வேதமானது सूक्तेन – ஒரு ஸூக்தத்தின் மூலம் प्राह – சொல்லுகிறது. तस्मात् – ஆகையால் आत्म – अभियुक्तं – ஆத்மாவுடன் சேர்ந்த मनः – மனஸ் व्रजति – போகிறது ननु – என்று ஏற்படவில்லையா? कर्हिचि –त् ஒருக்காலும் अन्तरात्मा – உள்ளேயிருக்கும் ஆத்மா (சுத்தசைதன்யம்) न – போவதில்லை.

(30)

"ஆத்மாவுடன் சேர்ந்த" என்றால் ஆத்மாவின் பிரதிபிம்பஸஹிதம் என்று மாத்திரம் தாத்பர்யம். உள்ளேயுள்ள சுத்த சைதன்யம் மனஸில் பிரதிபிம்பிக்கிறபடியால் மனஸில் உள்ள சேஷ்டைகள் சைதன்யத்திலும் இருப்பதாகத் தோன்றுகின்றன. வாஸ்தவத்தில் அச்சேஷ்டைகள் பிம்பமான சைதன்யத்தில் ஸம்பந்தப்பட்டவையல்லவென்பதை திருஷ்டாந்தம் மூலமாக அடுத்த சுலோகத்தில் சொல்கிறார்:—

एको निष्काम आत्मा प्रचलति मनसा धावमानेन तस्मिन्
तिष्ठन्नग्रेऽथ पश्चान्नहि तमनुगतं जानते चक्षुराद्याः ।

यद्वत् पाथस्तरङ्गैः प्रचलति परितो धावमानैस्तदन्तः
प्राक् पश्चादस्ति तेषां पवनसमुदितैस्तैः प्रशान्तैर्यथावत् ॥ ३० ॥

एकः – ஒருவராக निष्कम्पः – அசைவற்றவராயிருக்கும் आत्मा – ஆத்மா धावमानेन – ஓடுகிற मनसा – மனஸுடன் (சேர்ந்து) प्रचलति - சேஷ்டிக்கிறார்; तस्मिन् – அந்த மனஸில் अग्रे – முன்னாலேயும் अथ – அப்படியே पश्चात् – பின்னாலேயும் तिष्ठन् – இருந்துகொண்டு இருக்கிறார். (ஆனால்) अनुगतं – கூடவேயிருந்துவருகிற तं – அவரை चक्षुराद्याः – கண் முதலிய இந்திரியங்கள் न हि जानते – அறிகிறதேயில்லை. यद्वत् – எதுபோலேயென்றால், परितः – நாலா பக்கங்களிலும் पवन-समुदितैः – காற்றினால் கிளப்பப்பட்டு धावमानैः – ஓடுகிற तरङ्गैः – அலைகளுடன் (சேர்ந்து) पाथः – ஜலம் प्रचलति – நன்கு அசைகிறது; तत्-अन्तः – அந்த அலைகளுக்குள்ளேயும் तेषां – அவைகளுக்கு प्राक् – முன்னாலும் पश्चात् பின்னாலும் अस्ति – இருந்துவருகிறது; प्रशान्तैः - நன்கு அடங்கிவிட்ட तैः – அந்த அலைகளுடன் यथावत् – எப்படியிருக்கவேண்டுமோ அப்படி (அசைவற்றதாக இருந்துவிடுகிறது).

அலைகள் எவ்விதம் கிளம்பி ஓடினாலும் ஓடாமலிருந்தாலும் அவைகளிலுள்ள ஜலம் எவ்வித மாறுதலையுமடையாமல் எப்படி ஒரே மாதிரி இருந்து வருகிறதோ, அப்படியேதான் மனஸில் ஏற்படக்கூடிய பலவித விருத்திகளினால் அந்த மனஸில் பிரதி பலிக்கும் ஆத்மாவிற்கு எவ்வித பாதகமுமில்லை; அது எப்பொழுதும்போல் ஒரேமாதிரியாகத்தான் இருக்கும், மனஸிற்கும் வெளிப்பட்டவைகளாகிய இந்திரியம் முதலியவை மனோவிருத்திகள் எல்லாவற்றிலும் தொடர்ந்து பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மாவை அறிந்துகொள்ள சக்தியற்றவை.

(31)

அவ்விதம் சலனமற்று இருக்கவேண்டிய ஆத்மா எவ்விதம் வெளிப்பிரபஞ்சத்தில் ஈடுபட்டு ஸம்ஸார ஸுகதுக்கங்களை அனுபவிக்கும்படி ஏற்பட்டது என்பதை படிப்படியாக பிருஹ தாரண்யக உபநிஷத்தில் கண்ட,

आत्मैवेदमग्र आसीदेक एव, सोऽकामयत जाया मे स्यात्, अथ प्रजायेय, अथ वित्तं मे स्यात्, अथ कर्म कुर्वीय, इति … … स यावदप्येतेषां एकैकं न प्राप्नोति अकृत्स्न एव तावन् मन्यते …. ॥ I 4 (17)

என்ற வாக்கியத்தையனுஸரித்து வர்ணிக்கிருர்:-

एकाक्यासीत् स पूर्वं मृगयति विषयान् आनुपूर्व्याऽन्तरात्मा
जाया मे स्यात् प्रजा वा धनमुपकरणं कर्म कुर्वन् तदर्थम्।
क्लेशैः प्राणावशेषैः महदपि मनुते नान्यदस्माद्गरीय-
स्त्वेकालाभेऽप्यकृत्स्नो मृत इव विरमत्येकहान्याऽकृतार्थः ॥ ३१ ॥

सः - அந்த अन्तरात्मा - உள்ளேயுள்ள ஆத்மா पूर्वं - முதலில் एकाकी - ஒருவராகத்தனித்து आसीत् - இருந்தார். आनुपूर्व्या - பிறகு வரிசையாக विषयान् - விஷயங்களை मृगयति - தேடுகிருர் "मे - எனக்கு जाया - மனைவி स्यात् - இருக்க வேண்டும். प्रजा वा - (அவள் மூலமாய்) பிரஜையும் (வேண்டும்). उपकरणं - (எல்லாரையும் போஷணம் செய்வதற்காக) உபயோகிக்கும்படி धनं - செல்வம் (வேண்டும்)." तत् - अर्थं - இவைகளுக்காக प्राण-अवशेषैः - பிராணனை மாத்திரம்-மீதமாக வைத்துக் கொண்டு क्लेशैः - பலவித துன்பங்களுடன் कर्म - வேலை कुर्वन् - செய்து கொண்டு महत् - अपि - (வாஸ்தவத்தில்) பெரிதாயிருந்த போதிலும் अन्यत् - வேறு எதையும் अस्मात् - இதைவிட गरीयः - பெரிதாக न मनुते - எண்ணுவதில்லை. तु - அத்துடன் एक-अलाभे-अपि - (இவைகளில் ஏதேனும்) ஒன்று - கிடைக்கா விட்டாலும்கூட अकृत्स्नः - குறையுள்ளவனுக (மூளியாக) ஆகிவிடுகிருன். एक - हान्या - ஒன்று-குறைந்து விட்டால் अकृतार्थः - செய்ததெல்லாம் பிரயோஜனமற்றதாகி விட்டதென்று எண்ணினவனுய் मृतः इव - இறந்துவிட்டவன் போல विरमति - ஓய்ந்து போகிருன்.

தான் பரிபூர்ணமானவன், எவ்வித குறையுமற்றவன், ஸுக ஸ்வரூபியாயிருப்பவன், என்பதையெல்லாம் மாயையினால் ஆத்மா மறந்தவுடன், தன்னை பூர்ணமாக்கிக்கொள்ள, தனக்கு உள்ள குறையை நிவர்த்திசெய்துகொள்ள, தனக்கு ஸுகத்தை ஸம்பாதித்துக்கொள்ள, அவசியமிருப்பதாக நினைத்துவிடுகிறான். அதன் பேரில் மனைவி, மக்கள், சொத்து, உத்தியோகம் முதலிய வைகளை தேடும்படி ஏற்படுகிறது. அப்படித் தேடியடைய பலவிதத் துன்பங்களுக்குள்ளாகி வேலை செய்தும் இவைகளில் ஏதேனும் ஒன்று கிடைக்காவிட்டாலும், கிடைத்தது கையை விட்டுப் போய்விட்டாலும், தானே போய்விட்டதாக பாவித்து அயர்ந்து போகிறான். இவைகளைவிட மேலான புருஷார்த்தங்கள் இருப்பதாக வேதமோ பெரியோர்களோ எடுத்துச்சொன்னாலும் கூட, இதிலுள்ள பிடிமானத்தினால் அதில் நம்பிக்கை ஏற்படுவது இல்லை. மாயைக்கு இவ்வளவு பலமிருக்கிறது.

(32)

மாயை எவ்வளவு பெரிதாக இருந்தாலும், ஸர்வ வியாபக மாய் ஸர்வசக்தமாய் ஸர்வக்ஞமாயுள்ள ஆத்ம தத்வத்தை மறைக்கமுடியுமா? என்றால் ஸூர்ய மண்டலத்தைவிட எவ்வளவோ சிறியதாகிய மேகம் ஸூர்யனை மறைத்து விடுகிற தில்லையா? என்கிறார். ஆனால் வாஸ்தவத்தில் ஸூர்யனை நம் கண்ணுக்குத் தெரியவொட்டாமல் மாத்திரம் மேகம் செய்ய லாமேதவிர, ஸூர்யனைப் பிரகாசமற்றதாகச்செய்ய யோக்கியதையற்றது. மேகம் இருக்கிறதென்று நமக்கு தெரிவதே ஸூர்யப் பிரகாசத்தினால்தான் என்பதை மறந்துவிடக்கூடாது என்கிறார் :-

नासीत् पूर्वं न पश्चादतनुदिनकराच्छादको वारिवाहो
दृश्यः किं त्वन्तराऽसौ स्थगयति स दृशं पश्यतो नार्कबिम्बम् ।
नो चेदेवं विनाऽर्कं जलधरपटलं भासते तर्हि कस्मात्
तद्वत् विश्वं पिधत्ते दृशमथ न परं भासकं चालकं स्वम् ॥ ३२ ॥

अतनु - दिनकर - आच्छादकः - மிகவும் பெரியதான - ஸூர்யனை - பூராவும் மறைக்கக்கூடிய वारिवाहः - மேகு

மானது पूर्वं முன்னாலும் न आसीत्-இருந்ததில்லை; पश्चात्-பின்னாலும் न-இருக்கப்போவதில்லை. किं तु-ஆனால் अन्तरा-மத்தியில்தான் असौ-அது दृश्यः-பார்க்கப்படுகிறது. सः-அது पश्यतः-பார்க்கிறவனுடைய दृशं-கண்ணைத்தான் स्थगयति-தடுக்கிறது; अर्क-बिम्बं-ஸூர்யனுடைய-பிம்பத்தை न-பாதிக்கிறதில்லை. एवं-இவ்விதம் (ஸூர்யனை பாதிக்கிறதில்லையென்பது) नो चेत्-இல்லையானால், तर्हि-அப்பொழுது जलधर-पटलं-மேக-வரிசையானது अर्कं-ஸூர்யனை विना-தவிர कस्मात्-எதினால் (வேறு எந்தப்பிரகாசத்தினால்) भासते-பிரகாசிக்கிறது (இருப்பதாகத் தெரிகிறது)? तद्वत्-அதைப்போலவே, विश्वं-(மாயா கார்யமான இந்த) பிரபஞ்சம் दृशं-ஜீவனுடைய பார்வையை पिधत्ते-மூடிவிடுகிறது (பார்க்கவொட்டாமல் தடுக்கிறது); अथ-ஆனால் भासकं-தன்னை பிரகாசிக்கும்படிச் செய்வதாயும் चालकं-தன்னை அசையும்படிச் செய்வதாயும் உள்ள परं-மேலான (பரம் பொருளான) स्वं-ஆத்மாவை न-மூடிவிடுகிறதில்லை.

ஸூர்யனுக்கு வெகுதூரம் கீழே மிகச்சிறியதாக இருக்கும் மேகம், ஸூர்யனுடைய பிரகாசத்தை கொஞ்ச தூரத்திற்கு நன்கு தெரியவொட்டாமல் செய்யலாமே தவிர, அந்த தூரத்திற்கு வெளியிலும் மேலேயும் பிரகாசத்தை தடுக்க முடியாது. அந்த கொஞ்ச தூரத்திற்குக் தெரியாமலிருப்பதும் மேகத்தின் நிழலில் இருந்துகொண்டு பார்ப்பவனுடைய பார்வையில்தான், வேறிடங்களில் இருப்பவர்களுக்கு ஸூரிய பிரகாசம் நன்றாகத்தெரியும். இந்த மேகமும் முன்னாலுமில்லை. பின்னாலுமில்லை. நடுவில் சிறிது காலம் தோன்றி மறைந்து விடுகிறது. இந்த மேகம் எவ்விதத்திலும் ஸூர்யனை மங்கச் செய்யாது. ஸூர்யனுக்கு பிரகாசமேயில்லையென்று செய்து விடுவது ஸாத்தியமேயில்லை. அப்படி ஸாத்தியமாயிருந்தால் மேகம் என்று ஒன்று இருக்கிறதென்பதையே யாராலும் அறிய முடியாது. ஆகையால் ஸூர்யனை மறைக்கும் மேகமும் ஸூர்யனால்தான் பிரகாசிக்கிறது. தவிரவும், பூமியிலும் ஸமுத்திரத்திலுமுள்ள ஜலத்தை தன் கிரணங்களால் வற்றடித்து ஆவியாக்கி மேகத்தை உண்டு பண்ணினதும் ஸூர்யன்தான்.

அதே மாதிரி, ஜகத் உண்டாவதும், இருப்பதாகத் தோன்றுவதும், ஸகலவித வியவஹாரங்களை நடத்துவதும், ஆத்மாவினுல் தான். தனக்குக் காரணமாயும், பிரகாசமாயும், பிரவர்த்தகமாயுமுள்ள ஆத்மாவை மறைத்துவிட ஜகத்திற்கு யோக்கியதை கிடையாது. ஆனுல் ஜகத்தையே பார்த்துக்கொண்டிருப்பவனுக்கு ஆத்ம தத்வம் நன்கு விளங்காது.

(33)

ஜகத் இருப்பதாய்த் தோன்றுவதினுல் மாத்திரம் ஸத்யமென்று ஆகாது, அது வெறும் தோற்றமே என்பதை நன்கு விளக்குவதற்காக ஸ்வப்ன காலத்திலுள்ள அனுபவத்தை திருஷ்டாந்தமாக ஆசார்யார் எடுத்துச்சொல்கிருர்:—

भुञ्जानः स्वप्नराज्यं ससकलविभवो जागरं प्राप्य भूयो
राज्यभ्रष्टोऽहमित्थं न भजति विषमं तन्मृषा मन्यमानः ।
स्वप्ने कुर्वन् अगम्यागमनमुखमघं तेन न प्रत्यवायी
तद्वत् जाग्रद्दशायां व्यवहृतिमखिलां स्वप्नवत् विस्मरेत् चेत् ॥ ३३ ॥

स - सकल - विभव - ஸகலவித - விபவங்களுடன் கூடியவனுக स्वप्न - राज्यं - ஸ்வப்னத்தில் காணப்படும் - ராஜ்யத்தை भुञ्जानः-அனுபவிக்கிறவன் भूयः-மறுபடியும் जागरं - விழிப்பை प्राप्य - அடைந்த பிற்பாடு, तत्-அந்த ராஜ்யத்தை मृषा - பொய்யென்று मन्यमानः - அறிந்தவனுகி "राज्य-भ्रष्टः-ராஜ்யத்தை-இழந்து விட்டவன் अहं-நான்" इत्थं - என்று विषमं - துக்கத்தை न भजति - அடைகிறதில்லை. स्वप्ने - ஸ்வப்னத்தில் अगम्या - गमन - मुखं - அகம்யா-கமனம்-முதலான अघं - பாப கார்யத்தை कुर्वन् - செய்கிறவன் तेन- அந்த பாப கார்யத்தினுல் प्रत्यवायी - தோஷமுள்ளவனுக (பிராயச்சித்தம்செய்யவேண்டியவனுக) न- ஆகிறதில்லை. तद्वत् - அதைப்போலவே, जाग्रत् - दशायां - விழிப்பு-ஸமயத்தில் உள்ள अखिलां-எல்லா व्यवहृतिं - வியவஹாரத்தையும் स्वप्नवत् - ஸ்வப்னத்தை மறப்பதுபோல विस्मरेत् चेत्-மறந்து விடுவானேயானுல் (இதுவும்

பொய்தான் என்று அறிந்து விடுவானேயானால்) எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டான்; துக்கமோ தோஷமோ ஏற்படாது.

ஸ்வப்ன காலத்தில் அனுபவிக்கப்படுகிற லாபமோ நஷ்டமோ இரண்டும் விழிப்பு வந்தவுடன் பொய்தான் என்ற அறிவு ஏற்பட்டு விடுவதால், அதைப்பற்றி ஸந்தோஷமோ துக்கமோ அடைவது கிடையாது. அப்படியே, அந்த ஸமயத்தில் செய்யப் படும் புண்ணியமோ பாபமோ இரண்டும் பொய்தான் என்ற அறிவு விழித்துக்கொண்டவுடன் ஏற்படுவதால், அதற்காக மேன்மையோ இழிவோ பச்சாத்தாபமோ பிராயச்சித்தமோ ஏற்படுவதற்கும் நியாயமில்லை. அதேமாதிரி ஜாக்ரத் காலத்தில் உலகத்தில் செய்யும் புண்ணிய பாபங்களும் அனுபவிக்கும் ஸுக துக்கங்களும் பொய்தான் என்று, அவித்யையாகிற தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவருக்கு, அறிவு ஏற்பட்டு விடுமானதினால் அவைகளால் ஆத்மாவிற்கு எவ்வித மாறுதலும் ஏற்படக்கூடியதில்லை. அவர் எப்பொழுதும்போல் நிர்விகார மாய் தன் நிலையிலேயே இருந்து வருகிறார்.

(34)

ஸ்வப்ன காலத்திய அனுபவத்தைப்போல ஜாக்ரத் காலத்திய அனுபவத்தைப் பார்க்க முடியுமா? என்றால், இரண்டிற்கும் உள்ள ஸமானமான அம்சத்தை எடுத்துக் காட்டுகிறார்:—

स्वप्नावस्थानुभूतं शुभमथ विषमं तन्मृषा जागरे स्यात्
जाग्रत्यां स्थूलदेह व्यवहृति विषयं तन्मृषा स्वापकाले ।
इत्थं मिथ्यात्वसिद्धावनिशमुभयथा सज्जते तत्र मूढः
सत्ये तद्भासकेऽस्मिन्निह हि कुत इदं तन्न विद्मो वयं हि ॥ ३४ ॥

स्वप्न-अवस्था-अनुभूतं – ஸ்வப்ன-தசையில்-அனுபவிக்கப் படும் शुभं – நல்லது अथ - அப்படியே विषमं – கெட்டது எதுவோ तत् – அது जागरे-விழிப்பு ஸமயத்தில் मृषा – பொய் யாகவே स्यात् - ஆகும். (அப்படியே) जाग्रत्यां – விழிப்பு

ஸமயத்தில் स्थूलदेह-व्यवहृति-विषयं-ஸ்தூல தேஹத்தின்-வியவஹாரத்திற்கு - விஷயமானதும் (நல்லதும் கெட்டதும்) எதுவோ तत्-அது स्वाप-काले- தூங்கும்-ஸமயத்தில் (ஸ்வப்னம் காணும்போது) मृषा-பொய்யே. इत्थं-இவ்விதமாக अनिशं - எப்பொழுதும் उभयथा - இரண்டு வகையிலும் मिथ्यात्व-सिद्धौ-பொய்த்தன்மையே என்று-தீர்மானமாகயிருக்கையில் तत्र-அதில் मूढः-மூடனுயிருந்து கொண்டு सज्जते - பற்றுள்ளவனுகயிருக்கிருன்; तद्-भासके - அவ்விரண்டையும்-தெரியும்படி செய்து கொண்டு सत्ये - வாஸ்தவமாயிருக்கிற अस्मिन्-இவர் (ஆத்மா) इह-இங்கே இருக்கும்போதே, इदं - இவ்விதம் பற்றுதல் ஏற்படுவது कुतः-எந்த காரணத்தினுல்? तत्-அந்த காரணத்தை वयं-நாம் न विद्मः हि-அறியவில்லை.

நன்கு போஜனம் செய்துவிட்டு தூங்குகிறவன் ஸ்வப்னம் காணும்போது, தான் பசியினுல் மிகவும் வருந்துவதாக அனுபவிக்கிருன். ஸ்வப்னத்தில் நன்கு போஜனம் செய்தவன் விழித்துக்கொண்டவுடன் பசியினுல் வருந்துகிருன். ஆகையால், ஜாகிரத்தில் இருப்பது ஸ்வப்ன காலத்தில் இல்லாததாக ஆகிவிடுகிறது; ஸ்வப்னத்தில் இருப்பது விழிப்புக் காலத்தில் இல்லாததாக ஆகிவிடுகிறது. இதிலிருந்து இரண்டுமே பொய் தான் என்று ஏற்படுகிறது. ஆனுல் ஜாகிரத் காலத்தில் அனுபவித்தவன்தான் ஸ்வப்ன காலத்திலும் அனுபவிக்கிருனை தால் அவன் இரண்டு காலத்திலும் இருப்பவனுகவேயிக்ருகிருன்; அவன் இல்லையென்று போவதே கிடையாது. இவ்வளவு தெளிவாய் இரண்டு காலத்திலும் இருப்பதாகத் தெரிகிற ஆத்மாவை அறிந்து கொள்ளாமல், தோன்றி மறையும் அம்சங் களில் ஈடுபடுவது மூடத்தனத்தைத்தவிர வேறு என்ன? என்கிருர் ஆசார்யார். அந்த மூடத்தனத்திற்கு என்ன காரணம் என்று ஆலோசித்தால், அந்த மூடத்தனம் காரணத் துடன் ஏற்பட்டிருந்தால் மூடத்தனமேயாகாது. ஆகையால் அதற்குக் காரணம் தேடுவது வீண் பிரயத்தினம் என்று தாத்பர்யம்.

सत्ये तद्भासके अस्मिन् "ஸத்யமாய் பிரகாசப்படுத்துகிற வராய் இவர் இருக்கும்போது" என்று அர்த்தம் செய்யப்பட்டது.

இதையே முன்னுள்ள मूढः "மூடன்" என்ற வார்த்தையுடன் சேர்த்து அன்வயம் செய்தால் "ஸத்யமாய் பிரகாசப்படுத்துகிற வராயுள்ள இவர் விஷயத்தில் மூடனாயிருப்பவன்" என்ற அர்த்தம் கிடைக்கும். அனாத்ம பதார்த்தத்தில் பற்றுதல் ஏற்படுவதற்குக் காரணம் ஆத்மாவை அறியாமலிருப்பதுதான். ஆத்மா இவ்வளவு தெளிவாகத் தெரியும்போது, அது விஷயமாக அறியாமையோ அதன் பலனாக அனாத்மாவில் பற்றுதலுமோ ஏற்படுவதற்கு காரணமேயில்லை என்று தாத்பர்யம்.

(35)

ஜாக்கிரத் காலத்திலேயே ஒரு ஸமயத்தில் அனுபவித்த விஷயம் சில நாட்கள் சென்று மறந்துபோய் விடுகிறது. மறந்து விடுவதினால் அவ்விஷயம் பொய் என்று ஆகுமா? அதைப்போலவே, ஜாக்கிரத் காலத்தில் உள்ள அனுபவம் ஸ்வப்ன ஸமயத்தில் மறந்துபோய் விடுகிறது; அதினால் தான் ஸ்வப்னத்தில் காணவில்லை. இதற்காக அதை பொய் என்று சொல்லிவிடலாமா? என்று கேட்கலாம். இதற்காக, ஜாக்கிரத் அனுபவத்தை மறக்காமலே ஸ்வப்னம் காண்பதும் உண்டு என்பதை ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறார். ஒருவன் ஸ்வப்னம் காணும்போது வெகு நாட்களுக்கு முன்னால் இறந்துபோன பந்துவையோ நண்பனையோ காண்பதுண்டு; அப்பொழுது "இவன் இறந்துபோனவன் அல்லவா?" என்ற ஞாபகமும் இருப்பதுண்டு. அப்படியே இறந்துபோய் விட்டதாக ஒரு பந்துவையோ நண்பனையோ ஸ்வப்னத்தில் காணும்போது "இவன் உயிருடன் அல்லவா இருக்கிறான்?" என்ற ஞாபகமும் இருப்பதுண்டு. ஆகையால், ஞாபக மறதியினால் விபரீதமான தோற்றமேற்படுகிறதென்று சொல்வதற்கில்லை. காரணம் தெரியவில்லையென்று முந்தின சுலோகத்தில் சொன்னது அவ்வளவு சரியல்ல, ஞாபகமறதியைக் காரணமாகச் சொல்லலாமே என்றால், அதுவும் போதுமான காரணமாகாது என்று காட்டுவதற்காக அடுத்த சுலோகம் ஏற்பட்டிருக்கிறது:—

जीवन्तं जाग्रतीह स्वजनमथ मृतं स्वप्नकाले निरीक्ष्य
निर्वेदं यात्यकस्मात् मृतममृतममुं वीक्ष्य हर्षं प्रयाति ।
स्मृत्वाऽप्येतस्य जन्तोः निधनमसुयुतिं भाषते तेन साकं
सत्येवं भाति भूयोऽल्पकसमयवशात् सत्यता वा मृषात्वम् ॥

इह – இங்கே जाग्रति – ஜாகிரத்தில் जीवन्तं – உயிரோடிருக்கும் स्वजनं – தன்-மனிதனை अथ – பிறகு स्वप्नकाले – ஸ்வப்ன காலத்தில் मृतं – இறந்து போனதாக निरीक्ष्य – பார்த்து अकस्मात् – காரணமன்னியில் निर्वेदं – துக்கத்தை याति – அடைகிறான். मृतं – ஜாக்கிரத்தில் வாஸ்தவமாய்) இறந்துபோயிருக்கும் अमुं – இவனை अमृतं – இறந்து போகாதவனாக (உயிருடன் இருப்பதாக) वीक्ष्य – பார்த்து हर्षं ஸந்தோஷத்தை प्रयाति – அடைகிறான். एतस्य இந்த जन्तोः – மனிதனுடைய निधनं மரணத்தையும் असु-युतिं – உயிருடன்-சேர்ந்திருப்பதையும் स्मृत्वा अपि – ஸ்மரித்துங் கூட तेन-साकं – அவனுடன் கூட भाषते – பேசுகிறான். एवं – இவ்விதம் सति இருக்கையில், भूयः-अल्पक-समय-वशात् – அதிக காலம்-ஸ்வல்ப காலம் என்ற காரணத்தினால் सत्यता – (ஜாக்கிரத்திற்கு) உண்மையாயிருக்கும் தன்மையோ मृषात्वं वा – (ஸ்வப்னத்திற்கு) பொய்யாயிருக்கும் தன்மையோ भाति – தோன்றுகிறது.

வெகுநாள் நீடித்திருப்பதினால் ஜாகிரத் ஸத்யமென்றும் சில நிமிஷங்களில் மறைந்து விடுவதினால் ஸ்வப்னம் பொய்யென்றும் தோன்றுகிறதே தவிர, தத்வத்தை விசாரிக்கும்போது இரண்டிற்கும் ஒரே ஸ்வரூபந்தான். அதாவது, இரண்டுமே பொய்தான். ஜாக்கிரத் என்பது நீடித்த தூக்கம், அவித்யையினால் ஏற்பட்டது; ஸ்வப்னம் என்பது குறுகின தூக்கம், நித்ரையினால் ஏற்பட்டது. இவ்வளவுதான் வித்தியாஸம்.

(86)

இவ்வளவு வியக்தமாயிருக்கிற ஜகத் பொய்யான காரணத்திலிருந்து உண்டாயிருக்கமுடியுமா? என்றால், ஒருவன் ஸ்வப்னத்தில் ஸ்திரீ ஸம்போகம் செய்ததாகக் கண்டால், அப்பொழுது வாஸ்தவத்தில் ஸ்திரீயும் இல்லை ஸம்போகமும் இல்லை யென்று இருந்தபோதிலும், சுக்கிரம் திரவித்து வஸ்திரம் அழுக்காகிறதில்லையா? என்று பதில் கேட்கிறார்.

स्वाप्नस्त्रीसङ्गसौख्यादपि भृशमसतो या च रेतश्च्युतिः स्यात्
सा दृष्टा तद्वदेतत् स्फुरति जगदसत्कारणं सत्यकल्पम् ।

स्वप्ने सत्यः पुमान् स्यात् युवतिरिह मृषैवानयोः संयुतिश्च
प्रातः शुक्रेण वस्त्रोपहतिरिति यतः कल्पनामूलमेतत् ॥ ३६ ॥

भृशं असतः-கொஞ்சமேனும் வாஸ்தவமில்லாத स्वाप्न-स्त्री-सङ्ग-सौख्यात् अपि ஸ்வப்னத்தில் தோன்றும்-ஸ்திரீயின் சேர்க்கையினுல் ஏற்படும் - ஸுகம் காரணமாகக்கூட रेतः-च्युतिः-சுக்கிரம்-திரவிப்பது या च-எது स्यात्-இருக்குமோ, सा-அது दृश्या-பார்க்கக் கூடியதாயிருக்கிறது (உண்மையாக இருக்கிறது) तद्वत्-அதைப்போலவே, एतत्-இந்த जगत्-உலகம் असत्-कारणं-ஸத்தில்லாததை-காரணமாயுடையதாயும் सत्यकल्पं-ஸத்தியம் மாதிரி தோற்றமுள்ளதாகவும் स्फुरति-பிரகாசிக்கிறது. यतः-ஏனெனில் स्वप्ने ஸ்வப்னத்தில் पुमान् புருஷன் सत्यः-ஸத்யமாக स्यात्-இருக்கலாம். इह-இங்கே युवतिः-ஸ்திரீ मृषा एव-பொய்தான்; अनयोः இவ்விருவருக்கும் संयुतिः च-சேர்க்கையும் (பொய்தான்). (ஆனுலும்) प्रातः-காலையில் शुक्रेण-சுக்கிரத்தினுல் वस्त्र-उपहतिः-வஸ்திரம்-கெடுக்கப்பட்டிருப்பது (பார்க்கப்படுகிறது) इति-என்ற एतत्-இது कल्पना-मूलं-வாஸ்தவமில்லாத கல்பனையையே காரணமாகவுடையது.

ஸ்வப்ன லோகத்தை அனுபவித்து பின்னுல் விழித்துக் கொண்ட பிறகு அப்போகத்தின் ஞாபகத்தோடிருக்கும் புருஷன் எப்படி ஸத்யமோ, அப்படியே, உலகத்தில் அனுபவித்துவந்து பின்னுல் ஆத்ம ஞானத்தினுல் உலகம் ஸத்யமில்லையென்று எவன் உணர்கிருனே அந்த அறிவுள்ளவன் ஸத்யம். அவனே ஆத்மா.

(37)

ஆத்மா எப்பொழுதும் தென்பட்டுக்கொண்டேதான் இருக்கிறது. ஆனுலும் அதை யாரும் உணர்வதில்லை ஒரு அட்டையில் வரையப்பட்டிருக்கும் சித்திரத்தைப் பார்ப்பவன் அவ்வட்டையை பார்க்காமலிருக்கமுடியாது. ஆனுலும் அந்த சித்திரமே அவனுடைய கவனத்தை இழுத்து விடுகிறபடியால், அட்டையை பார்க்கிறேன் என்ற உணர்ச்சியே ஏற்படுவதில்லை,

அதேமாதிரி ஜாகிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி ஆகிய மூன்று தசைகளிலும் ஆத்மா தோன்றிக்கொண்டேயிருந்தபோதிலும் அந்த தசைகளை அனுபவிப்பதில் ஈடுபட்டுக்கொண்டு அவைகளுக்கு அடிப்படையாயிருக்கும் ஆத்மாவைப் பார்ப்பதில்லை. இது ஒரு பெரிய ஆச்சர்யம் என்கிறார்.

पश्यन्त्याराममस्य प्रतिदिवसममी जन्तवः स्वापकाले
पश्यत्येनं न कश्चित् करणगणमृते मायया क्रीडमानम् ।
जाग्रत्यर्थव्रजानां अथ च तनुभृतां भासकं चालकं वा
नो जानीते सुषुप्तौ परमसुखमयं कश्चिदाश्चर्यमेतत् ॥ ३७ ॥

प्रतिदिवसं – பிரதிதினமும் अमी – இந்த जन्तवः – ஜந்துக்கள் स्वापकाले – ஸ்வப்னகாலத்தில் अस्य – இந்த ஆத்மாவினுடைய आरामं – விளையாட்டை (ஆத்மாவினால் உண்டுபண்ணப்பட்ட வாஸனைரூபமான பொருள்களை) पश्यन्ति – பார்த்துக்கொண்டேயிருக்கிறார்கள். (ஆனால்) कश्चित् – யாரும் करण-गणं-ऋते – இந்திரிய-கூட்டம்-இல்லாமலே मायया – மாயையினால் क्रीडमानं – விளையாடிக்கொண்டிருக்கிற एनं – இவரை न पश्यति பார்ப்பதில்லை. जाग्रति – விழிப்புக்காலத்தில் अर्थ-व्रजानां – விஷயங்களின்-கூட்டங்களை भासकं – பிரகாசிக்கச்செய்பவராயும் अथ च – அப்படியே तनुभृतां – சரீரம் தரித்திருக்கும் ஜீவர்களை चालकं वा – சேஷ்டிக்கும்படிச் செய்பவராயும் உள்ளவரையும் (பார்ப்பதில்லை) सुषुप्तौ – நல்லதூக்கத்தில் परम-सुखमयं – மேலான-ஸுகஸ்வரூபமாயிருப்பவரையும் कश्चित् – எவரும் नो जानीते – அறிகிறதில்லை. एतत् இது आश्चर्यं – வியக்கத்தக்கது.

ஜாக்கிரத் காலத்தில் ஜீவர்களை சேஷ்டிக்கச் செய்வதும் பதார்த்தங்களை தெரியச்செய்வதும் ஆத்மா; ஸ்வப்னத்தில் எவ்வித இந்திரியங்களையும் எதிர்பாராமல் அனுபவம் ஏற்படும் படிச் செய்வதும் ஆத்மா; ஸுஷுப்தியில் எவ்வித துக்கமும் கலக்காமல் ஸுக-அனுபவத்தைக் கொடுப்பதும் ஆத்மா; அப்படியிருந்தும் அந்த ஆத்மாவை அறிந்து கொள்ளாமல் இந்த

மூன்று தசைகளை மாத்திரம் ஜீவர்கள் அனுபவித்து வருவது மிகவும் ஆச்சர்யமே என்கிறுர். பிருஹதாரண்யக உபநிஷத்தில் இதற்கு பிரமாண வாக்யம்.

आराममस्य पश्यन्ति न तं पश्यति कश्चन .. || IV 3 (14).

(88)

ஸ்வப்னம் போலவே ஜாக்கிரத்தும் பொய்தான் என்ருல் வேதம், சாஸ்திரம், குரு, வேதாந்த விசாரம் முதலிய யாவற்றும் பொய்யாகி விடுமே? அதனுல் ஸத்யமான ஆத்மாவின் அறிவு எப்படி ஏற்படமுடியும்? என்ருல் அதற்கு இரண்டு விதமாக ஆசார்யார் பதில் சொல்கிருர். (1) அஸத்யமான ஸாதனத்திளுல் ஸ்த்யமான பலன் ஏற்படலாம். (2) ஆத்மா "ஏற்பட வேண்டிய" பலன் இல்லை, ஸ்வதஸ்ஸித்தர் எப்பொழுதும் ஸ்வயம் பிரகாசமாயிருப்பவர். அவரை நன்கு தெரியவொட்டாமல் செய்துகொண்டிருக்கிற அவித்யை என்ற மறைவை விலக்கவேண்டியதைத்தவிர வேறு எவ்வித ஸாதனமும் தேவையில்லை. இதற்குத்தான் வேதம் முதலியவை உபயோகப் படுகின்றன. இவ்விரண்டு அம்சங்களையும் அடுத்த சுலோகத்தில் தெளிவுபடுத்துகிருர்.

स्वप्ने मन्त्रोपदेशः श्रवणपरिचितः सत्य एव प्रबोधे
स्वाप्नादेव प्रसादात् अभिलषितफलं सत्यतां प्रातरेति ।
सत्यप्राप्तिस्त्वसत्यादपि भवति तथा किं च तत्र स्वप्रकाशं
येनेदं भाति सर्वं चरमचरमथोच्चावचं दृश्यजातम् ॥ ३८ ॥

स्वप्ने ஸ்வப்னத்தில் श्रवण-परिचितः-கேட்டு அறிந்து கொள்ளப்பட்ட मन्त्र-उपदेशः-மந்திரத்தின்-உபதேசமானது प्रबोधे-விழித்துக்கொண்ட பிறகு सत्यः एव ஸத்யமாகவே இருக்கிறது. तथा-அப்படியே स्वाप्नात् एव-ஸ்வப்னத்தில் கூடக்கிடைத்த प्रसादात्-அனுக்ரஹத்திளுல், अभिलषित-फलं வேண்டப்பட்ட-பலன் प्रातः-காலையில் सत्यतां-உண்மையாயிருக்கும் தன்மையையே एति-அடைகிறது. (ஆகையால்) असत्यात् अपि तु-வாஸ்தவமில்லாததிலிருந்துங்கூட सत्य-प्राप्तिः-

வாஸ்தவமாயுள்ளதின்-அடைதல் भवति-ஏற்படும். किं च- மேலும், चरं-அசைவுள்ளது अचरं-அசைவற்றது अथ- அப்படியே उच्च-अवचं-மேல்-கீழ் உள்ளது ஆகிய सर्वं- எல்லா इदं-இந்த दृश्य-जातं-பார்க்கப்படும்-கூட்டமும் (உலகம் பூராவும்) येन-எவரால் भाति பிரகாசிக்கிறதோ, तत्-அது (ஆத்மா) स्व-प्रकाशं-(வேறு எதையும் எதிர் பாராமல்) தானே பிரகாசிக்கும் வஸ்து.

36-வது சுலோகத்தில் கண்ட ஸ்வப்ன ஸ்திரீ ஸங்க திருஷ்டாந்தத்தை இங்கேயும் எடுத்துக்கொள்ளலாமானாலும் அங்கு ஏற்படும் ஸுகம் வெறும் பிராந்தி, க்ஷணிகமும்கூட, என்ற காரணத்தினால் இங்கே வேறு திருஷ்டாந்தம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

(39)

ஸ்வப்ன காலத்தில் தோன்றும் இந்திரியங்கள் விஷயங்கள் எல்லாம் ஜாக்கிரத் காலத்தில் தோன்றாததினால் பொய்யென்று எப்படி சொல்லப்பட்டதோ அப்படியே, ஜாக்கிரத் காலத்தில் தோன்றும் இந்திரியங்கள் விஷயங்கள் எல்லாம் ஸுஷுப்தி காலத்தில் தோன்றாததினால் பொய்யேயாகும். வெறும் தோற்றம்தான் என்பதை மேலுள்ள சுலோகத்தில் காட்டுகிறார்.

मध्यप्राणं सुषुप्तौ स्वजनिमनुविशन्त्यग्निसूर्यादयोऽमी
वागाद्याः प्राणवायुं तदिह निगदिता ग्लानिरेषां न वायोः ।
तेभ्यो दृश्यावभासो भ्रम इति विदितः शुक्तिकारौप्यकल्पः
प्राणायामव्रतं तत् श्रुतिशिरसि मतं स्वात्मलब्धौ न चान्यत् ॥

सुषुप्तौ-நல்லதூக்க ஸமயத்தில் अमी இந்த अग्नि-सूर्य-आदयः-(வாக் இந்திரியத்தின் அதிதேவதையான) அக்னி-(சக்ஷுஸ் இந்திரியத்தின் அதிதேவதையான) ஸூர்யன் முதலானவர்கள் (மற்ற இந்திரியங்களின் அதி தேவதைகள்) எல்லாரும் स्व-जनि-தங்களுடைய-உத்பத்தி ஸ்தானமான मध्यप्राणं-மத்தியிலுள்ள பிராணதேவதையை (விராட்டை) अनुविशन्ति-அடைந்துவிடுகிறார்கள்.

(அப்படியே) वागाद्याः-வாக் முதலான இந்திரியங்கள் प्राण-वायुं-(சரீரத்தில் தங்களுடைய உத்பத்திஸ்தானமாகிய) பிராணவாயுவை (அடைந்துவிடுகின்றன). तत्-அதனால்தான் इह-இங்கே एषां (இந்திரியங்களும் அவைகளின் அதிதேவதைகளுமாகிய) இவர்களுக்கு ग्लानिः-வாட்டம் (லயம்) निगदिता-(வேதத்தில்) சொல்லப் பட்டிருக்கிறது; वायोः-வாயுவிற்கு न-சொல்லப்படவில்லை. तेभ्यः-அந்த இந்திரியங்களிலிருந்து ஏற்படும் दृश्य-अवभासः-அனுபவிக்கப்படுகிற பதார்த்தங்களின்-தோற்றம் शुक्तिका-रौप्य-कल्पः-சிப்பியில் தோன்றும்-வெள்ளிக்கு-ஸமானமாக भ्रमः-பிராந்தி, इति विदितः-நிச்சயிக்கப்படுகிறது. तत्-ஆகையால்தான் (இந்திரியங்களுக்கு வெளிக்கிளம்புதல்-லயம் உண்டு, பிராணனுக்குக்கிடையாது, என்ற காரணத்தினுல்தான்) स्व-आत्म-लब्धौ-தன்னுடைய-ஆத்ம தத்வத்தை-அறிகிற விஷயத்தில் प्राणायाम व्रतं-பிராணனை நியமனம் செய்வதென்ற விருதம் (ஸாதனமாக) श्रुति-शिरसि-உபநிஷத்தில் मतं-கருதப்பட்டிருக்கிறது. अन्यत्-வேறு விரதம் न च அங்கீகரிக்கப்படவில்லை.

வெளிப்பிரபஞ்சம் யாவற்றையும் இந்திரியங்களுக்குள் லயம் செய்து, இந்திரியங்கள் எல்லாவற்றையும் பிராணனில் லயம் செய்து, பிறகு பிராணனையும் கட்டுப்படுத்தி விட்டால், எவ்வித விக்ஷேபத்திற்கும் அவகாசமிராததினுல் ஸ்வயம்பிரகாசமாயிருக்கிற ஆத்ம தத்வம் நிர்மலமாய் விளங்கும்.

(40)

பிரபஞ்சத்திலிருந்து இந்திரியங்களைத்திருப்பி, அவைகளுக்கு வேலையில்லாமல் செய்யவேண்டுமானுல், அவைகளை பிரபஞ்சத்தை நோக்கி இழுக்கக்கூடிய மனஸிலுள்ள ராகத்துவேஷங்களை விலக்கியாக வேண்டும். ஆகவே ஆத்மஞானம் ஏற்படுவதற்குள்ள படிகளில் முதலாவது படி ராகத்துவேஷமற்று இருத்தல். இதையே "வைராக்யம்" என்பார்கள், அது எவ்வளவு அவசியம் என்பதை திருஷ்டாந்தம் மூலமாக அடுத்த சுலோகத்தில் சொல்கிறுர்.

नोऽकस्मादार्द्रमेधः स्पृशति च दहनः किं तु शुष्कं निदाघात्
आर्द्रं चेतोऽनुबन्धैः कृतसुकृतमपि स्वोक्तकर्मप्रजार्थैः ।
तद्वत् ज्ञानाग्निरेतत् स्पृशति न सहसा किं तु वैराग्यशुष्कं
तस्मात् शुद्धो विरागः प्रथममभिहितः तेन विज्ञानसिद्धिः ॥ ४० ॥

आर्द्र–ஈரமாயிருக்கும் एधः-விறகை दहनः–நெருப்பு अकस्मात्–உடனே नो स्पृशति च-பற்றிக்கொள்ளாது; किं तु–ஆனல் निदाघात्–வெய்யிலினுல் शुष्कं உலர்ந்திருப்பதை (பற்றிக்கொள்ளும்). तद्वत्-அதைப்போல कृत-सुकृतं अपि-புண்ணியம் செய்திருந்தபோதிலும் स्व-उक्त-कर्म-प्रजा-अर्थैः–தனக்கு-விதிக்கப்பட்ட-கர்மாக்கள்-பிரஜை சொத்து ஆகிய अनुबन्धैः–கூடச் சேர்ந்தவைகளால் आर्द्र–நனைந் திருக்கிற एतत्–இந்த चेतः-மனதை ज्ञान अग्निः–ஞானமாகிற நெருப்பு सहसा–உடனே न स्पृशति–பற்றிக்கொள்ளாது; किं तु- ஆனல் वैराग्य-शुष्कं-வைராக்கியத்தினுல்-உலர்ந்திருப் பதை (பற்றிக்கொள்ளும்). तस्मात्–ஆகையினுல்தான் शुद्धः–சுத்தமான विरागः–வைராக்கியமானது प्रथमं-முதலா வதாக अभिहितः-சொல்லப்பட்டிருக்கிறது; तेन–அதனுல் தான் विज्ञान-सिद्धिः – அனுபவஞானத்தின்-ஸித்தி (ஏற்படும்).

விறகை எரியவிடாமல் செய்வது அதிலுள்ள ஈரம்தான் அப்படியே மனஸ் ஆத்மாவைத்தவிர வேறு விஷயங்களில் பற்றியிருந்தால் அதில் ஞானம் ஏற்படுவது ஸாத்தியமில்லை. சாஸ்திரவிஹிதமான கர்மாக்களிலோ, தான், பிதா, பர்த்தா, முதலான் முறைகளில் ஏற்பட்டிருக்கும் கடமைகளிலோ, புத்திர மித்திராதிகளிலோ, வீடு பணம் கியாதி முதலானவைகளிலோ, பற்றுதல் இருந்துவிட்டால் சரியானபடி ஞானமேற்படவிடாது. ஆகையால் அனுத்ம விஷயமான பற்றுதலை விலக்கியே ஆக வேண்டும். அவ்விதம் விலக்குவதுதான் "வைராக்கியம்" எனப்படும்

स्वोक्तकर्मप्रजार्थैः कृतसुकृतं अपि



"சாஸ்திரத்தில் தனக்குச்சொல்லப்பட்ட கர்மாக்கள், (சாஸ்திரத்திலேயே அவசியம் புத்திரன் வேண்டுமென்று சொன்னதை அனுஸரித்து) ஸந்தானம், இவைகளை பிரயோஜனமாயுடையவைகளால் புண்ணியம் ஸம்பாதிக்கப்பட்டிருந்த போதிலும்" என்றும் அன்வயம் செய்யலாம்.

(41)

அனாத்ம விஷயமான ஸகல ஆசையையும் விட்டு வெறும் தோற்றமாயிருக்கும் ஜகத்தின் அடிப்படையான ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரத்தினால், அந்த ஜகத்து வாஸ்தவமாய் இருக்கும் பதார்த்தமில்லையென்று உணரவேண்டுமென்கிற விஷயத்தில் ஈசாவாஸ்ய உபநிஷத்திலுள்ள.

ईशावास्यमिदं सर्वं यत्किंच जगत्यां जगत् ।
तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्यस्विद्धनम् ॥

என்ற மந்திரத்தின் அர்த்தத்தை சுலோக ரூபமாய் சொல்கிறார்.

यत्किंचित् नामरूपात्मकमिदमसदेवोदितं भाति भूमौ
येनानेकप्रकारैः व्यवहरति जगत् येन तेनेश्वरेण ।
तद्वत् प्रच्छादनीयं निभृतरशनया यद्वदेष द्विजिह्वः
तेन त्यक्तेन भोज्यं सुखमनतिशयं मा गृधोऽन्यद्धनाद्यम् ॥ ४१ ॥

भूमौ - உலகத்தில் नाम-रूप-आत्मकं-பெயரையும்-ரூபத்தையுமே-ஸ்வபாவமாயுள்ள इदं - இது यत् किंचित्- எதுவும் (யாவும்) असत् एव- வாஸ்தவமில்லாததாகவே उदितं-உண்டாகி येन - எவரால் भाति பிரகாசிக்கிறதோ, येन-எவராலேயே जगत्-இந்த ஜகத்தானது अनेक प्रकारैः- பல-விதமாக व्यवहरति வியவஹாரம் செய்கிறதோ, तेन- அந்த ईश्वरेण-ஈசுவரனைக்கொண்டு, यद्वत्-எவ்விதம் एष- இந்த (முன்தோன்றுகிற) द्विजिह्वः-பாம்பானது निभृत- रशनया-தீர்மானிக்கப்பட்ட-கயிற்றினால் (மறைக்கப்பட்டு "இல்லை" என்று செய்யப்பட்டு விடுகிறதோ) तद्वत्- அவ் விதமே, (இந்த ஜகத்) प्रच्छादनीयं-நன்கு மூடப்பட

வேண்டும் (''வாஸ்தவமில்லை'' என்று உணரப்பட வேண்டும்). तेन-அவ்விதம் त्यक्तेन-(ஜகத்தை ''துச்சம'' வாஸ்தவமில்லையென்று) விட்டு விடுவதின் மூலமாக अनतिशयं எதற்கு மேல் கிடையாதோ அவ்வித सुखं-ஸுகம் (மோக்ஷானந்தம்) भोग्यं-அனுபவிக்கத்தக்கது. (ஆகையால்) अन्यत्-இதைத்தவிர வேறுகிய धन-आद्यं-செல்வம்-முதலியதை मा गृधः-விரும்பாதே.

எதற்கு மேல் ஆனந்தம் கிடையாதோ அந்த உத்தமமான ஆனந்தம் கிடைக்க வேண்டுமானல், அதற்குக் கீழ்பட்ட எல்லாவித ஆனந்தத்திலும் '' வேண்டும் '' என்ற பற்றுதல் இருக்கக்கூடாது. மற்ற ஆனந்தங்களில் '' வேண்டும் '' என்ற எண்ணம் ஏற்படுவதற்குக் காரணம் ''அது நன்ருக இருக்கிறது'' என்ற எண்ணமே. அவ்வித எண்ணம் ஏற்படுவதற்குக்காரணம் அது பார்வைக்கு நன்ருயிருப்பதாகத் தோன்றுவதே. அவ்விதம் தோன்றும்போது '' அது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமான பதார்த்தமேயில்லை; அது நன்ருகத்தோன்றுவதும் அதன் இயல்பு இல்லை; வேறு வாஸ்தவமாய் நன்ருயிருக்கும் பதார்த்தத்தின் தோற்றத்தை இரவல் வாங்கிக்கொண்டு இது தோன்றுகிறதே தவிர வேறில்லை '' என்ற அறிவு ஏற்பட்டு விட்டால் அந்த வாஸ்தவமான பதார்த்தத்திலே தான் ஈடுபடத்தோன்றும், அம்முறையில், ஜகத் தோன்றுவதற்கு அடிப்படையாய் ஆத்ம தத்வம் இருக்கிறது, தோன்றும் பாம்புக்கு அடிப்படையாய் கயிறு இருப்பதுபோல. அந்த அடிப்படை இருப்பதினுல்தான் உலகத்திலுள்ள ஸகல வியவஹாரங்களும் நடக்கின்றன. அது தான் வாஸ்தவமாக '' இருக்கும் '' பதார்த்தம், அதிலேயே ஞாபகத்தைச் செலுத்திவிட்டால் வெறும் தோற்றமாயிருக்கிற உலகத்தில் மனஸ் ஈடுபடாது. இவ்வுலகத்திலுள்ள எந்த வஸ்துவிலும் ஆசை ஏற்பட நியாயமில்லை. இவ்விதம் வெறும் தோற்றத்திற்கு மதிப்புக் கொடுக்காமலேயிருக்கும் மனேநிலை வைராக்கியம் எனப்படுகிறது. இந்த மனேநிலை முற்ற முற்ற உலகத்தோற்றமே மறைந்து அதற்கு அடிப்படையான ஆத்ம தத்வம் விளங்கவாரம்பிக்கும். அது நன்கு விளங்கி விட்டால் உலகமே தனித்துக் கிடையாது என்ற அனுபவம் ஏற்பட்டு விடும். அப்பொழுது நிரதிசயமான ஆத்மானந்த அனுபவத்திலேயே நிலைத்திருக்கமுடியும்.

(42)

அவ்வித ஆனந்தானுபவ நிலையில், உலகத்தோற்றமிருக்கும் வரை "ஜீவன் முக்தி" யென்றும், உலகம் மறைந்து விட்டபிறகு "விதேஹமுக்தி" யென்றும் இரண்டு படிகள் உண்டென்று அடுத்த சுலோகத்தில் அவைகளையும் அவைகள் ஏற்படுவதற்குள்ள ஸாதனங்களையும் சொல்கிறார்.

**जीवन्मुक्तिर्मुमुक्षोः प्रथममथ ततो मुक्तिरात्यन्तिकी च**
**तेऽभ्यासज्ञानयोगात् गुरुचरणकृपापाङ्गसङ्गेन लब्धात् ।**
**अभ्यासोऽपि द्विधा स्यादधिकरणवशात् दैहिको मानसश्च**
**शारीरस्त्वासनाद्यो ह्युपरतिरपरो ज्ञानयोगः पुरोक्तः ॥ ४२ ॥**

**मुमुक्षोः**-மோக்ஷத்தை விரும்புகிறவருக்கு **प्रथमं**-முதலில் **जीवन्मुक्तिः** ஜீவன் முக்தி; **ततः**-அதற்கு **अथ**- பிறகு **आत्यन्तिकी**-எல்லை மீறின (விதேஹ) **मुक्तिः च**-முக்தியும் **ते**-அவையிரண்டும் **गुरुचरण - कृपा - अपाङ्ग - सङ्गेन** - குருநாதருடைய-கருணை-கடாக்ஷத்தின்-ஸங்கத்தினால் **लब्धात्**-அடையப்படும் **अभ्यास-ज्ञानयोगात्** - அப்பியாஸத்தினாலும்-ஞான யோகத்தினாலும் (ஏற்படுகின்றன). **अभ्यासः**-அந்த அப்பியாஸம் **अपि** - கூட **अधिकरण-वशात्** (எதில் அப்பியாஸம் செய்யப்படுகிறதோ அந்த) ஆசிரயத்தின் வேறுபாடு காரணமாக **दैहिकः** - தேஹத்தைக் குறித்தது **मानसः च** மனஸைக்குறித்தது என்று **द्विधा** - இருவகையாக **स्यात्** - ஆகும். (அவ்விரண்டில்) **शारीरः तु**-தேஹத்தைக் குறித்தது என்பதோ **आसन-आद्यः**-ஆஸனம்-முதலியவை; **अपरः** மற்றொன்று **उपरतिः हि**-(ஸகல வியாபாரங்களிலிருந்தும்) ஓய்வு அடைதல் என்று பிரஸித்தம். **ज्ञानयोगः**-ஞானயோகம் **पुरा**-முன்னால் **उक्तः**-சொல்லப்பட்டிருக்கிறது.

குருநாதரை சிரத்தையுடனும் பக்தியுடனும் சரணமடைந்து அவரை நமஸ்காரம் சுசுருஷை முதலிய ஸேவைகளால்

ஸந்தோஷப்படுத்தி அவருடைய பரிபூர்ணமான அனுக்ரஹம் பெற்றால்தான் அப்யாஸமோ ஞானயோகமோ ஸித்திக்கும். அப்யாஸம் என்பது ஞானயோகத்திற்கு பூர்வாங்கம். அது இரண்டு விதம் என்கிறார். யமம், நியமம் என்ற இரண்டு யோகாங்கங்களும் எல்லாவித அப்யாஸங்களுக்கும் பொதுவாக வேண்டியிருப்பதால் அவைகளை இங்கே தனித்து எடுத்துச் சொல்லவில்லை. அவைகளுக்கு மேலுள்ள ஆஸனம். பிராணா யாமம். பிரத்யாஹாரம் என்ற மூன்றும் முறையே சரீரத்தையும், சரீரத்தில் ஸஞ்சரிக்கும் பிராணனையும், சரீரமூலமாக சேஷ்டிக்கும் இந்திரியங்களையும், நிக்ரஹம் செய்வதாயிருப்பதால், இம்மூன்றையும் சாரீர அப்யாஸம் என்கிறார். இவைகளுக்கு மேலுள்ள தாரணை, தியானம். ஸமாதி. இம்மூன்றும் மனதை இழுத்துப்பிடித்தல், ஒரு முகமாய்ச்செய்தல், அசைவற்றிருக்கச் செய்தல், என்ற முறையில் மானஸிக அப்யாஸம் என்கிறார்.

அந்த ஸமாதி நிலை ஏற்பட்டாலும் சிலருக்கு அந்நிலை தானாகவே கலைந்து உலகம் தோன்றலாம்; சிலருக்கு தானாகக் கலையாமல் வெளி நிமித்தத்தினால் மாத்திரம் கலைந்து உலகம் தோன்றலாம்; இவ்விருவரையும் பிரஹ்ம வித்வான். பிரஹ்ம வித்வரீயான் என்பார்கள்; இவர்களுக்கு உலகத்தோற்ற மிருக்கக்கூடியதால் உலகம் பொய்தான் என்ற அறிவு இருந்தும் கூட, உலக வியவஹாரங்களில் ஈடுபடக்கூடியவர்களே; ஆகையால் இவர்களை ஜீவன் முக்தர் என்று சொல்லப்படுகிறது. என்ன நிமித்தம் ஏற்பட்டாலும் ஸமாதி கலையாமலேயிருந்து விடும். ஞானிக்கு உலகம் தோன்றவே தோன்றாததினால் அவருக்கு ஆபாஸமாகக்கூட சரீரம் தோன்றாது; ஆகையால் பிரஹ்ம வித்வரிஷ்டரென்ற அவரை விதேஹமுக்தர் என்றே சொல்லலாம். ஆனால் மற்றவர்கள் பார்வையில் அவர் சரீரத் துடனிருப்பதாகத் தெரிவதால், அவரையும் ஜீவன் முக்தர் என்றும் சொல்வதுண்டு. ஞானயோகத்தில் ஏற்படக்கூடிய அனுபவ தாரதம்யத்தினால் இந்த வித்யாஸம் ஏற்படுகிறது. ஆனாலும் இவர்கள் யாவரும் பிரஹ்ம வித்துக்கள் என்பதில் ஸந்தேஹமில்லை.

சரீர-இந்திரிய-வியவஹாரங்களிலிருந்து நிவிருத்தி அடைந்தாலொழிய மானஸிக அப்யாஸம் ஸாத்தியமாகக் கூடியதில்லையானதினால் அவ்வப்யாஸத்தை "உபரதி" (ஓய்வு) என்ற சப்தத்தினாலேயே இந்த சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

(43)

அந்த பிரஹ்மானந்த அனுபவத்தை இந்த சரீரத்திலிருந்த படியே யோகாப்யாஸ முறையில் அடையலாம் அல்லது கிரம முக்தி யென்ற ரீதியாய் இந்த சரீரம் விட்டு பிரஹ்ம லோகம் போய் அடையலாம் என்று இரண்டு விதமாயிருப்பதால் இரண்டையுமே அடுத்த சுலோகத்தில் குறிக்கிறார். இவ்விரண்டு பேர்களுக்கும் கொஞ்சம் அவித்யா சேஷமிருக்கிறதென்று தாத்பர்யம். அவித்யை பூராவும் பாக்கியன்னியில் போய் விட்டால் இந்த யோகரீதிக்காவது லோகாந்தரம் போவதற் காவது எவ்வித அவசியமுமில்லாமல் இங்கேயே முக்தி அடைந்து பிரஹ்மத்துடன் கலந்து விடுகிறார். அந்த தசையை பின்னால் 46-வது சுலோகத்தில் வர்ணிக்கிறார்.

सर्वानुन्मूल्य कामान् हृदि कृतनिलयान् क्षिप्तशङ्कूनिवोच्चैः
दीर्यद्देहाभिमानः त्यजति चपलतां आत्मदत्तावधानः ।
यात्यूर्ध्वस्थानमुच्चैः कृतसुकृतभरो नाडिकाभिर्विचित्रं
नीलश्वेतारुणाभिः स्रवदमृतभरं गृह्यमाणात्मसौख्यः ॥ ४३ ॥

क्षिप्तशङ्कूनिव- எறியப்பட்ட இரும்பு முளைகளைப்போல ह्रदि-ஹ்ருதயத்தில் कृत-निलयान् குடி கொண்டிருக்கிற सर्वान्-எல்லா कामान्-ஆசைகளையும் उच्चैः-உயரோ (நன்றாக) उन्मूल्य-வேருடன் எடுத்து விட்டு दीर्यत्-देह-अभिमानः-தேஹத்தில் அபிமானம் நீங்கியவராக आत्म-दत्त-अवधानः-ஆத்மாவிலேயே கவனம் வைத்தவராக இருந்து கொண்டு चपलतां-(அனாத்ம பதார்த்தங்களில் உள்ள) ஆவலை त्यजति-விட்டு விடுகிறார். (பிறகு) कृत सुकृत-भरः-செய்திருக்கும்- புண்ணியங்களை- எடுத்துக் கொண்டவராய் गृह्यमाण-आत्म-सौख्यः - ஆத்மானந்தத்தை அனுபவிப்பவராய், नील-श्वेत-अरुणाभिः-கருப்பு-வெளுப்பு-சிவப்பு வர்ணமுள்ள नाडिकाभिः-நாடிகளால் विचित्रं-பல விதமாயிருக்கிறதும் स्रवत्-अमृत-भरं- ஏராளமாய்-அமிருதத்தை பொழிகிறதுமான उच्चैः-மேலே ऊर्ध्व-स्थानं-மேலான-ஸ்தானத்தை याति- அடைகிறார்.

யோகரீதியாய் இந்த சுலோகத்திற்கு அர்த்தம் பார்ப்பதானால் ऊर्ध्वे स्थाने மேலான ஸ்தானம் என்பது பிரஹ்மாந்திரமாகும். அதில் இடை. பிங்களை, ஸுஷும்னை மூன்று நாடிகளும் ஒன்றாய்விடுகிறதென்று சொல்லப்படுவதால் नीलश्वेतारुणाभिः नाडिकाभिः विचित्रं (கருப்பு வெளுப்பு சிவப்பு நாடிகளால் பலவிதமாயுள்ளது) என்ற விசேஷணமும் பிரஹ்மாந்திரத்திலிருந்து ஆனந்தாமிருதம் பிரவஹிக்குமென்றும் சொல்லப்படுவதால் स्रवदमृतभरं (ஏராளமாய் அமிருதத்தைப் பொழிகிற) என்ற விசேஷணமும், பொருந்தும்.

மேலான ஸ்தானம் என்பது பிரஹ்ம லோகம் என்று எடுத்துக் கொண்டால் அங்கேயும் ஸத்வ பிரதானமான விஷ்ணு, ரஜஃ பிரதானமான பிரஹ்மா, தமஃ பிரதானமான ருத்ரர் இவர்களுக்கு ஸ்தானமிருப்பதாலும் ஸாதாரணமாக ஸத்வத்தை, வெளுப்பு என்றும் ரஜஸை சிவப்பு என்றும் தமஸை கருப்பு என்றும் சொல்வதினாலும், அங்கேயும் ஆனந்தாமிருதம் ஏராளமாய் இருக்குமாதலாலும், அவ்விசேஷணங்கள் பொருந்தக் கூடியனவேயாம்.

இந்த சுலோகத்திற்கு மூல சுருதியான பிரஹதாரண்யக உபநிஷத்தில்

तेन धीराः अपियन्ति ब्रह्मविदः स्वर्गं लोकमित ऊर्ध्वं विमुक्ताः ॥
IV 4 (8)

तस्मिन्न शुक्लमुत नीलमाहुः पिङ्गलं हरितं लोहितं च ।
एष पन्था ब्रह्मणा हानुवित्तः तेनैति ब्रह्मवित् पुण्यकृत् तैजसश्च ॥
IV 4 (9)

என்ற வாக்கியத்தில் வெளுப்பு, கருப்பு, மஞ்சள், பச்சை, சிவப்பு. ஆகிய ஐந்து வர்ணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த சுலோகத்தில் விட்டுப்போன மஞ்சளையும் பச்சையையும் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று தோன்றுகிறது. த்விரவும்

यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिताः ।
अथ मर्त्योऽमृतो भवति अत्र ब्रह्म समश्नुते ॥ IV 4 (7)

(காடகோபநிஷத் VI 14)

என்ற வாக்கியத்தில் ஸர்வகாமங்களும் அற்றவருக்கு லோகாந்தரம் போவது கிடையாது என்று ஏற்படுவதினால், இந்த சுலோகத்தில் கண்ட ஞானிக்கு ஸ்வல்பம் அவித்யையும் அதினால் பிரஹ்மலோகாதி அனுபவ இச்சையும் இருக்குமென்று நினைக்கவேண்டியிருக்கிறது. எவ்வித காமமற்றவனாய் அவித்யை மாத்திரம் இருக்கிறவனாகிய பிராக்ஞன் அதாவது ஸுஷுப்தி தசையிலிருக்கும் ஜீவன் "ஹிதா" என்கிற நாடிகளில் ஒடுங்கியிருப்பதாக அதே உபநிஷத்தில் சொல்லும் போதும் அந்த நாடிகள் மேலே கண்ட ஐந்துவித வர்ணங்களுடன் கூடினவையென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

ता वा अस्यैता हिता नाम नाड्यो यथा केशः सहस्रधा भिन्नः तावताऽणिम्ना तिष्ठन्ति शुक्लस्य नीलस्य पिङ्गलस्य हरितस्य लोहितस्य पूर्णाः .. IV 3 (20).

(44)

நாடித்வாரா பிரஹ்மரந்திரத்தை பேதித்து ஆனந்தானுபவம் அடைகிறவர்களும், பிரஹ்ம லோகம் சென்று ஆனந்தானுபவம் அடைகிறவர்களும் தேஹமுள்ளவர்களாகவே இருப்பதால், ஜீவன் முக்தர்கள் என்ற பெயருக்கு உரியவர்களாக இருக்கிறார்கள் என்பது வாஸ்தவம். அவ்விரண்டு வழியாகவும் போகாமல், சுத்தமான ஞானமார்க்கத்தில் பிரவேசித்து, தத்வ விசாரணை செய்து, ஆத்மா ஒன்றுதான் ஸத்யம், ஜகத் வெறும் தோற்றமே அதற்கு ஆத்மாவை விட்டு தனியாக இருப்புக் கிடையாது, ஆகையால் எல்லாமே ஆத்மா தான், என்ற திருடமான ஞானமேற்பட்டு விட்டால், அவருக்கும் எவ்வித ஆசையும் இருக்க நியாயமில்லை; ஆகையால் சோகத்திற்கும் அவகாசம் கிடையாது; எப்பொழுதும் ஆத்மானந்தத்தில் மூழ்கியிருக்கலாம்; சரீரம் முதலானதுகளை மறந்தேயிருப்பார், அவருக்கு புண்ணிய பாபஸம்பந்தம் கிடையாது; இவரும் ஜீவன் முக்தரேயென்று சொல்கிறார்.

प्राग्पश्यद्विश्वमात्मेत्ययमिह पुरुषः शोकमोहाद्यतीतः

शुक्रं ब्रह्माभ्यगच्छत्स खलु सकलवित् सर्वसिद्ध्यास्पदं हि ।

विस्मृत्य स्थूलसूक्ष्मप्रभृति वपुरसौ सर्वसङ्कल्पशून्यो

जीवन्मुक्तस्तुरीयं पदमधिगतवान् पुण्यपापैर्विहीनः । ४४ ॥

अयं-இந்த पुरुषः-புருஷன் इह-இங்கே (இந்த சரீரத்திலிருக்கும்போதே); विश्वं-ஜகத்தை आत्मा-ஆத்மா इति-என்று प्रापश्यत्-பார்க்கிறான். शोक-मोह-आदि-अतीतः-சோகம்-மோஹம்-முதலானதை-தாண்டினவன். शुक्लं-சுத்தமான ब्रह्म-பிரஹ்மத்தை अभ्यगच्छत्-அறிந்தவன். स खलु-அவர் அல்லவா सकल-वित्-எல்லாவற்றையும்-அறிந்தவர், सर्व-सिद्धि-आस्पदं हि எல்லா-ஸித்திகளுக்கும்-இருப்பிடமும் என்பது பிரஸித்தம். असौ இவர் स्थूल-सूक्ष्म-प्रभृति-ஸ்தூலம்-ஸூக்ஷ்மம்-முதலான वपुः சரீரத்தை विस्मृत्य-மறந்துவிட்டு सर्व-सङ्कल्प-शून्यः-எல்லாவித-ஸங்கல்பமும் அற்றவராக पुण्य-पापैः-புண்ணியங்களாலும் பாபங்களாலும் विहीनः-விடப்பட்டவராக இருக்கும் जीवन्मुक्तः-இந்த ஜீவன் முக்தர் तुरीयं-நான்காவதான पदं-நிலையை अधिगतवान्-அடைந்தவர்.

विश्वं आत्मा इति "ஜகத்தை ஆத்மாவென்று" என அர்த்தம் செய்யப்பட்டது. விசுவம் என்கிற சப்தத்தை முதல் வேற்றுமையாயும் எடுத்துக்கொள்ளலாம். அப்படியானால் "ஜகத் ஆத்மா தான் என்று" என அர்த்தம் கிடைக்கும். இரண்டு விதமாகவும் மூல சுருதியான ஈசாவாஸ்ய உபநிஷத்தில் கண்டிருக்கிறது.

यस्तु सर्वाणि भूतानि आत्मन्येवानु पश्यति ।
सर्वभूतेषु चात्मानं ततो न विजुगुप्सते ॥ (6)

यस्मिन् सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः ।
तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः ॥ (7)

स पर्यगात् शुक्रमकायमव्रणं
अस्नाविरं शुद्धमपापविद्धम् । ... (8)

"ஸ்தூலம்—ஸூக்ஷ்மம் முதலான" என்பதினால் காரண சரீரத்தையும் கிரஹிக்கவேண்டும். இந்த மூன்றுவித சரீரங்களுக்கும் அப்பாலுள்ளதே சுத்தமான பிரஹ்மத்தைவிட வேறு

காத ஆத்ம தத்வமானதினால், அதை "நான்காவது" என்று சொல்லப்படுகிறது புண்ணிய பாபகர்மாக்களும் அவைகளின் பலன்களாகிய ஸுகதுக்கங்களும் ஸ்தூல-ஸூக்ஷ்ம சரீரங்களையே யொட்டினவை; காரணசரீரத்தில் கூட கர்மாவும் அனுபவமும் கிடையாது; அதற்கும் மேலிருக்கும் ஆத்மாவில் அவைகளின் ஸம்பந்தம் கிடையாதென்பதை "புண்ணிய பாவம் அற்றவர்" என்ற பதம் விளக்குகிறது

(45)

ஸ்வயம் ஜ்யோதிஸ் ஸ்வரூபமாயிருக்கும் சுத்த சைதன்யந் தான் அந்தஃ கரணத்தில் பிரதிபிம்பித்து ஜீவன் என்ற பெயரை அடைகிறது அது சரீராதிகளால் மூடப்பட்டிருந்த போதிலும், அதன் தத்வமறிந்த ஞானிகள் அதைத்தனியே பிரித்து சரீராதி ஸம்பந்த மற்ற சுத்த சைதன்ய நிலையில் அப்யாஸத்தினால் மறுபடி கொண்டு சேர்க்கிறார்கள் என்ற தாத்பர்யமுள்ள.

युवा सुवासाः परिवीत आगात् स उ श्रेयान् भवति जायमानः ।
तं धीरासः कवय उन्नयन्ति स्वाध्यो मनसा देवयन्तः ॥ III 1 (8).

என்ற ரிக்வேத சுருதியை ஸ்ரீமத் ஆசார்யார் அடுத்த சுலோகத்தில் உதாஹரிக்கிறார்.

यः सत्त्वाकारवृत्तौ प्रतिफलति युवा देहमात्रावृतोऽपि
तद्धर्मैः बाल्यवार्द्धक्यादिभिरनुपहतः प्राण आविर्बभूव ।
श्रेयान् साक्षात् तमेतं सुनिपुणमतयः सत्यसङ्कल्पभाजो
ह्यभ्यासात् देवयन्तः परिणतमनसा साकमूर्ध्वं नयन्ति ॥ ४५ ॥

यः-எவர் युवा-(எப்பொழுதும்) யுவாவாகவே யிருந்துகொண்டு, सत्त्व-आकार-वृत्तौ-ஸத்வகுண-ஸ்வரூபத்தையுடைய-அந்தஃகரணத்தில் प्रतिफलति பிரதிபிம்பிக்கிறரோ, (எவர்) प्राणः-ஜீவத்தன்மையை அடைந்து देहमात्र-आवृतः अपि-தேஹத்தினால் மூடப்பட்டவராயிருந்துங்கூட तत्-धर्मैः-அந்த தேஹத்தின் தர்மங்களாகிய बाल्य-वार्द्धक्यादिभिः-பால்யம்-மூப்பு முதலான

வைகளால் अनुपहतः-பாதிக்கப்படாமல் आविर्भूत-தெளிவாய் இருந்துவருகிருரோ, (எவர்) श्रेयान्-சிலாக்கியமானவராய் साध्यः-அடையக்கூடியவராய் இருக்கிருரோ, तं-அந்த एतं-இவரை सु-निपुण-मतयः-வெகு ஸாமர்த்தியமுள்ள-புத்தியுள்ளவர்களாயும் सत्य-सङ्कल्प-भाजः-(எடுத்த கார்யத்தை ஸாதித்து விடவேண்டுமென்ற) ஸத்யமான-தீர்மானத்தை-உடையவர்களாயும் இருப்பவர்கள் अभ्यासात्-அப்யாஸத்திஞல் द्योतयन्तः हि-பிரகாசத்தன்மையை விளக்க உத்தேசித்தவர்களாக அல்லவா परिणत-मनसा-நன்குபரிபக்குவமடைந்த மனஸுடன் साकं-கூட ऊर्ध्वं-மேலே नयन्ति-கொண்டு போய்ச் சேர்க்கிருர்கள்?

ஸர்வ வியாபகமாயுள்ள சைதன்யம் புத்தியென்ற உபாதியில் பிரதிபலிக்கும்போது ஜீவன் என்கிற பெயரை அடைகிறது. சைதன்யம் பிரதிபலிக்கும்படியான யோக்கியதையுள்ள புத்தியானது கண்ணுடிபோல ஸ்வச்சமாயிருக்க வேண்டியுதால் அதை ஸத்வகுணமுள்ளதென்று சொல்லப்படுகிறது. ஜலத்திலோ கண்ணுடியிலோ பிரதிபிம்பிக்கும் ஸூர்யன எப்படி அந்த ஜலத்தினுடைய அல்லது கண்ணுடியினுடைய குணதோஷங்களால் பாதிக்கப்படுகிறதில்லையோ, அதேமாதிரி புத்தியில் பிரதிபிம்பிக்கும் சைதன்யம் புத்தியின் குணதோஷங்களினுலாவது அப்புத்திக்கும் ஆசிரயமான ஸ்தூல சரீரத்தின் குணதோஷங்களினுலாவது கொஞ்சமேனும் பாதிக்கப்படுகிறதில்லை. பிறப்பு, மூப்பு, இறப்பு முதலியவை ஸ்தூல சரீரத்தையே சேர்ந்தவையானதினுல் அவை யாதொன்றும் ஆத்மாவை பாதிக்காது. அது எப்பொழுதும் ஒரேமாதிரி எவ்வித மாறுதலுமன்னியில் இருந்துவருகிறது என்ற தாத்பர்யத்தில் "யுவா" (யௌவனத்தோடு கூடியவர்) என்று இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. அவர் இதற்கு முன்னுல் இல்லாமலிருந்து இப்பொழுது புதிதாக உண்டானுர் என்பதில்லை, அவர் எப்பொழுதும் இருப்பவர், ஜீவன் என்கிற வேஷத்துடன் தோன்றுகிருர், என்ற கருத்தை आविर्भूत (வெளியில் தோன்றினுர், தெளிவாய்த் தெரிகிருர்) என்ற பதம் காட்டுகிறது. "ஜீவன்" என்கிற சப்தத்திற்கே "பிராணனை தரிப்பவர்" என்ற அர்த்தமானதினுல் இந்த

சுலோகத்தில் "பிராணன்" என்றே உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஸூக்ஷ்மமான புத்தி, திருடமான ஸங்கல்பம், ஸாதனங்களை வெகு முயற்சியுடன் அப்யாஸம் செய்வது, ஆகிய இவைகள் நன்கு அமைந்தால், மனஸ் வெகு பரிசுத்தமாய் பரிபக்குவமடைந்துவிடும். அப்பொழுது தேஹம் முதலான உபாதிகளுக்குள் மறைபட்டிருந்த ஆத்மஜ்யோதிஸ் அம்மறைவுகளையெல்லாம் நீக்கிக்கொண்டு மேலே வந்து பிரகாசிக்கும்.

(46)

இவ்விதம் 43, 44, 45 சுலோகங்களில் ஜீவன் முக்தரைப் பற்றிச் சொல்லிவிட்டு 46, 47, சுலோகங்களில் விதேஹ முக்தரைப்பற்றிச் சொல்கிறார்.

प्रायोऽकामोऽस्तकामो निरतिशयसुखायात्मकामस्तदाऽसौ
तत्प्राप्तावाप्तकामः स्थितचरमदशः तस्य देहावसाने ।
प्राणा नैवोत्क्रमन्ति क्रमविरतिमिताः स्वस्वहेतौ तदानीं
क्वायं जीवो विलीनो लवणमिव जलेऽखण्ड आत्मैव पश्चात् ॥

तदा–அப்பொழுது असौ–அவர் प्रायः–அநேகமாய் अकामः–ஆசையற்றவராய் अस्त-कामः–ஆசைகளை விலக்கினவராய் निरतिशय-सुखाय–நிரதிசயமான–ஆனந்தத்தையடைவதற்காக आत्म कामः–ஆத்மாவில் (மாத்திரம்) ஆசையுள்ளவராக (இருப்பார்). तत्-प्राप्तौ–அந்த ஆத்மா–கிடைத்து விட்டதேயானால் आप्त-कामः–ஆசை நிறைவேறினவராக स्थित-चरम-दशः–கடைசி தசையில் இருப்பவராக ஏற்படுவார். तस्य–அவருக்கு देह-अवसाने தேஹம்-முடிவடையும் ஸமயத்தில் प्राणाः-பிராணன்கள் न एव उत्क्रमन्ति–வெளிக்கிளம்புவது கிடையவே கிடையாது; (அவைகள்) तदानीं–அப்பொழுது स्व स्व-हेतौ–தம்-தம்-காரணத்தில் (உபாதான காரணமான பூதங்களில்) क्रम-विरति-கிரமமாக-லயத்தை इताः–அடைந்து விடுகின்றன. पश्चात्–பிறகு, जले–ஜலத்தில் (கரைந்த) लवणं इव–உப்பைப்போல, अयं–இந்த जीवः–ஜீவன் क्व–எங்கோ

विलीनः-மறைந்தவனுய் अखण्डः-துண்டுபடாத (வியாபகமான) आत्मा एव-ஆத்மாவாகவேயிருப்பான்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் பிரஹ்மவித்தின் தேஹ வியோகத்தைப்பற்றிச் சொல்லும்போது

अथ अकामयमानो योऽकामो निष्कामः आप्तकामः आत्मकामो न तस्य प्राणा उत्क्रामन्ति ब्रह्मैव सन् ब्रह्माप्येति ॥ IV 4 (6)

என்றிருக்கும் வாக்கியத்தின் தாத்பார்யத்தை இந்தசுலோகத்தில் ஆசார்யார் சொல்கிருர். அனுத்மா விஷயமான ஆசைகள் அவருக்குக் கிடையாது என்ற போதிலும் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும்வரை ஆத்மா விஷயமான ஆசையிருக்குமானதினுல் "அநேகமாய்" என்று கண்டிருக்கிருர். அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு விட்டால் அதற்குமேல் அவருக்கு எவ்வித ஆசையும் அதையடைய எவ்வித பிரவிருத்தியும் இருப்பதற்கு நியாயமில்லாததினுல் அந்நிலை அவருடைய கடைசி தசை என்று சொல்லப்படுகிறது. இனி அவருக்கு வேறு ஜன்மம் எடுக்க எவ்வித அவசியமுமில்லை, ஜன்மமும் கிடையாது. அவர் ஜலத்தில்கரைத்த உப்புமாதிரி சுத்தசைதன்யத்துடன் ஒன்ருகவே ஆகிவிடுகிருர். பிறகு 'ஜீவன்' என்ற வியவஹாரமே கிடையாது.

அவ்விதம் சைதன்யம் சைதன்யத்துடன் ஒன்ருய் கலந்து விட்டாலும் உபாதிகளாகிய ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்கள் என்ன வாகின்றன என்று கேட்கக்கூடியதால், அவைகள் தங்கள் தங்கள் உபாதான காரணமாயுள்ள பஞ்சபூதங்களில் லயமடைந்து விடுகின்றன என்கிருர். வேறு சரீரம் எடுப்பதாயிருந்தால் அவை ஸூக்ஷ்மரூபத்துடன் கூடவே போகவேண்டும். அதற்கு அவசியமில்லாததினுல் இங்கேயே லயமடைந்து விடுகின்றன.

(47)

முன் சுலோகத்தில் சொன்ன ஜல லவண திருஷ்டாந்தம் பிரஹதாரண்யக உபநிஷத்திலேயே

स यथा सैन्धवखिल्यः उदके प्रास्तः उदकमेवानुविलीयेत न हास्योद्ग्रहणायेव स्यात् ॥ II 4 (12)

என்ற வாக்கியத்திலும், இந்திரியங்கள் வியாபகமான அவை அவைகளின் அதிதேவதைகளுடன் சேர்ந்துவிடுகின்றன என்பது அதே உபநிஷத்தில்

यत्रास्य पुरुषस्य मृतस्य अग्निं वागप्येति, वातं प्राणः, चक्षुरादित्यं, मनश्चन्द्रं, दिशः श्रोत्रं पृथिवीं शरीरं, आकाशमात्मा, ओषधीः लोमानि, वनस्पतीन् केशाः, अप्सु लोहितं च रेतश्च निधीयते .... ॥ III 2 (13)

என்ற வாக்கியத்திலும், இருப்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிருர். இரண்டாவது வாக்கியம், ஆர்த்தபாகர் யாக்ஞ்ய வல்க்யரைக் கேட்கும் கேள்வியில் இருந்தபோதிலும் அது ஸித்தாந்தத்திற்கு விரோதமில்லாததிஞல் அதையும் பிரமாண மாக ஆசார்யார் உதாஹரிக்கிருர்

पिण्डीभूतं यदन्तर्जलनिधिसलिलं याति तत् सैन्धवाख्यां
भूयः प्रक्षिप्तमस्मिन् विलयमुपगतं नामरूपे जहाति ।
प्राज्ञस्तद्वत् परात्मन्यथ भजति लयं तस्य चेतो हिमांशौ
वागग्नौ चक्षुरर्के पयसि पुनरसृग्रेतसी दिक्षु कर्णौ ॥ ४७ ॥

यत्-எந்த अन्तर्जलनिधि-सलिलं-ஸமுத்திரத்திற்குள்ளே யிருக்கும்-ஜலம் पिण्डीभूतं-கெட்டியாக ஆகி सैन्धव-आख्यां-உப்பு என்ற பெயரை याति-அடைகிறதோ तत्-அது भूयः-மறுபடியும் अस्मिन्-இந்த ஜலத்தில் प्रक्षिप्तं-போடப்பட்டு विलयं-லயத்தை उपगतं-அடைந்ததாய் नाम-रूपे-பெயரையும்-ரூபத்தையும் जहाति விட்டுவிடுகிறது. तद्वत्-அதைப்போலவே प्राज्ञः-ஞானியானவர் परात्मनि-பரமாத்மாவில் (சேர்ந்து பெயரையும் ரூபத்தையும் விட்டு விடுகிருர்). अथ-பிறகு तस्य-அவருடைய चेतः-மனஸ் हिमांशौ சந்திரனிலும், वाक्-வாக் இந்திரியம் अग्नौ-அக்னியிலும், चक्षुः-கண் இந்திரியம் अर्के ஸூர்ய னிடத்திலும், असृक्-रेतसी-ரக்தமும்-ரேதஸும் पयसि पुनः-ஜலத்திலும், कर्णौ-காது இந்திரியம் दिक्षु-திக்குகளிலும், लयं-லயத்தை भजति- அடைகிறது.

ஆத்மா பிரஹ்மத்தைத் தவிர வேறில்லையாதலால், ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருந்த அக்ஞானம் விலகினவுடன் ஆத்மாவும் பிரஹ்மமும் ஒன்ருகவே

இருந்து வருவது நன்றாக விளங்குகிறது. அவை இரண்டையும் பிரித்துக் காட்டிக்கொண்டிருந்த உபாதி விலகிவிட்டபடியால், இனிமேல் ஆத்மாவை ப்ரஹ்மத்திலிருந்து பிரித்துக்காட்ட எதுவுமில்லை. இவ்விஷயத்தை காடகோபநிஷத்தும் விளக்கிக் காட்டியிருக்கிறது.

यथोदकं शुद्धे शुद्धं आसिक्तं तादृगेव भवति ।
एवं मुनेर्विजानतः आत्मा भवति गौतम ॥ IV 15

ஹே கௌதம (நசிகேதஸ்) எப்படி சுத்தமான ஜலம் சுத்தமான ஜலத்தில் விடப்பட்டு அவ்விதமாகவே ஆகிவிடுகிறதோ, இவ்விதந்தான் (ஆத்ம தத்வத்தை) அறிந்த முனிவரின் ஆத்மா ஆகிவிடுகிறது'.

(48)

ஆத்ம தத்வமானது ஜகத்திற்கு அடிப்படையாக இருந்து வருகையில் அது ஏன் வியக்தமாய் அனுபவிக்கப்படவில்லை என்று கேட்கலாம். அனுபவிக்கப்படவில்லை என்பதே வாஸ்தவம் இல்லை; ப்ரதி க்ஷணமும் அதை அனுபவித்துக்கொண்டேதான் இருக்கிறோம். ஆனால் நாம் அனுபவித்து வருவது ஆத்மாவைச் சேர்ந்ததென்று நாம் உணர்வதில்லை என்பதே ஸமாதானம் என்று அடுத்த சுலோகத்தில் சொல்கிறார்.

क्षीरान्तर्यद्वदाज्यं मधुरिमविदितं तद्-पृथग्भूतमस्मात्
भूतेषु ब्रह्म तद्वत् व्यवहृतिविदितं श्रान्तविश्रान्तिबीजम् ।
यं लब्ध्वा लाभमन्यं तृणमिव मनुते यत्र नोदेति भीतिः
सान्द्रानन्दं यदन्तः स्फुरति तदमृतं विद्धयतो ह्यन्यदार्तम् ॥

यद्वत्-எப்படி आज्यं-நெய்யானது क्षीर-अन्तः-பாலுக்கு-உள்ளேயே मधुरिम-विदितं-தித்திப்பினால் அறியப்பட்டதாய், तद्-அது अस्माद्-இந்த பாலிலிருந்து पृथक्-भूतं-தனிப்பட்ட-பதார்த்தமோ, तद्वत्-அப்படியே, ब्रह्म-பிரஹ்மம் भूतेषु-(எல்லா) பிராணிகளிடத்திலும் व्यवहृति-विदितं-வியவஹாரத்தில்-அறியப்பட்டதே; श्रान्त-विश्रान्ति-बीजं-சிரமமடைந்தவர்களுக்கு-இளைப்பாறுவதற்கு-

காரணமாயிருந்து வருவது. यं–எதை लब्ध्वा–அடைந்த பிறகு अन्यं–வேறு लाभं (எவ்வித) லாபத்தையும் तृणं इव–துரும்பைப்போலவே मनुते–மதிப்பாரோ. यत्र–எதனிடத்தில் भीतिः–பயமானது न उदेति–ஏற்படாதோ, यत्–अन्तः–எதற்குள் सान्द्र–आनन्दं அடர்த்தியான–ஆனந்தம் स्फुरति விளங்குகிறதோ, तत्–அதையே अमृतं–மரணமற்றதாக (நித்தியமென்று) विद्धि–அறிந்துகொள். अतः–இதைத்தவிர अन्यत्–வேறு எதுவும் आर्तं हि–துக்கமே என்று பிரஸித்தம்.

பிருஹதாரண்யக உபநிஷத் அந்தர்யாமி ப்ராஹ்மணத்திலுள்ள விஷயத்தை இந்த சுலோகத்தில் சுருக்கிச் சொல்கிறார். எவர் தேவர்களுக்குள்ளும், பூதங்களுக்குள்ளும், பிராணிகளுக்குள்ளும் இருந்துக்கொண்டு அவர்களையெல்லாம் சேஷ்டிக்கும்படிச் செய்கிறாரோ அவரே அந்தர்யாமி அவரே உன் ஆத்மா, அவரே மரணமற்றவர் என்று அங்கே விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறது.

यः सर्वेषु भूतेषु तिष्ठन्, सर्वेभ्यो भूतेभ्योऽन्तरः, यं सर्वाणि भूतानि न विदुः, यस्य सर्वाणि भूतानि शरीरं, यः सर्वाणि भूतानि अन्तरो यमयति, एष ते आत्मा अन्तर्यामी अमृतः ...
III 7 (15)

अदृष्टो द्रष्टा, अश्रुतः श्रोता, अमतो मन्ता, अविज्ञातो विज्ञाता। नान्योऽतोऽस्ति द्रष्टा, नान्योऽतोऽस्ति श्रोता, नान्योऽतोऽस्ति मन्ता, नान्योऽतोऽस्ति विज्ञाता, एष ते आत्मा अन्तर्यामी अमृतः। अतोऽन्यत् आर्तं ... ... III 7 (23)

அப்படி உள்ளேயிருப்பவர் தெரியாமலிருப்பாராவென்றால், பாலிற்குள்ளே நெய் இருக்கிறது தெரியவில்லையே? ஆனாலும் யாரும் தெரியாமலுமில்லை, ஏனென்றால் பாலில் நெய் இருப்பதினால்தான் பால் தித்திக்கிறது. அவ்விதமே ஆத்ம பதார்த்தம் ஸாதாரணமாகத் தெரியாமலிருந்தபோதிலும், ஜடமான சரீரம் இந்திரியம் முதலானவை சேஷ்டிக்கிறபடியால் அவைகளை சேஷ்டிக்கும்படி செய்துகொண்டு உள்ளே சைதன்யம் இருக்

கிறது. என்பதை நன்கு அறியலாம். இவைகளுடைய வியவஹாரங்களினுலேயே அது அறியப்பட்டதாகிறது என்பதை तद्यवहृति विदितं என்ற பதம் குறிக்கிறது. இவையாவும் சேஷ்டிக்காமலிருக்கும் ஸுஷுப்தி காலத்தில் துக்கக்கலப்பில்லாமல் ஆனந்த ரூபமாக பிரகாசித்துக்கொண்டு ஜாகிரத் ஸ்வப்ன காலங்களில் ஏற்படும் சிரமங்களிலிருந்து இளைப்பாறுவதற்கு ஆசிரயமாயிருப்பதும் இந்த ஆத்மாதான் என்பதை श्रान्त विश्रान्तिबीजं என்ற பதம் சொல்கிறது. நல்ல தூக்கம் வரும் போது இந்திரியங்களால் ஏற்படும் ஸுகத்தை அபேக்ஷிப்பது கிடையாது; இந்திரிய ஸுகங்களைவிட ஸுஷுப்தி ஸுகமே மேலானது என்பதுதான் இதற்கு காரணம். அங்குள்ள அவித்யையாகிற மனதையும் நீங்கிய ஸமாதிநிலையில் சுத்தமான ஆத்ம ஸுகம் அனுபவிக்க நேரிட்டால், மற்ற எந்த ஸுகமும் ஸுகமாகவே தோன்ருது. அந்த நிலையில் இரண்டாவது பதார்த்தமே கிடையாததால் பயத்திற்கு நிமித்தமே இல்லை. அந்த நிலையைத் தவிர வேறு எந்த நிலையிலும் துக்கமும் பயமும் இருந்தேதீரும்.

(49)

நன்கு விசாரித்துப் பார்த்தால் நாம் காண்கிற ஜகத்து பிரஹ்மத்தைத்தவிர வேறில்லை; பிரஹ்மமேதான் ஜகத்தாகத் தோன்றுகிறது. என்பதை அறியலாம்; ஜகத்தில் தோன்றும் நாமங்களுக்கும் ரூபங்களுக்கும் நாம் மதிப்புக்கொடுத்து அவைகளுக்கு அடிப்படை ஆதாரமாயிருந்துவரும் பிரஹ்மத்தை பொருட்படுத்துவதில்லை. இவ்விஷயத்தை, நூல்கள் சேர்ந்தே வஸ்திரமாயிருக்கையில் வஸ்திரம் என்ற வியவஹாரம் செய்யும்போது நூலை மறந்துவிடுகிருேம் என்ற திருஷ்டாந்தத்தின் மூலமாய் விளக்குகிருர்.

ओतः प्रोतश्च तन्तुभिरिह विततपटः चित्रवर्णेषु चित्रः
तस्मिन् जिज्ञास्यमाने ननु भवति पटः सूत्रमात्रावशेषः ।
तद्वत् विश्वं विचित्रं नगनगरनरग्रामपश्वादिरूपं
प्रोतं वैराजरूपे स जयति तदपि ब्रह्मणि प्रोतमोतम् ॥ ४९ ॥

इह-இவ்வுலகில் चित्रः-பலவித வர்ணங்களோடு கூடிய वितत-पटः-விஸ்தாரமான-வஸ்திரம் चित्रवर्णेषु-

பலவிதவர்ணமுடைய तन्तुषु-நூல்களில் ओतः-குறுக்கேயும் प्रोतः च-நெடுகிலும் நெய்யப்பட்டிருக்கிறது. तस्मिन्-அதை जिज्ञास्यमाने-அறியவேண்டுமென்று விசாரித்தால். पटः-அந்த வஸ்திரம் सूत्र-मात्र-अवशेषः-நூல்-மாத்திரமாகவே-மிஞ்சுகிறதாக भवति-ஆகிறது ननु-அல்லவா? तद्वत्-அதைப்போலவே नग-नगर-नर-ग्राम-पशु-आदि-रूपं-மலை (அல்லது, மரம்)-நகரம்-மனிதன்-கிராமம்-பசு-முதலிய-ரூபமாயிருக்கும் विचित्रं பலவிதமாயுள்ள विश्वं-ஜகத்தானது वैराज-रूपे-விராட்டின்-ரூபத்தில் प्रोतं-கோர்க்கப்பட்டிருக்கிறது; स-அது (விராட்ரூபம்) वियति-ஆகாசத்தில் (அவ்யக்தத்தில்) (கோர்க்கப்பட்டிருக்கிறது) तत् अपि-அதுவும் ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் प्रोतं ओतं-நெடுகிலும் குறுக்கேயும் கோர்க்கப்பட்டிருக்கிறது.

எப்படி நூலைத் தவிர வஸ்திரம் என்பது தனியாகக் கிடையாதோ அப்படியே பிரஹ்மத்தை விட வேறாக அவ்யக்தமென்ற மாயை கிடையாது; அந்த அவ்யக்தத்தை விட்டு வேறாக விராட் கிடையாது; அவரைவிட்டு வேறாக உலகம் கிடையாது; ஆகையால் உலகமென்பது பிரஹ்மத்தைத் தவிர வேறுபட்டதில்லை; அதற்கு அடிப்படையாயுள்ள பதார்த்தம் பிரஹ்மமே தான் என்று கருத்து.

இதற்குள்ள மூல சுருதியான பிருஹதாரண்யக உபநிஷத்தில் இந்த பிரஹ்மத்தை "அக்ஷரம்" என்ற பதத்தினால் வியவஹரிக்கப்பட்டிருக்கிறது.

स होवाच यदूर्ध्वं गार्गि दिवो यदवाक् पृथिव्या यदन्तरा द्यावापृथिवी इमे यद्भूतं च भवच्च भविष्यच्च इत्याचक्षते आकाश एव तद् ओतं च प्रोतं चेति । कस्मिन् नु खलु आकाशः ओतश्च प्रोतश्चेति ॥ III 8 (7)

स होवाच एतद्वै तद् अक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलं अनणु अह्रस्वं अदीर्घं .. ... III 8 (8) ॥

तद्वा एतदक्षरं गार्गि अदृष्टं द्रष्टृ, अश्रुतं श्रोतृ, अमतं मन्तृ, अविज्ञातं विज्ञातृ, नान्यत् अतोऽस्ति द्रष्टृ, नान्यत् अतोऽस्ति श्रोतृ, नान्यत् अतोऽस्ति मन्तृ, नान्यत् अतोऽस्ति विज्ञातृ । एतस्मिन्नु खलु अक्षरे गार्गि आकाशः ओतश्च प्रोत श्चेति ॥ III 8 (II)

(50)

ஒரே பதார்த்தம் பலவர்கத் தோன்ற முடியுமா என்ருல் பல குடங்களிலுள்ள வாயு பலவாகத் தோன்றுவதில்லையா? பல தீபங்களில் எரிந்துகொண்டிருக்கும் அக்னி பலவாகத் தோன்றுவதில்லையா? ஒரே ஸூர்யன் பலவித ஜல பாத்திரங் களில் பிரதிபிம்பிக்கும்போது வெவ்வேருகத் தோன்றவில்லையா? இப்படியிருக்க அனந்தமான சக்தியுடைய பிரஹ்மம் தன் சக்தியின் விருத்தி பேதத்திருல் பலவாகத் தோன்றுவது நியாயமே என்று பிரஹதாரண்ய சுருதியையே பிரமாணமாகக் காட்டுகிருர்.

रूपं रूपं प्रतिरूपो बभूव तदस्य रूपं प्रतिचक्षणाय ।
इन्द्रो मायाभिः पुरुरूप ईयते युक्ता ह्यस्य हरयः शता दशेति ... ॥
II, 5 (19)

सलिल एको द्रष्टाऽद्वैतो भवति एष ब्रह्मलोकः ... ॥ IV 3 (32)

காடகோபநிஷத்தில் உள்ள

अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ V (9)
वायुर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥ ,, (10)

என்ற வாக்கியங்களும் இதே விஷயத்தை எடுத்துச் சொல்கின்றன.

பிரஹ்மம் எதில் பிரதிபிம்பிக்கிறதென்ருல், தனித்தனியாக இருக்கும் அந்த: கரணம் என்ற உபாதியில என்று சொல்லி, அவ்விதம் ஏற்படும் பிரதிபிம்பம்தான் ஜீவன் என்ப்படுகிற தென்று இந்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிருர்.

रूपं रूपं प्रतीदं प्रतिफलनवशात् प्रातिरूप्यं प्रपेदे
ह्येको द्रष्टाऽद्वितीयो भवति च सलिले सर्वतोऽनन्तरूपः ।
इन्द्रो मायाभिरास्ते श्रुतिरिति वदति व्यापकं ब्रह्म तस्मात्
जीवत्वं यात्यकस्मात् अतिविमलतरे बिम्बितं बुद्ध्युपाधौ ॥ ५० ॥

इदं-இந்த பிரஹ்மமானது रूपं-रूपं-प्रति-ஒவ்வொரு ரூபத்திலும் प्रतिफलन-वशात्-பிரதிபிம்பிக்கிற-காரணத்தினுல் प्रातिरूप्यं-பிரதி பிம்பமாயிருக்கும் தன்மையை प्रपेदे-அடைந்தது. सलिले-ஜலத்தில் द्रष्टा-பார்க்கிறவன் एकः-ஒருவனுகவும் अद्वितीयः-இரண்டாவதற்றவனுகவும் (இருந்த போதிலும்) सर्वतः-நாலா பக்கத்திலும் (பலவித ஜல பாத்திரங்களில்) अनन्त-रूपः च-அநேக ரூபமுள்ளவனுகவும் भवति-ஏற்படுகிருன் हि-என்பது பிரஸித்தம். इन्द्रः இந்திரன் (பிரகாச ஸ்வரூபமான பிரஹ்மம்) मायाभिः-பலவித மாயா சக்திகளால் (பலவிதமாக) आस्ते-இருக்கிருர் इति-என்று श्रुतिः-வேதம் वदति சொல்கிறது. तस्मात्-ஆகையால் व्यापकं-எங்கும் வியாபித்திருக்கும் ब्रह्म பிரஹ்மமானது अतिविमलतरे-வெகு ஸ்வச்சமாயிருக்கிற बुद्धि-उपाधौ-புத்தியாகிற-உபாதியில் बिम्बितं-பிரதிபிம்பித்து अकस्मात्-உடனே जीवत्वं-ஜீவத்தன்மையை याति-அடைந்துவிடுகிறது.

(51)

இதே விஷயம் ரிக்வேதத்திலும்

पतङ्गमक्तमसुरस्य मायया हृदा पश्यन्ति मनसा विपश्चितः ।
समुद्रे अन्तः कवयो विचक्षते मरीचीनां पदमिच्छन्ति वेधसः ॥
X 177 (1)

என்ற மந்திரத்தில் சொல்லப்பட்டிருப்பதால் அதன் தாத்பர்யத்தை அடுத்த சுலோகத்தில் சொல்லி, உபாதிகளில் உள்ள குண தோஷங்களை அனுஸரித்து பிரதிபிம்பங்களும் வேறுபடுமென்பதை எடுத்துக்காட்டி, பிரதிபிம்பங்களுக்குள் வேற்றுமை தோன்றினுலும், எல்லா பிரதிபிம்பங்களுக்கும் மூல

காரணமாயுள்ள பிம்பத்தில் வேற்றுமை கிடையாது; அது போலவே பிரதிபிம்பமாகிய ஜீவர்களில் பலவிதமிருந்தாலும் பிம்பமாகிய பிரஹ்மம் ஒன்ருகவே எவ்வித மாறுதலுமன்னியில் இருந்துவருகிறது என்பதையும் காட்டுகிருர்.—

तज्ज्ञाः पश्यन्ति बुद्ध्या परमबलवतो माययाऽक्तं पतङ्गं
बुद्धावन्तः समुद्रे प्रतिफलितमरीच्यास्पदं वेधसस्तम् ।
यादृग्यावानुपाधिः प्रतिफलति तथा ब्रह्म तस्मिन्यथाऽऽस्यं
प्रासादर्शानुरूपं प्रतिफलति यथाऽवस्थितं सत्सदैव ॥ ५१ ॥

परम बलवतः–மிகவும்-பலமுள்ள वेधसः–பரமாத்மாவி னுடைய मायया–மாயையுடன் अक्तं–ஸம்பந்தப்பட்டு समुद्रे–முத்திரையுடன் கூடிய (மூடியிருக்கிற) बुद्धौ-புத்தியில் अन्तः–உள்ளே प्रतिफलित मरीचि-आस्पदं–பிரதிபலித்திருக்கிற-கிரணங்களுக்கு-ஆசிரயமாயுள்ள तं–அந்த पतङ्गं–பக்ஷியை (கீழே விழுந்திருப்பதை) तत्-ज्ञाः–அதன் தத்வத்தை-அறிந்தவர்கள் बुद्ध्या-(பரிசுத்தமான) புத்தியினுல் पश्यन्ति–பார்க்கிருர்கள். आस्यं–முகமானது प्राप्त-आदर्श-अनुरूपं–கிடைத்திருக்கும்-கண்ணுடிக்கு-தக்கபடி यथा–எப்படி प्रतिफलति-பிரதிபலிக்கிறதோ, तथा–அப்படியே ब्रह्म–பிரஹ்மமும் उपाधिः-உபாதியாயிருப்பது यादृक्-எவ்விதமோ यावान्–எவ்வளவோ, तस्मिन्–அவ்விதமாக அவ்வளவாக அந்த உபாதியில் प्रतिफलति–பிரதி பலிக்கிறது. (ஆனுல்) (பிரஹ்மம்) सदा एव–எப்பொழுதுமே यथाऽवस्थितं-எப்படியுள்ளதோ அப்படியே सत्–இருந்து வருகிறது.

கண்ணுடி அழுக்கடைந்திருந்தால் அதிலுள்ள பிரதிபிம்பம் மங்கலாகத்தான் தெரியும்; சிறியதாயிருந்தால் பிம்பம் பூராவும் பிரதிபிம்பத்தில் தெரியாது. அதுபோல, உபாதியான புத்தி எவ்வளவுக்கு அதிகமாக தெளிவாக இருக்கிறதோ அதற்குத் தக்கபடி பிரஹ்ம சைதன்யம் பிரகாசிக்கும். அந்த உபாதியால் ஏற்படும் தோஷங்கள் அந்த சைதன்யத்தைச் சேர்ந்தவையல்ல என்பதை ஆத்மஞானிகள் அறிந்திருப்பு

தினால் அவைகளை விலக்கி, ஜீவனிடத்திலும் சுத்த சைதன்ய ஸ்வரூபத்தையே ஸாக்ஷாத்கரிப்பார்கள்.

पतङ्ग மேலே இருந்து கீழே பறந்துவரக்கூடிய யோக்கியதை யும் மேலே பறந்துபோகக்கூடிய யோக்கியதையும் இருப்பதால் பதங்கம் என்ற பெயர் பக்ஷிக்கு ஏற்பட்டிருக்கிறது. ஜீவனும் தன் ஸ்வரூபத்தில் மேலான பிரஹ்மமாயிருந்தும் கீழே இறங்கி வந்திருப்பதினாலும் மறுபடியும் மேலே போக ஸ்வரூபத்தை அடைந்துவிட யோக்கியதையுள்ளதினாலும் அதை இங்கே பதங்கம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

समुद्र ஸமுத்திரத்தில் உத்தமமான முத்து, பவளம் முதலான பதார்த்தங்களும் பயங்கரமான திமிங்கிலம் முதலிய ஜந்துக்களும் இருப்பதுபோல், அந்தஃகரணத்தில் நல்ல வாஸனைகளும் கெட்ட வாஸனைகளும் ஏராளமாயிருப்பதால் ‘ஸமுத்திரம்’ என்று சொல்லியிருக்கிறதென்றும் எடுத்துக் கொள்ளலாம்.

(52)

இந்தப் பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தை இன்னும் கொஞ்சம் விளக்கி அடுத்த சுலோகத்தில் சொல்கிறார்:—

एको भानुस्तदस्थः प्रतिफलनवशाद्यस्त्वनेकोदकान्त-
नीनात्वं यात्युपाधिस्थितिगतिसमतां चापि तद्वत्परात्मा ।
भूतेषूच्चावचेषु प्रतिफलित इवाभाति तावत्स्वभावा-
वच्छिन्नो यः परं तु स्फुटमनुपहतो भाति तावत्स्वभावैः ॥ ५२ ॥

यः-எந்த भानुः-ஸூர்யன் एकः-ஒருவராயும் तदस्थः-(மேலே) ஸம்பந்தப்படாமல் தனித்திருப்பவராயும் இருக்கிறாரோ, (அவர்) अनेक-उदक-अन्तः-அநேக-ஜலங்களுக்கு-உள்ளே प्रतिफलन-वशात्-பிரதிபிம்பிப்பது-காரணமாக नानात्वं-பலவாயிருக்கும் தன்மையையும் उपाधि-स्थिति-गति-समतां-உபாதிகளுடைய-இருப்பு-அசைவு-இவைகளுக்கு ஸமானமாயிருக்கும் தன்மை யையும் च अपि-கூட याति-அடைகிறார். तद्वत्-அதைப் போலவே, यः-எந்த परात्मा-பரமாத்மாவானவர் उच्च-अवचेषु-மேல்-கீழுள்ள भूतेषु-பிராணிகளில் प्रतिफलितः-பிரதி

பிம்பித்து तावत्-स्वभावः-அந்தந்த-ஸ்வபாவங்களால் अवच्छिन्नः-வரையறுக்கப்பட்டவர் इव-போல आभाति-தோன்றுகிறரோ (அவர்) परं तु-ஆனாலும் तावत्-स्वभावैः-அந்தந்த ஸ்வபாவங்களால் अनुपहतः-பாதிக்கப்படாமல் स्फुरन्-தெளிவாக भाति-பிரகாசிக்கிறார்.

முன் உள்ள 7-வது சுலோகத்தின் தாத்பர்யத்தையே இங்கே வேறுவிதமாக வேறு திருஷ்டாந்தத்தினால் விளக்கியிருக்கிறார்.

(53)

ஆத்ம தத்வம் உபாதிகள் மூலமாய் பிரகாசிக்கிற காரணத்தினால்தான் உபாதிகளுக்குப் பிரகாசிக்கும் தன்மையும் மற்ற பதார்த்தங்களைப் பிரகாசப்படுத்தும் தன்மையும் ஏற்படுகிறது. ஜடமாய் பிரகாசமில்லாத கண்ணாடியை ஸூர்ய கிரணங்களில் காட்டினால் அக்கண்ணாடி ஸூர்ய பிரதிபிம்பமுடையதாக ஆகி அது தானும் பிரகாசித்துக்கொண்டு வேறு பதார்த்தங்களைப் பிரகாசப்படுத்தும் தன்மையையும் அடைந்து விடுகிறது. சந்திரனுக்கு இருட்டை போக்கடிக்கும் தன்மையில்லாத போனாலும், ஸூர்ய கிரணங்கள் சந்திரன்மேலே படும்போது அந்த கிரணங்களின் பலத்தைக் கொண்டு இருட்டை போக்கவில்லையா? வெங்கலப் பாத்திரத்தில் ஸூர்ய கிரணம் பட்டாலும், அது தானும் பிரகாசித்துக்கொண்டு மற்றவைகளை பிரகாசப்படுத்துவதில்லையா? அதைப்போலத்தான் ஆத்ம ஜ்யோதிஸ் புத்தியில் பிரதிபலித்து இந்திரியங்கள் மூலமாக வெளியிலுள்ள பதார்த்தங்களை பிரகாசிக்கும்படி செய்கிறது என்கிறார்.

यद्वत्पीयूषरश्मौ दिनकरकिरणैर्बिम्बितैरेति सान्द्रं
नाशं नैशं तमिस्रं गृहगतमथवा मूर्छितैः कांस्यपात्रे ।
तद्वद्बुद्धौ परात्मद्युतिभिरनुपदं बिम्बिताभिः समन्ता-
द्भासन्ते हीन्द्रियास्यप्रसृतिभिरनिशं रूपमुख्याः पदार्थाः ॥ ५३ ॥

यद्वत्-எப்படி पीयूषरश्मौ-சந்திரனிடத்தில் बिम्बितैः-பிரதிபிம்பிக்கிற दिनकर-किरणैः ஸூர்யனுடைய-கிரணங்களால் नैशं-இரவிலுள்ள सान्द्रं-நெருக்கமான तमिस्रं-இருட்டு नाशं-நாசத்தை एति-அடைகிறதோ, अथवा-

அல்லது, कांस्य-पात्रे-வெண்கல பாத்திரத்தில், मूर्छितैः-பிரதிபலித்திருக்கும் (ஸூர்ய கிரணங்களால்), गृह-गतं-வீட்டிற்குள்-இருக்கும் (இருட்டு எப்படி நாசத்தை அடைகிறதோ), तद्वत् - அதைப்போலவே, बुद्धौ-புத்தியில் अनुपदं- இடைவிடாமல், समन्तात्-நாலாபக்கத்திலும், बिम्बिताभिः-பிரதிபிம்பித்து, इन्द्रिय-आस्य-प्रसृतिभिः- இந்திரியங்கள்-வழியாக-வெளியில் செல்லுகின்ற, परात्म-द्युतिभिः-பரமாத்மாவின்-ஒளிகளால், रूप-मुख्याः-ரூபம் முதலான, पदार्थाः-பதார்த்தங்கள், अनिशं-எப்போதும், भासन्ते-பிரகாசிக்கின்றன, हि-என்பது பிரஸித்தம்.

(54)

பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தையே எடுத்துக்கொண்டு வேறு விதமாயும் பிரஹ்மத்தை அறியலாமென்று அடுத்த சுலோகத்தில் எடுத்துச்சொல்கிறார். ஒரு குளத்தில் ஐந்து அடி ஆழம் ஜலம் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அதில் ஆகாசம் பிரதிபிம்பிக்கிறதைப் பார்க்கிறோம். ஆகாசம் என்பது இடைவெளி. அந்த இடைவெளி, ஜலத்திற்கு எல்லாப் பக்கங்களிலும் இருக்கிறது; அந்த ஜலத்திலும் ஐந்து அடிவரை வியாபித்தேயிருக்கிறது; அந்த ஜலத்தில் பிரதிபிம்பித்துமிருக்கிறது. ஆக வியாபகமான ஆகாசம், ஜலத்தை மாத்திரம் வியாபிக்கும் ஆகாசம், பிரதிபிம்ப ஆகாசம், என்று மூன்றுவிதமான ஆகாசம் வியவஹார யோக்கியமாக ஆகிறது. அப்படியே ஸர்வவியாபகமான ஆத்மா, அந்த:கரணத்தில் மாத்திரம் வியாபிக்கும் ஆத்மா அவ்வந்த:கரணத்தில் பிரதிபலித்திருக்கும் ஆத்மா, என்று மூன்று விதமாகச் சொல்லலாம். உபாதியாகிய அந்த:கரணம் விலகிவிட்டால், பின் சொன்ன இரண்டு விதமும் மறைந்து வியாபகமான ஆத்மாவுடன் ஒன்றாய்ச் சேர்ந்து லயித்துவிடும். குளத்தில் ஜலம் பூராவும் வற்றிவிட்டால், தனியாக ஜல-ஆகாசமோ, ஜலத்தில் பிரதிபிம்ப ஆகாசமோ, இருப்பதற்கு நியாயமில்லை; வியாபகமான ஒரே ஆகாசம்தான் மிஞ்சும். ஜலம் வற்றிவிட்டால் ஜலத்தில் ஏற்படக்கூடிய அழுக்கினாலோ அலைகளாலோ அதிலுள்ள பிரதிபிம்பத்திற்கு மாறுபாடுகள் ஏற்படவும் இடமிராது. அதுபோல் ஆத்மாவைப் பிரித்துக்காட்டிய அவித்யை விலகும்போது அதனால் ஏற்படும் புண்ய பாப கர்மாக்

க்ளும் ஸுகதுக்க அனுபவங்களும் விலகிவிடும் என்பதையும் சொல்கிறார் :-

पूर्णात्मानात्मभेदात्त्रिविधमिह परं बुद्ध्यवच्छिन्नमन्य-
त्तत्रैवाभासमात्रं गगनमिव जले त्रिप्रकारं विभाति ।
अम्भोवच्छिन्नमस्मिन्प्रतिफलितमतः पाथसोऽन्तर्बहिश्च
पूर्णावच्छिन्नयोगे व्रजति लयमविद्या स्वकार्यैः सहैव ॥ ५४ ॥

गगनं-ஆகாசமானது जले-ஜலத்தில் त्रि-प्रकारं-மூன்று-விதமாக विभाति-பிரகாசிக்கிறது. (1) अम्भोवच्छिन्नं-ஜலத்தினால் வரையறுக்கப்பட்டது (2) अस्मिन्-அந்த ஜலத்தில் प्रतिफलितं-பிரதிபலித்திருப்பது (3) अतः-அந்த पाथसः-ஜலத்திற்கு अन्तः-உள்ளேயும் बहिश्च வெளியிலும் இருப்பது என்று. इव-இவ்வாகாசத்தைப்போல, पूर्ण आत्मा-अनात्म-भेदात्-நிறைந்தது-ஆத்மா (ஜீவன்)-அனாத்மா (ஜடம்)-என்ற வேறுபாட்டினால் (பிரஹ்மம்) त्रि-विधं-மூன்று-விதமாயிருக்கிறது. इह-இம்மூன்றில் (1) परं-மேலானது (சுத்த சைதன்யம்) (2) बुद्धि-अवच्छिन्नं-புத்தியினால்-வரையறுக்கப்பட்டது अन्यत्-வேறு (3) तत्र एव-(அந்த புத்தியிலேயே आभासमात्रं-வெறும் தோற்றமாயிருப்பது. पूर्ण-अवच्छिन्न-योगे-(இவைகளில்) நிறைந்ததான சுத்த சைதன்யமும்-புத்தியினால் வரையறுக்கப்பட்ட ஜீவனும்-ஒன்றாய்ச்சேர்ந்து கலந்துவிட்டால், अविद्या-அவித்யையானது स्व-कार्यैः सह एव-தன்னால் ஏற்படக் கூடியவைகள் யாவற்றுடன் கூடவே लयं-லயத்தை व्रजति-அடைந்து விடுகிறது.

இந்த சுலோகத்தில் காணும் கருத்தை பஞ்சதசியில் சித்ர தீபத்தில் ஸ்ரீ வித்யாரண்யர் விளக்கியுள்ளார். புத்தி அவச்சின்னமான சைதன்யம்தான் கூடஸ்தன் என்பது. இதற்குத்தான் சுத்த பிரஹ்மத்துடன் அபேதம் கூடஸ்த சைதன்யத்தில் கல்பிதமான அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கும் சைதன்யம் ஜீவன் அதாவது சிதாபாஸன். தேஹத்தையொட்டிய தர்மங்களெல்லாம் சிதாபாஸனுக்குத்தான். கூடஸ்தனுக்குக்கிடையாது. ஜலம் வற்றி

யதும் அதில் தோன்றின பிரதிபிம்பம் மறைவதுபோல உபாதி யான அந்தக்கரணம் நாசமடைந்ததும் அதில் பிரதிபிம்பித்த சிதாபாஸனும் நாசமடைகிருன். இதையே

प्रज्ञानघन एव एतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति

(ஆத்மா உபாதிகள் உண்டாகும்பொழுது தோன்றி உபாதிகள் அழியும்பொழுது நாசமடைகிருன்), என்ற சுருதி கூறுகிறது. தண்ணீர் வற்றிஞல் அது இருந்த இடம் (ஜலாகாசம் மஹாகாசத்துடன் சேர்ந்துவிடுகிறதுபோல் கூடஸ்தசைதன்யம் அந்தக்கரணம் அழிந்ததும் எங்கும் நிறைந்த பூர்ணப்ரஹ்ம மாக ஆகிவிடுகிறது என்ற கருத்தை

अविनाशी वाऽरेयमात्मा

(இந்த ஆத்மா நாசமடையாதது) என்ற சுருதி கூறுகிறது.

(55)

பிரதிபிம்பத்திற்கு தனியாக ஸத்தை (இருப்பு) கிடையாது; பிம்பத்தின் ஸத்தைதான் அதில் தோன்றுகிறது என்பதிஞல் பிரதிபிம்பம் பராதீனம் என்பது தெரிகிறது. அப்படியே வரையறுக்கப்பட்டதும், வியாபகத்தைத் தவிர வேறில்லாத திஞல், அதுவும் பராதீனந்தான் என்று ஏற்படுகிறது. அந்தர்யாமியாக இருந்து பிரஹ்மம் ஜகத்தை சேஷ்டிக்கும்படி செய்வதிஞலும் ஜகத்தும் அதிலுள்ள யாவும் பராதீனம் என்று வேறுவிதமாகவும் வர்ணிக்கிருர்:-

दृश्यन्ते दारुनार्यो युगपदगणिताः स्तम्भसूत्रप्रयुक्ताः
संगीतं दर्शयन्त्यो व्यवहृतिमपरां लोकसिद्धां च सर्वाम् ।
सर्वत्रानुप्रविष्टादभिनवविभवाद्यावदर्थानुबन्धा-
त्तद्वत्सूत्रात्मसंज्ञाद्व्यवहरति जगद्भूर्भुवःस्वर्महान्तम् ॥ ५५ ॥

स्तम्भ-सूत्र-प्रयुक्ताः-ஸ்தம்பத்திலுள்ள-நூல்களால்-ஏவப் பட்டவைகளாக अगणिताः-கணக்கிடப்படாத (அநேகம்) दारु-नार्यः-மரத்திஞல் செய்யப்பட்ட-பெண் பொம்மைகள் युगपत्-ஒரே சமயத்தில் सङ्गीतं-ஸங்கீதத்தையும் लोक-सिद्धां-உலகத்தில்-ஏற்பட்ட अपरां-வேறு सर्वाम्-எல்லா

व्यवहृतिं च - வியவஹாரத்தையும் दर्शयन्त्यः—காட்டுவதாக दृश्यन्ते - பார்க்கப்படுகின்றன. तद्वत् - அதைப்போலவே सर्वत्र—எங்கிலும் अनुप्रविष्टात् - உள்ளே நுழைந்திருக்கிறதும் अभिनव-विभवात् புதுபுதிதான - ஸாமர்த்தியத்தோடு கூடினதும் यावत्-अर्थ-अनुबन्धात्—எவ்வளவுவரை - பிரயோஜனமுண்டோ - அதுவரை ஸம்பந்தப்பட்டதுமான सूत्रात्म-संज्ञात् - ஸூத்ராத்மா - என்ற பெயருடைய பரமாத்மாவினால் भूः-भुवः-स्वः-मह-अन्तं - பூமி-புவர்லோகம் ஸ்வர்க்க லோகம்-மஹ லோகம் முடியவுள்ள जगत् - ஜகத்தானது व्यवहरति—வியவஹரிக்கிறது.

மரத்தினால் பலவித பொம்மைகளைச் செய்து அவைகளின் அங்கங்களில் கயிறுகளைக் கட்டி பின்னால் ஒரு ஸ்தம்பத்தில் கட்டிவைத்து அங்கு ஒருவன் இருந்துகொண்டு அக்கயிறுகளை உசிதம்போல் இழுத்து அப்பொம்மைகளை பலவிதமாக சேஷ்டிக்கச் செய்வது உண்டு. அவைகள் ஸங்கீதம் பாடுகிறப்போலும், நர்த்தனம் செய்வது போலும், மற்றும் பல விதமாய் சேஷ்டிப்பதுபோலும் காட்டுவது உண்டு. வெளியில் இருந்து பார்க்கிறவர்களுக்கு அக்கயிறுகளாவது அவைகளை பிடித்து ஆட்டும் மனிதனாவது கண்ணுக்குத்தெரியாது. பொம்மைகள் சேஷ்டிப்பது மாத்திரம் தெரியும். அப்படியே இவ்வுலகத்தில் ஸகல பிராணி வர்க்கங்களும் பதார்த்தங்களும் சேஷ்டிப்பதை மாத்திரம் நாம் பார்க்கிறோம். இவைகளை ஆட்டி வைக்கும் பரமாத்மாவையாவது அவர் எப்படி ஆட்டிவைக்கிறார் என்பதையாவது நாம் பார்ப்பதில்லை. இவை யாவும் ஜடம் தானாக சேஷ்டிக்கும் சக்தியற்றவை என்பதைக்கூட நாம் ஸாதாரணமாக கவனித்து அறிந்து கொள்வது கிடையாது. அக்கயிறுகளைப் பிடித்திருப்பவன்போல பரமாத்மா விளங்கும் போது ஸூத்ராத்மா எனப்படுகிறார்.

இவ்விஷயம் பிரஹதாரண்யக உபநிஷத்தில்

स होवाच वायुर्वै गौतम तत्सूत्रं, वायुना वै गौतम सूत्रेण अयं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि संहब्धानि भवन्ति ... ॥ III 7 (2)

என்ற வாக்கியத்தில் கண்டிருக்கிறது.

(56)

ஜகத்தை சேஷ்டிக்கும்படிச் செய்வது பிரஹ்மம் என்று சொன்னோம். அவ்வளவு மாத்திரமில்லை, ஜகத் இருப்பதற்கே காரணம் பிரஹ்மந்தான். ஜகத் இருப்பதினால் அதை ஸத்யம் என்று சொன்னால், பிரஹ்மம் அந்த ஸத்யத்திற்கும் இருப்பைக் கொடுக்கும் வஸ்துவானதினால் 'ஸத்யத்திற்கும் ஸத்யம்' என்ற பெயருக்குரியதாகிறது. ஜகத் இருப்பதினால் அதற்கு ஸத்யம் என்று வைத்துக் கொள்ளாமல், அதில் கண்ணுக்குத் தெரிகிற பிருதிவீ அப், தேஜஸ் இம் மூன்று அம்சங்களும் 'ஸத்' என்றும் கண்ணுக்குப் புலப்படாமலிருக்கிற வாயு, ஆகாசம் இவ்விரண்டு அம்சங்களும் 'த்யத்' என்றும் சொல்லக்கூடியதால், இவ்வித ஐந்து அம்சங்களும் சேர்ந்திருக்கும் ஜகத்தை 'ஸத்–த்ய' என்றும் வைத்துக்கொள்ளலாம். இவ்விதம் வைத்துக்கொண்டாலும், ஜகத்திற்கு இருப்பை கொடுக்கிறபடியால் பிரஹ்மத்தை 'ஸத்யத்திற்கும் ஸத்யம்' என்று சொல்வது நியாயமேயாகும்.

இவ்விஷயத்தை பிருஹதாரண்யக உபநிஷத்தில்

द्वे वाव ब्रह्मणो रूपे, मूर्तं चैवामूर्तं च, मर्त्यं चामृतं च, स्थितं च यच्च, सच्च त्यच्च । II 3 (1)

तदेतत् मूर्तं यदन्यत् वायोरन्तरिक्षाच्च, एतत् मर्त्यं, एतत् स्थितं, एतत् सत् ... ... । ,, ,, (2)

अथ अमूर्तं वायुश्चान्तरिक्षं च, एतत् अमृतं, एतत् यत्, एतत् त्यत् ... ... । ,, ,, (3)

... अथात आदेशो नेति नेति न ह्येतस्मादिति नेत्यन्यत् परमस्ति, अथ नामधेयं सत्यस्य सत्यं इति । प्राणा वै सत्यं तेषामेष सत्यम् ... ... । ,, ,, (6)

என்ற வாக்கியங்களில் சொல்லியிருக்கிறது. அவைகளின் தாத்பர்யத்தை விளக்கி ஸ்ரீமத் ஆசார்யார் அடுத்த சுலோகம் இயற்றியிருக்கிறார்—

तत्सत्यं यत्त्रिकालेष्वनुपहतमदः प्राणदिग्व्योममुख्यं
यस्मिन्विश्रान्तमास्ते तदिह निगदितं ब्रह्म सत्यस्य सत्यम् ।
नास्त्यन्यत्किंच यद्वत्परमधिकमतो नाम सत्यस्य सत्यं
सच्च त्यच्चेति मूर्ताद्युपहितमवरं सत्यमस्यापि सत्यम् ॥ ५६ ॥

यत्-எது त्रि-कालेषु-(சென்ற காலம், நிகழ் காலம், வரும் காலம், ஆகிய) மூன்று-காலங்களிலும் अनुपहतं-பாதிக்கப்படாமலிருக்கிறதோ तत्-அது सत्यं-ஸத்யமாகும். (அவ்விதம் ஸத்யமென்று கருதப்படுகிற) अदः-இந்த प्राण-दिक्-व्योम-मुख्यं-பிராணன்-திக்-ஆகாசம் (காலம்) முதலியவை यस्मिन्-எதனிடத்தில் विश्रान्तं-நிலைபெற்றதாக आस्ते-இருக்கின்றனவோ, तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமானது इह-இங்கே सत्यस्य सत्यं-ஸத்யத்திற்கும் ஸத்யம் (என்று) निगदितं-சொல்லப்பட்டிருக்கிறது. किंच மேலும், यद्वत्-எதைப்போல परं-மிகவும் अधिकं-மேலானதாக अन्यत्-வேறு எதுவும் न अस्ति கிடையாதோ, अतः-அந்தக் காரணத்தினல் பிரஹ்மம் सत्यस्य सत्यं नाम-ஸத்யத்திற்கும் ஸத்யமாக உள்ளது सत् च-(பிருதிவீ, அப், தேஜஸ் ஆகிய) ஸத் என்பதும் त्यत् च-(வாயு, ஆகாசம் ஆகிய) த்யத் என்பதும் इति-என்கிற मूर्तादि-उपहितं மூர்த்தம் (ரூபமுடையது) முதலியவற்றுடன் (ரூபமில்லாதது உள்படஐந்து பூதங்களுடன்) சேர்ந்திருக்கிறவர் (ஐந்து பூதங்களை உபாதிகளாயுடைய ஹிரண்யகர்ப்பர் अवरं-सत्यं கீழ்பட்ட ஸத்யம் अस्य अपि-அவருக்குங்கூட सत्यं-ஸத்யமாயிருப்பது (சுத்த பிரஹ்மம்).

ஆகாசம் காலம் முதலியவைகளுக்கு உலக ரீதியாய் ஸத்யம் என்ற வியவஹாரம் இருந்தபோதிலும் அவைகளுக்கும் இருப்பைக்கொடுத்து வரும் பிரஹ்மந்தான் வாஸ்தவமான ஸத்யம். மூவுலகத்தையும் வியாபித்து அதில் "நான்" என்ற அபிமானமுள்ள ஹிரண்யகர்ப்பரையும் வியவஹார தசையில் தான் ஸத்யமென்று பெயர் சொல்லலாம். பாரமார்த்திக தசையில் சுத்த பிரஹ்மத்தைத் தவிர வேறு எதுவும் ஸத்யமாகாது.

அவைகளுக்கு ஸத்யம் என்று வியவஹாரமிருப்பதால், பிரஹ்மத்தை ஸத்யத்திற்கும் ஸத்யம் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. வாஸ்தவத்தில் பிரஹ்மத்தினுடைய ஸத்யத் தன்மையினுல்தான் அவைகள் ஸத்யமென்று வியவஹரிக்கக் கூடிய யோக்கியதையை அடைகின்றன.

(57)

இவ்விஷயத்தையே திருஷ்டாந்த மூலமாக அடுத்த சுலோகத்தில் விளக்கிக் காட்டுகிறார்.

यत्किंचिद्भात्यसत्यं व्यवहृतिविषये रौप्यसर्पाम्बुमुख्यं
तद्वै सत्याश्रयेणेत्ययमिह नियमः सावधिर्लोकसिद्धः ।
तद्वै सत्यस्य सत्ये जगदखिलमिदं ब्रह्मणि प्राविरासी-
न्मिथ्याभूतं प्रतीतं भवति खलु यतस्तच्च सत्यं वदन्ति ॥ ५७ ॥

रौप्य-सर्प-अम्बु-मुख्यं-வெள்ளி-ஸர்ப்பம்-ஜலம்-முதலிய असत्यं-வாஸ்தவமில்லாத, यत् किंचित्-ஏதேனும் ஒன்று, व्यवहृति-विषये-வியவஹார விஷயத்தில், भाति-தோன்றுகிறதோ, तत्-அது, सत्य-आश्रयेण-(முத்துச்சிப்பி-கயிறு-கானல் பூமி-முதலிய) ஸத்யமான பதார்த்தத்தை-ஆசிரயமாய் வைத்துக்கொண்டுதான் (அவ்விதம் தோன்றுகிறது) इति-என்று इह-இவ்விஷயத்தில் सावधिः-எல்லையுடன் கூடியதான अयं-இந்த नियमः-நியமமானது लोक-सिद्धः-உலகத்தில் ஸித்தமானது (அனுபவத்தினுல் ஸ்திரமாய் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது) तत् वै-அதே காரணத்தினுல் सत्यस्य सत्ये-ஸத்யத்திற்கு ஸத்யமாயுள்ள ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் इदं-இந்த जगत्-ஜகத் अखिलं பூராவும்' प्राविरासीत्-தோன்றியிருக்கிறது. मिथ्या-भूतं-பொய்யாக இருக்கும் ஒரு பதார்த்தம் यतः-எதினுல் प्रतीतं-தோன்றுவதாக भवति-ஏற்படுகிறதோ तत् च-அதையும் सत्यं-ஸத்யம் என்று वदन्ति-சொல்கிறார்கள்.

ஜகத்திற்கு ஆரம்பம் என்று ஒரு எல்லை, முடிவு என்று மற்றொரு எல்லை, இரண்டுமுண்டு. ஜகத் ஆரம்பிப்பதற்கு

முன்னாலும், ஜகத் தோன்றும் காலத்திலும், ஜகத் மறைந்ததற்கு பின்னாலும் எது இருந்து வருகிறதோ, அந்த பிரஹ்மத்தைத் தான் வாஸ்தவமான ஸத்யம் என்று சொல்ல வேண்டும். அதனுடைய இருப்பினால்தான் உலகம் ஸத்யம்போல் தோன்று கிறது. சிப்பியில் வெள்ளியும், கயிற்றில் பாம்பும், கானலில் ஜலமும் தோன்றுவதெல்லாம் அடிப்படையாயுள்ள சிப்பி, கயிறு, கானல் இவையிருப்பதினால்தான். அவை இல்லாத பக்ஷத்தில் இவை தோன்றவே முடியாது. ஆகையால் தோற்றங் களுக்கெல்லாம் அடிப்படையாய், அதிஷ்டானமாய் எந்த பதார்த்தங்கள் இருக்கின்றனவோ அவைகளைத்தான் ஸத்யம் என்று சொல்வது நியாயமாகும்.

(58)

பிரஹ்மம் ஸத்யத்திற்கும் ஸத்யம் என்று சொல்வதைப் போல பூர்ணத்திற்கும் பூர்ணம் என்றும் சொல்லலாம். ஸகல ஸ்தூல பிரபஞ்சத்தையும் வியாபிக்கக்கூடிய விராட்டை பூர்ணம் எனலாம்; அப்படியே ஸூக்ஷ்ம பிரபஞ்சத்தை வியாபித்திருக்கும் ஹிரண்யகர்ப்பரை விராட்டைவிட பூர்ணம் எனலாம். சுத்த பிரஹ்மம் அவ்விருவர்களையும்விட வியாபகமாயிருப்பதால் பூர்ணத்திற்கும் பூர்ணமேயாகும். அவ்விருவர்களுக்கும் வியாபகத் தன்மை அவர்களின் காரியமான ஸ்தூல ஸூக்ஷ்ம பிரபஞ்சங்களை உத்தேசித்துத்தான். பிரபஞ்ச ஸ்ருஷ்டியை உத்தேசித்துத்தான் ஹிரண்யகர்ப்பரும் விராட்டும் ஆவிர்பாவ மடைகிறார்கள். அவர்கள் ஆவிர்பவிப்பதற்கு முன்னாலும் அவர்கள் லயமான பிறகும் பிரஹ்மம் இருந்து வருவதால், அதுதான் வாஸ்தவமாய் நிரதிசயமான பூர்ணத் தன்மையை உடையது. உலகம் தோன்றுவதினால் அந்த பிரஹ்மத்தின் பூர்ணத்தன்மைக்குக் குறைவோ உலகம் லயித்துவிடுவதினால் பிரஹ்மத்தின் பூர்ணத் தன்மைக்கு ஏற்றமோ, யாதொன்றும் கிடையாது. அது எப்பொழுதும் ஒரே மாதிரியாய் பூர்ண மாகவேயிருந்து வருகிறது.

पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥ V 1

என்று பிரஹதாரண்யக உபநிஷத் வாக்கியத்தின் தாத்பர் யத்தை விளக்கிச் சொல்கிறார்.

यत्राकाशावकाशः कलयति च कलामात्रतां यत्र कालो
यत्त्वाशावसानं बृहदिह हि विराट्पूर्वमर्वागिवास्ते ।
सूत्रं यत्राविरासीत महदपि महतः तद्धि पूर्णाच्च पूर्णं
संपूर्णादर्णवादेरपि भवति यथा पूर्णमेकार्णवाम्भः ॥ ५८ ॥

यत्र-எதனிடத்தில் आकाश-अवकाशः-ஆகாசத்திற்கும் அவகாசம் உண்டோ, यत्र-எதன் விஷயத்தில் कालश्च-காலமும் कलामात्रतां-அம்சமாக மாத்திரமிருக்கும் தன்மையை कलयति-அடைகிறதோ, यत्र एव-எதிலேயே आशा-अवसानं-திக்குக்களின்-முடிவோ, बृहत्-இந்த பெரிய தான विराट्-पूर्व-விராட் முதலானதும் इह-இங்கே (சுத்த பிரஹ்மத்தை கவனிக்கையில்) अर्वाक् इव-கீழ்பட்டது போல आस्ते-இருக்கிறது. सूत्रं-ஸூத்ராத்மா (ஹிரண்ய கர்ப்பர்) महतः-பெரிதிற்கெல்லாம் महत् अपि-பெரியதாய் இருந்தபோதிலும் यत्र-எதனிடத்தில் आविरासीत्-ஆவிர் பாவமடைந்தாரோ तत् हि-அது அல்லவா पूर्णात् च-நிறைந்த எல்லாவற்றையும்விட पूर्णं-நிறைந்தது? संपूर्णात् நன்கு நிறைந்திருக்கிற अर्णवादेः अपि-ஸமுத்திரம் (நதி, குளம்) முதலியதைக் காட்டிலுங்கூட एक-अर्णव-अम्भः-ஒரே-ஸமுத்திரமாயிருப்பதின்-ஜலம் यथा-எப்படி पूर्णं-நிறைந்ததாக भवति-ஆகிறதோ (அப்படியாம்).

உலகில் ஆகாசம்தான் எல்லா பதார்த்தங்களுக்கும் இருக்க இடம் கொடுக்கிறது. ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள் லோகங்கள் எல்லாம் ஆகாசத்தில் இடம் பெற்றிருப்பதால் அதை மிகவும் நிறைந்தது, பூர்ணம், என்று சொல்லலாம். அந்த ஆகாசத்திற்கும் இடம் கொடுக்கும் தன்மை பிரஹ்மத்தினிடத்தில் இருப்பதால், அது நிறைந்ததெல்லாவற்றையும்விட நிறைந்ததேயாகும். இடம் வியாபிக்கிறதினால் மாத்திரம் பூர்ணம் என்பதில்லை, காலத்தினாலும் பூர்ணம். ஸ்ருஷ்டியேற்படும் போதுதான் காலம் என்ற வியவஹாரம் ஏற்படுகிறது, தினம், மாஸம், வருஷம், யுகம், மன்வந்தரம், கல்பம் எல்லாமே வரையறுக்கப்பட்டவைகள்; பிரஹ்மம் நித்ய ஸித்தமானதினால்

அதை காலம் எவ்விதமும் வரையறுக்க முடியாது; அதனுடைய ஏதோ லேசம்தான் காலமெனபடுதே. திக்குக்கள் எவ்வளவு தூரம் போனாலும் முடிவடையாததினுல் அவைகளையும் வியாபக மாய் சொல்லலாம்; ஆனாலும் அவைகளும் வியவஸ்தைக்கு கட்டுப்பட்டவைகள்தான்; பிரஹ்மத்திற்கு எவ்வித கட்டுப் பாடும் கிடையாது. தேசம், காலம், திககு இவைகளை வியாபித்து ஸகல ஸ்தூல பிரபஞ்சத்தையும் சரீரமாயுடைய விசுவருபமு தரிக்கும் விராட் ஸ்வரூபமும பிரஹ்மத்தை உத்தேசித்து கீழ் பட்டதே. அவரையும்விடப் பெரியவராகிய ஹிரண்யகர்ப்பரும यो ब्रह्माणं विदधाति पूर्वं (எவர் முதலில் பிரஹ்மாவை ஸ்ருஷ்டி செய்கிருரோ) हिरण्यगर्भं पश्यत जायमानं (ஹிரண்யகர்ப்பர் பிறப்பதை பாருங்கள்) எனபதினுல் உத்பத்தியுள்ளவரென்று தெரிகிறது. இவ்விதமாக மிகவும பூர்ணமாய் இருககும் விராட், ஹிரணய கர்ப்பர் இவர்களைவிட பிரஹ்மம் பூர்ணம் என்பதில் என்ன ஸந்தேஹம்? நதி, ஸமுத்திரம், முதலியவை நிறைந் திருக்கலாம். பிரளய காலத்தில் ஜலத்தைத் தவிர வேறு எதுவு மில்லாமல் ஒரே ஜலமாக இருக்கும்போது அதையல்லவா நிறைந்தது என்று ஸங்கோசமன்னியில் சொல்லலாம்? எனறு இதற்கு திருஷ்டாந்தம் கொடுத்திருக்கிருர்.

(59)

பிரஹ்மந்தான் ஸகல பதார்த்தங்களையும் சேஷ்டிக்கும்படி செய்கிறதென்று முன் சொல்லப்பட்டது. இதிலிருந்து பதார்த் தங்கள் வேறு பிரஹ்மம் வேறு என்று நினைத்துவிடக் கூடாது என்பதற்காக, அந்த பதார்த்தங்களின் ரூபமாயிருப்பதும் பிரஹ்மந்தான் என்கிருர்—

अन्तः सर्वौषधीनां पृथगमितरसैर्गन्धवीर्यैर्विपाकै-
रेकं पाथोदपाथः परिणमति यथा तद्वदेवान्तरात्मा ।
नानाभूतस्वभावैर्वहति वसुमती येन विश्वं पयोदो
वर्षत्युच्चैर्हुताशः पचति दहति वा येन सर्वान्तरोऽसौ ॥ ५९ ॥

एकं-ஒன்ருயிருக்கிற पाथोद-पाथः-மேகத்தின்-ஜலமானது सर्व-ओषधीनां-எல்லா-ஒஷதிகளுக்கும் (புல் பூண்டு பயிர் ஸஸ்யாதிகளுக்கும்) अन्तः-உள்ளே पृथक्-

தனித்தனியாக अमित-रसैः அளவற்ற-ருசிகளோடும் गन्ध-वीर्यैः-வாஸனை-வீர்யங்களுடனும் विपाकैः-பலவித மாறுதல்களுடனும் यथा-எப்படி परिणमति-பரிணமமடைகிறதோ, तद्वत् एव-அதைப்போலவே अन्तरात्मा-உள்ளேயிருக்கும் ஆத்மா नाना-भूत-स्वभावैः-பலவிதமான-பூதங்களுடைய-ஸ்வபாவங்களுடன் (பரிணமிக்கிறது). येन-எதினால் वसुमती-பூமியானது विश्वं-எல்லாவற்றையும் वहति-தாங்குகிறதோ, (எதினால்) पयोदः மேகமானது उच्चैः-மேலிருந்து वर्षति-மழை பொழிகிறதோ, येन-எதினால் हुताशः-அக்னியானது पचति-பாகம் செய்கிறது दहति वा-அல்லது எரிக்கிறதோ, असौ-அது सर्व-आन्तरः-எல்லாவற்றிற்கும் உள்ளேயிருப்பது (பிரஹ்மம்).

ஸகல பதார்த்தங்களிலும் வியாபித்து அவைகளுக்கு இருக்கும் தன்மையையும் சேஷ்டிக்கும் தன்மையையும் கொடுப்பது பிரஹ்மம் ஒன்றேதான். ஆனால் அது அந்தந்த உபாதிகளின் ஸம்பந்தத்தினால் பலவிதமாயிருப்பதாகத் தோன்றுகிறது. மேகத்திலிருந்து வரும் ஜலந்தான் மாமரத்திற்கும் உபயோகப் படுகிறது. வேப்பமரத்திற்கும் உபயோகப்படுகிறது. ஆனாலும் அவைகளில் ஏற்படும் பூ, காய், பழம் இவைகளிலுள்ள ருசியோ, வாஸனையோ, சக்தியோ வேறுபட்டேயிருக்கின்றன. பிரஹ்மத்தில் வேறுபாடுகள் தோன்றுவதற்குக் காரணமும் இதைப் போலத்தான்.

(60)

பிரஹ்மத்தில் தோன்றும் வேறுபாடுகளுக்கு மதிப்பு கொடுத்து கொண்டேயிருந்தால் நல்லது கெட்டது என்ற எண்ணங்களுக்கும் அவை மூலமாய் ராகத்வேஷங்களுக்கும் அவைகளிலிருந்து புண்ய பாப கர்மாக்களுக்கும் அவைகளின் பலனாக ஸுக துக்க அனுபவங்களுக்கும் வரிசையாக இடம் கொடுத்து ஸம்ஸாரத்திலேயே உழன்று கொண்டிருக்கும்படி நேரிடும். ஆகையால் பேத புத்தியைவிட்டு எல்லாவற்றையும் பிரஹ்மாகாரமாய் பார்க்கவேண்டும் என்று காடக உபநிஷத்தில்

यदेवेह तदमुत्र यदमुत्र तदन्विह ।
मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ॥ IV 10

मनसैवेदमाप्तव्यं नेह नानाऽस्ति किंचन ।
मृत्योः स मृत्युं गच्छति य इह नानेव पश्यति ॥ ,, 11

என்றும் பிரஹதாரண்யக உபநிஷத்தில்

मनसैवानुद्रष्टव्यं नेह नानाऽस्ति किंचन ।
मृत्यो स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ॥ IV 4 (19)

என்றும் சொல்லியிருப்பதை ஸ்ரீமத் ஆசார்யார் திருஷ்டாந்தத்துடன் சொல்கிறார்.—

भूतेष्वात्मानमात्मन्यनुगतमखिलं भूतजातं प्रपश्येत्
प्रायः पाथस्तरङ्गान्वयवदथ चिरं सर्वमात्मैव पश्येत् ।
एकं ब्रह्माद्वितीयं श्रुतिशिरसि मतं नेह नानाऽस्ति किंचित्
मृत्योराप्नोति मृत्युं स इह जगदिदं यस्तु नानेव पश्येत् ॥ ६० ॥

भूतेषु-பூதங்களில் आत्मानं-ஆத்மாவையும், आत्मनि-ஆத்மாவினிடத்தில் अखिलं-எல்லா भूतजातं-பூத-ஸமூஹம் अनुगतं-கூடவிருப்பதாகவும், प्रपश्येत्-பார்க்கவேணடும். अथ-பிறகு पाथः-तरङ्ग-अन्वयवत्-ஜலமும்-அலையும்-ஸம்பந்தப் பட்டிருப்பதுபோல (அலை எப்படி ஜலத்தைத் தவிர வேறு இல்லையோ அதைப்போல) सर्वं-எல்லாவற்றையும் प्रायः-அநேகமாய் आत्मा एव-ஆதமாவாகவே चिरं-நீடித்து (எப்பொழுதும்) पश्येत्-பார்க்கவேண்டும். ब्रह्म-பிரஹ்மமானது एकं-ஒன்றே, अद्वितीयं-இரண்டாவதற்றது என்று श्रुति-शिरसि-உபநிஷததில मतं-தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. इह-இங்கே (பிரஹ்மததினிடத்தில்) नाना-பலவென்பது किंचित्-கொஞ்சமேனும் न अस्ति-கிடையாது. यः तु-எவனுவது इदं-இந்த जगत्-ஜகத்தை इह-இந்த பிரமமத்தில नाना इव-வேறு போல पश्येत्-பார்ப்பானுகில், सः-அவன் मृत्योः-மரணத்திலிருந்து मृत्युं-மரணத்தையே आप्नोति-அடைவான்.

ஸகல பதார்த்தங்களிலும் ஆத்ம தத்வம் ஊடுருவி வியாபித்துக் கொண்டிருக்கிறதென்பதையும் உணரவேண்டும்,

எல்லா பதார்த்தங்களும் ஆத்மாவிடத்திலேயே கல்பிக்கப்பட்டு இருப்பதாகத் தெரிகின்றனவென்பதையும் உணரவேண்டும். இந்த உணர்ச்சியேற்பட்டுவிட்டால், அப்பதார்த்தங்களுக்கு தனியாக இருப்பு கிடையாது, ஆத்மாதான் அப்பதார்த்தங்களாக தோன்றுகிறது என்ற அறிவு ஏற்பட்டு விடும். ஜலம் வேறு அலை வேறு என்று தோன்றின போதிலும், அலையில் ஜலத்தைத்தவிர வேறு யாதொன்றுமில்லை என்று தெரியும்போது எல்லாம் ஜலந்தான் என்ற அறிவு ஏற்படுவது போலத்தான் இதுவும். இவ்விஷயம் ஈசாவாஸ்ய உபநிஷத்தில்

यस्तु सर्वाणि भूतानि आत्मन्येवानु पश्यति ।
सर्वं भूतेषु चात्मानं ततो न विजुगुप्सते ॥ 6

என்ற மந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

प्रायः (அநேகமாய்)-ஜலத்திற்கும் அலைக்கும் ஸ்வரூபத்தில் வித்யாசமில்லாமல இரண்டும் ஜலமாகவே இருந்த போதிலும், அலை தனியான ரூபத்தையும் பெயரையும் அடைந்து, ஜலத்திலிருந்து உண்டானதென்ற வியவஹாரத்திற்கு விஷயமாயிருப்பதால், ஜலமும் அலையும் எல்லா அம்சத்திலும் ஒன்று என்று சொல்ல முடியாது. அதினுல் "அநேகமாய்" என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

श्रुतिशिरसि मतं என்பதற்கு श्रुतिभिरभिहितं (சுருதிகளால்-சொல்லப்பட்டது) என்றும் ஒரு பாடம் இருப்பதாகத்தெரிகிறது.

मृत्योराप्नोति मृत्युं (மரணத்திலிருந்து மரணமடைகிருன்) என்றுல இப்பொழுது மரணத்தையடைந்து, மறு ஜன்மா அடைந்து, அதிலும் மரணமடைந்து, அப்படியே இடைவிடாமல் ஜனன மரணப் பிரவாஹத்தில் அகப்பட்டுக்கொண்டு சுழன்று கொண்டேயிருப்பான் எனறு தாத்பர்யம்.

(61)

முன் 28 வது சுலோகத்தில் பிரத்யகாத்மா எங்கேயும் போவதும் கிடையாது, வருவதும் கிடையாது; உபாதியாய் இருப்பதுதான் போய் வருகிறது என்று சொல்லப்பட்டது. ஆனுலும் உலகத்தில் ஆத்மாவிற்கே கதி, ஆகதி (போக்கு வரத்து) எல்லாமிருப்பதாக தோற்றமும் வியவஹாரமும் இருந்து

வருகிறதே, அதற்கு என்ன காரணம்? என்றால் ஆத்ம தத்வம் தெரியாததினால் ஏற்படும் பிராந்திதான் என்று சொல்ல, அது மனஸில் நன்கு படுவதற்காக திருஷ்டாந்தத்தையும் சொல்கிறார்.

प्राक्पश्चादस्ति कुम्भाद्गगनमिदमिति प्रत्यये सत्यपीदं
कुम्भोत्पत्तावुदेति प्रलयमुपगते नश्यतीत्यन्यदेशम् ।
नीते कुम्भेन साकं व्रजति भजति वा तत्प्रमाणानुकारी
इत्थं मिथ्याप्रतीतिः स्फुरति तनुभृतां विश्वतस्तद्वदात्मा ॥ ६१ ॥

इदं-இந்த गगनं-ஆகாசமானது कुम्भात्-குடத்திற்கு (குடம் உண்டாவதற்கு) प्राक्-முன்னமேயும், (குடம் நாச மடைந்ததற்கு) पश्चात्-பின்னாலேயும், अस्ति-இருக்கிறது इति-என்கிற प्रत्यये-அறிவு सति अपि-இருந்துங்கூட, कुम्भ-उत्पत्तौ-குடம்-உண்டாகும்போது इदं-இந்த ஆகாசம் उदेति-உண்டாகிறது, प्रलयं-(குடம்) நாசத்தை उपगते-அடையும்போது नश्यति-(குடத்திலுள்ள ஆகாசம்) நாச மடைகிறது इति-என்றும், (அந்தக் குடம்) अन्य-देशं-வேறு-இடத்திற்கு नीते-கொண்டு போகப்படும்போது कुम्भेन-குடத்துடன் साकं-கூடவே (அதிலுள்ள ஆகாசம்) व्रजति-போகிறது, वा-அல்லது तत्-प्रमाण-अनुकारी-அந்த குடத்தின்-அளவு-ரூபம் இரண்டையும் (அதிலுள்ள ஆகாசம்) भजति-அடைகிறது, इत्थं-இவ்விதமாக तनुभृतां-பிராணிகளுக்கு मिथ्या-प्रतीतिः-பொய்யான-தோற்றம் स्फुरति-தோன்றுகிறது. तद्वत्-அதே மாதிரிதான் विश्वतः-உலகத்தைக் கொண்டு आत्मा-ஆத்மாவானவர் (உலக வியவஹாரங்கள் உள்ளவர்போல பொய்யாகத் தோன்றுகிறார்).

ஆகாசம் ஸர்வவியாபகமாயிருப்பதால் அது ஒரு இடத்திலிருந்து வேறு இடம் போக அவசியமுமில்லை, ஸாத்தியமுமில்லை. ஆகாசத்தையும்விட வியாபகமாய் இருக்கும் ஆத்மா போகிறது என்று நினைத்தால் அது வெறும் பிராந்திதானாகும். உபாதியில் உள்ள "போகிறது" என்ற தர்மம் ஆத்மாவிடத்தில் அறியாமையால் ஆரோபம் செய்யப்படுகிறது.

(62)

உபாதியாயிருப்பது பிரஹ்மத்தைவிட வேறு என்றிருந்தால் பிரஹ்மத்திற்கு பிரஹ்மத்தன்மையே போய்விடும். அது ஸர்வ வியாபகமாயிருக்கிறதென்று சொல்லமுடியாது. ஆகையால் உபாதியாகத் தோன்றுவதுகூட பிரஹ்மந்தான் என்று ஒப்புக்கொள்ளவேண்டும். ஜகத் "இருக்கிறது" என்பதும் "பிரகாசிக்கிறது" என்பதும் வாஸ்தவத்தில் இருக்கிறதாய்- பிரகாசிக்கிறதாயுள்ள பிரஹ்மமாயிருப்பதினால் தான் என்ற விஷயத்தை இரண்டு உதாஹரணங்களால் எடுத்துக்காட்டுகிறார்.

**यावान्पिण्डो गुडस्य स्फुरति मधुरिमैवास्ति सर्वोऽपि तावान्**
**यावान् कर्पूरपिण्डः परिणमति सदामोद एवात्र तावान् ।**
**विश्वं यावत् विभाति द्रुमनगनगरारामचैत्याभिरामं**
**तावत् चैतन्यमेकं प्रविकसति यतोऽन्ते तदात्मावशेषम् ॥ ६२ ॥**

गुडस्य-வெல்லத்தின் पिण्डः-கட்டியானது यावान्-எவ்வளவாக स्फुरति-தோன்றுகிறதோ, तावान्-அவ்வளவு सर्वः अपि-எல்லாங்கூட मधुरिमा एव-தித்திக்கும் தன்மையாகவே अस्ति-இருக்கிறது. कर्पूर-पिण्डः-கர்ப்பூர-கட்டி यावान्-எவ்வளவு परिणमति-பரிணமத்தையடைகிறதோ, अत्र-இங்கே तावान्-அவ்வளவும் सत्-आमोदः एव-நல்ல-வாஸனைதான். (அதைப்போலவே) द्रुम-नग-नगर-आराम-चैत्य-अभिरामं-மரம்-மலை-நகரம் உத்யானவனம்-சைத்யம்-(யஜ்ஞபூமி)-இவைகளால் அழகாயிருக்கிற विश्वं-உலகமானது यावत्-எவ்வளவு विभाति-பிரகாசிக்கிறதோ, तावत्-அவ்வளவும் एकं-ஒன்றாயுள்ள चैतन्यं-சைதன்யந்தான் प्रविकसति-பிரகாசிக்கிறது. यतः-ஏனென்றால், अन्ते-கடைசியில் (நாசமடையும்போது பூரா உலகமும்) तत्-आत्मा-अवशेषं-அந்த ஆத்மாவாக மாத்திரம்-மீதமுள்ளதாக ஆகிவிடுகிறது.

தித்திப்பு இருப்பதினால்தான் வெல்லம் என்ற வியவஹாரம்; வாஸனை இருப்பதினால்தான் கர்ப்பூரம் என்ற

வியவஹாரம். அப்படியே, பிரஹ்மம் இருப்பதினுல்தான் உலகம் என்ற வியவஹாரம் ஆகையால் உலகத்திற்கு பிரஹ்மத்தை விட்டு தனியாக இருப்போ, பிரகாசமோ இருக்கக்கூடியதில்லை. உலகம் உண்டாவதற்கு முன்னும் பிரஹ்மம் இருந்தது. உலகம் மறைந்த பிறகும் மிஞ்சியிருப்பது பிரஹ்மம்தான். இப்பொழுது உலகம் தோன்றும்போதும் இருந்துவருகிறது. வாஸ்தவமாய் கவனித்துப் பார்த்தால் பிரஹ்மந்தான் உலக ரூபமாய்த் தோன்றுகிறது எப்படி மண் தான் ரூபமாகத் தோன்று கிறதோ, கயிறுதான் பாம்பாகத் தோன்றுகிறதோ, அப்படியே தான் அதிஷ்டானமான பிரஹ்மம் ஆரோபிதமான ஜகத்தாகத் தோன்றுகிறது.

(63)

ஜகத் ரூபமாய்த் தோன்றுவது பிரஹ்மமானுல் பிரஹ்மம் என்று ஏன் தெரியவில்லை? ஜகத் மாத்திரமாகத்தானே தோன்றுகிறது? என்று கேட்கலாம். வாஸ்தவத்தில் எங்கும் பொதுவாக உள்ள பிரஹ்மமும் தெரிகிறது, அதில் விசேஷ மான ஜகத்தும் தோன்றுகிறது. நாம் ஜகத்தின் தோற்றத்திற்கு பிராதான்யம் கொடுத்துவிடுவதினுல், பிரஹ்மத்தை நாம் உணர் வதில்லையே தவிர அது தெரியாமலிருக்கவில்லை. இவ்விஷயம் பிரஹதாரண்யக உபநிஷத்தில்,

स यथा दुन्दुभेर्हन्यमानस्य न बाह्यान् शब्दान् शक्नुयात् ग्रहणाय, दुन्दुभेस्तु ग्रहणेन दुन्दुभ्याघातस्य वा शब्दो गृहीतः ॥
IV 5 (8)

स यथा शङ्खस्य ध्मायमानस्य न बाह्यान् शब्दान् शक्नुयात् ग्रहणाय, शङ्खस्य तु ग्रहणेन शङ्खध्मस्य वा शब्दो गृहीतः ॥
,, ,, (9)

स यथा वीणायै वाद्यमानायै न बाह्यान् शब्दान् शक्नुयात् ग्रहणाय, वीणायै तु ग्रहणेन वीणावादस्य वा शब्दो गृहीतः ॥
,, ,, (10)

என்ற வாக்கியங்களில் துந்துபி, சங்கம், வீணை இவைகளை திருஷ்டாந்தங்களாகச் சொல்லி காட்டப்பட்டிருக்கிறது. இதையே ஸங்கிரஹித்துத் தெளிவாக ஶ்ரீமத் ஆசார்யார் சொல்கிறுர்.

वाद्यान्नादानुभूतिर्यदपि तदपि सा नूनमाघातगम्या
वाद्याघातध्वनीनां न पृथगनुभवः किं तु तत्साहचर्यात् ।
मायोपादानमेतत्सहचरितमिव ब्रह्मणाऽऽभाति तद्व-
त्तस्मिन्प्रत्यक्प्रतीते न किमपि विषयीभावमाप्नोति यस्मात् ॥ ६३ ॥

वाद्यात्-துந்துபி முதலான வாத்தியத்திலிருந்து नाद-अनुभूतिः-நாதத்தின்-அனுபவம் ஏற்படுகிறது என்பது यदपि-எதுவோ तदपि-அப்படியிருந்தபோதிலும் सा-அந்த அனுபவமானது आघात-गम्या-அடிப்பதினால் (வாசிப்பதினால்) அறியப்படுகிறது नूनं-என்பது நிச்சயம். किं तु-ஆனால் तत्-साहचर्यात्-அந்த நாதத்துடன் சேர்ந்தேயிருப்பதினால் वाद्य-आघात-ध्वनीनां-வாத்தியத்தை அடிப்பதால் ஏற்படும் த்வனி விசேஷங்களுக்கு पृथक्-தனியாக अनुभवः-அனுபவமானது न-இருப்பதில்லை. तद्वत्-அதைப் போலவே माया-उपादानं-மாயையை உபாதானமாயுள்ள एतत्-இந்த ஜகத் ब्रह्मणा-பிரஹ்மத்துடன் सहचरितमिवः-சேர்ந்தேதான் भाति-பிரகாசிக்கிறது. यस्मात्-ஏனென்றால், तस्मिन्-அந்த பிரஹ்மமானது प्रत्यक्-உள்ளேயிருக்கும் வஸ்துவாக प्रतीते-தெரிந்துவிட்டதேயானால் किमपि-எதுவும் विषयीभावं-அறிவிற்கு விஷயமாயிருக்கும் தன்மையை न आप्नोति-அடைகிறதில்லை.

வீணை வாசிக்கும்பொழுது அடிப்படையான நாதமும் அதில் பலவித சிறப்பு த்வனிகளும் ஏற்படுகின்றன. இரண்டும் சேர்ந்தேயிருப்பதால் பொது நாதத்திலிருந்து சிறப்பு த்வனிகளை தனியாகப் பிரித்து அறிந்துகொள்ள முடிவது இல்லை இதிலிருந்து பொது நாதம்தான் பல சிறப்பு த்வனிகளாக காதில் விழுகிறது. பொது நாதம் இல்லாவிட்டால் சிறப்பு த்வனிகள் இருக்காது. பொது நாதத்தைவிட சிறப்பு த்வனிகள் வேறல்ல. சிறப்பு த்வனிகளிலேயே மனதை ஈடுபடுத்துவதால் பொது நாதத்தை நாம் அறியமுடிவதில்லை. அதில் மனதைச் செலுத்தினால் சிறப்பு த்வனிகள் மறைந்துவிடும் என்பதை நாம் அறிந்துகொள்ளலாம். இதுபோலவே மாயையின் காரணமாக ஏற்பட்டுள்ள உலகம் பிரஹ்மத்துடன் சேர்ந்தேதான்

காக்ஷியளிக்கிறது. பிரஹ்மத்தை விட்டுப்பிரிந்து உலகம் இருக்கவே முடியாது. எல்லாவற்றிலும் பொதுவாக உள்ளது பிரஹ்மம். அதில் தோன்றும் விசேஷங்கள்தான் உலகம். உலகைப் பார்க்கும்போது ஸாமான்யமான பிரஹ்மத்தையும் நாம் பார்க்கிறோம். ஆனாலும் சிறப்பான உலகத்தில் மனம் ஈடுபடுவதால் பிரஹ்மம் நமக்கு தெரிவதில்லை. விசேஷத்தில் இருந்து மனதை திருப்பினால் ஸாமான்யமான பிரஹ்மத்தை அறியலாம்.

(64)

பிரஹ்மத்தை சிறிதாகக் காட்டிய மாயை மறைந்து விட்டதேயானால் ஸகல ஜகத்திற்கும் அதிஷ்டானமாயிருக்கிற வியாபகமான பிரஹ்ம சைதன்யமும் மாயையின் கார்யமாகிய சரீராதிகளில் குறுகியிருப்பதாகத் தோன்றிக்கொண்டு இருந்த ஜீவ சைதன்யமும ஒன்றே என்ற ஞானம் ஏற்பட்டுவிடும். அப்பொழுது ஜகத் என்று இரண்டாவது வஸ்துவாக எதுவும் தோன்றாததினால் ராகத்வேஷமோ, அவைகளால் ஏற்படும் புண்ய பாப கர்மாக்களோ, அவைகளால் ஏற்படும ஸுக துக்கங்களோ, இருப்பதற்கு நியாயமில்லாததினால், எப்பொழுதும் பிரஹ்மாகாரமான விருத்தியுடன் நிலைத்திருந்து விடுவான் ஞானி என்கிறார்.

दृष्टः साक्षादिदानीमिह खलु जगतामीश्वरः संविदात्मा
विज्ञानः स्थाणुरेको गगनवदभितः सर्वभूतान्तरात्मा ।
दृष्टे ब्रह्मातिरिक्तं सकलमिदमसद्रूपमाभासमात्रं
शुद्धं ब्रह्माहमस्मीत्यविरतमधुनाऽत्रैव तिष्ठेदनीहः ॥ ६४ ॥

जगतां-ஸகல ஜகத்துக்களுக்கும் ईश्वरः-ஈசுவரராய் (ஆளுபவராய்) संविद्-आत्मा-அறிவு-ஸ்வரூபராய் विज्ञान-स्थाणुः-அனுபவ ஞானத்திலேயே நிலைத்தவராய் एकः-ஒரேயொருவராய் सर्व-भूत-अन्तरात्मा-எல்லா-வஸ்துக்களுக்கும்-உள்ளேயுள்ள ஆத்மாவாயுள்ளவர், इदानीं-இப்பொழுது इह-இங்கேயே, गगनवत्-ஆகாசம்போல अभितः-நாலா பக்கத்திலும் (எங்கிலும்) साक्षात्-நேரில் दृष्टः खलु-பார்க்கப்பட்டு விட்டார் அல்லவா? ब्रह्म-अतिरिक्तं-

பிரஹ்மத்திலிருந்து-வேருகிய इदं-இந்தஜகத் सकलं-எல்லாம் असद्-रूपं-வாஸ்தவமாக இல்லாத்தன்மையுடையது आभासमात्रं-வெறும் தோற்றந்தான் என்பதும் दृष्टं-பார்க்கப்பட்டு விட்டது. (ஆகையால்) अधुना-இப்பொழுது अनीहः-எவ்வித ஆசையும் (வியாபாரமும்) அன்னியில் "अहं-நான் शुद्धं-சுத்தமான ब्रह्म-பிரஹ்மமாகவே अस्मि-இருக்கிறேன்" इति-என்று अविरतं-இடைவிடாமல் எப்பொழுதும் अत्रैव-இதிலேயே तिष्ठेत्-நிலைத்திருக்க வேண்டியது.

(65)

ஜாக்கிரத் காலத்தில் தோன்றும் பிரபஞ்சம் ஸ்வப்ன காலத்தில் தோன்றும் பிரபஞ்சத்தைவிட கொஞ்சம் நிலைபெற்றதாய் தோன்றினபோதிலும், இரண்டுமே தோற்றம் தான் என்றும், ஆகையால் அவைகளுக்கு மதிப்புக்கொடுக்காமல் அவைகளின் தோற்றதிற்கு அதிஷ்டானமாயுள்ள ஆத்மதத்வத்தையே அறியவேண்டும் என்றும், இதுவரை சொல்லப்பட்டது. அவ்விருவித தோற்றமுமில்லாத நல்ல தூக்கத்திலும் ஆத்மா விளங்கிக்கொண்டு இருக்கிறது என்பதை மேலால் விளக்கிக்காட்டுகிருர். ஜாக்கிரத் சமயத்தில் வலது கண்ணில் ஆத்மா நன்கு பிரகாசிப்பதினுல், அவ்வாத்மாவிற்கு "இந்திரன்" (பிரகாசிக்கிறவன்) என்று பெயர்; அப்பெயரை அப்படியே சொல்வது மரியாதையாகாதென்று "இந்திரன்" என்று சொல்கிருர்கள்; இவனே விசுவன் எனப்படுகிருன். இடது கண்ணிலும் இவனுடைய ரூபமே உள்ளது. அதை விசுவன் என்ற இந்திரனின் பத்னி இந்திராணியாக சொல்கிருர்கள். இவர்கள் ஜாக்ரத் காலத்தில் விளையாடிவிட்டு ஸ்வப்னத்தில் தைஜஸன் என்ற பெயருடன் விளையாடிவிட்டு ஓய்ந்து போயிருக்கும் சமயம்தான் ஸுஷுப்தி; அப்பொழுது ஆத்மா பிராக்ஞன் எனப்படுகிருன். அந்த தசையில் ஜாகிரத் ஸ்வப்ன தசைகளிலுள்ள எவ்வித துக்கமும் கிடையாததினுல் அங்கு அனுபவிக்கப்படும் ஸுகத்திற்கு அளவேயில்லை. அவ்வித ஸுகம் ஆவிர்பாவம் அடையும் கோசம் ஆனந்தமய கோசம் எனப்படும். அவ்வித ஸுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறவனை தூக்கத்திலிருந்து எழுப்பினுல், அவன் துக்கத்தையடைவானுகையால் தூங்குகிறவனை எழுப்புவது

தோஷமென்றே சாஸ்திரம் சொல்கிறது. ஸ்வப்னம் கண்டு கொண்டிருப்பவனையே திடீரென்று எழுப்பக்கூடாது, என்று இருக்கையில் நன்ருய் தூங்குகிறவனை எழுப்புவது மிகுந்த தோஷமேயாகும். அப்பொழுது அனுபவிப்பது ஆத்மானந்தம். அவித்யை என்ற மறைவு இருக்கும்போதே இவ்வளவு மேலான ஸுகமாயிருக்கும்போது, அவித்யை நிவிருத்தியாகி எவ்வித மறைவுமண்ணியில் ஏற்படும் ஆத்மானந்தம் ஸர்வோத்கிருஷ்டம் என்று சொல்லத் தடையுமில்லையென்று தாத்பர்யம்—

इन्द्रेन्द्राण्योः प्रकामं सुरतसुखजुषोः स्याद्रतान्तः सुषुप्तिः
तस्यामानन्दसान्द्रं पदमतिगहनं यत्स आनन्दकोशः ।
तस्मिन् नो वेद किंचित् निरतिशयसुखाभ्यन्तरे लीयमानो
दुःखी स्यात् बोधितः सन् इति कुशलमतिः बोधयेन्नैव सुप्तम् ॥

प्रकामं-இஷ்டப்படியெல்லாம் सुरत-सुख-जुषोः-சேர்க்கையின்-ஸுகத்தை-அடைந்துள்ள इन्द्र-इन्द्राण्योः-இந்திரனுக்கும்-இந்திராணிக்கும் रत-अन्तः-போகத்தின்-முடிவிலுள்ளதாக सुषुप्तिः-நல்ல தூக்கம் स्यात्-இருக்கும். तस्यां-அந்த ஸுஷுப்தியில் आनन्द-सान्द्रं-நெருக்கமுள்ள ஆனந்தத்துடன் கூடினதாய் अति-गहनं-வெகு உள்ளேயிருப்பதாயுள்ள पदं-ஸ்தானம் यत्-எதுவோ सः-அது आनन्द-कोशः-ஆனந்தமய-கோசமாகும். तस्मिन्-அந்த கோசத்தில, निरतिशय-सुख-अभ्यन्तरे-எல்லையற்ற ஸுகத்தின் மத்தியில் लीयमानः-லயித்திருப்பவன் किंचित्-எதையும் नो वेद-அறிவதில்லை. (அவன்) बोधितः-எழுப்பிவிடப்பட்டவனுக சன்-ஏற்பட்டால் दुःखी-துக்கமுள்ளவனுகவே स्यात्-ஆவான் इति-என்ற காரணத்திருல் कुशल-मतिः-நல்ல புத்தியுள்ளவன் सुप्तं-தூங்குகிறவனை न एव बोधयेत्-எழுப்பவேகூடாது.

விச்வதை ஜஸர்களுக்கு இந்திரன் இந்திராணீ என்ற பெயர் பிருஹதாரண்யக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

इन्धो ह वै नामैष योऽयं दक्षिणेऽक्षन् पुरुषः । तं वा एतं इन्धं सन्तं इन्द्र इत्याचक्षते परोक्षेणैव, परोक्षप्रिया इव हि देवाः प्रत्यक्षद्विषः ॥ IV 2 (2)

अथ एतद्वामेऽक्षणि पुरुषरूपमेषाऽस्य पत्नी विराट् । तयोः एष संस्तावो य एषोऽन्तर्हृदये आकाशः ... ॥ ,, ,, (3)

ஸ்வப்னம் காண்பவனையே எழுப்பக்கூடாது

तं म आयतं बोधयेत् इत्याहुः दुर्भिषज्यं हास्मै भवति यमेष न प्रतिपद्यते ... ॥ ,, 3 (14) என்றும்

ஸுஷுப்தி ஸமயத்தில் ஒன்றையும் அறியாமல் எல்லையற்ற ஸுகத்தை அனுபவிக்கிறான்.

तद् यथा प्रियया स्त्रिया संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नान्तरं, एवमेवायं पुरुषः प्राज्ञेनात्मना संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नान्तरं ... ॥ ,, ,, (21)

என்றும் பிருஹதாரண்யக உபநிஷத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. பின்னுள்ள வாக்கியத்தின் அர்த்தத்தை ஸ்ரீமத் ஆசார்யாரே 69வது சுலோகத்தில் விஸ்தாரமாகச் சொல்லப் போகிறார்.

(66)

ஸுஷுப்தி ஸமயத்தில், ஜீவனை தனித்துப்பிரித்துக் காட்டின தேஹம், இந்திரியம், மனஸ், அஹங்காரம், யாதொன்றுமில்லாததினால், அவன் பிரஹ்மத்துடன் ஒன்றாகக் கலந்துவிடுகிறான். ஆகையினால்தான் மிருகம் பக்ஷி மனிதர் யாவருக்கும் ஸுஷுப்தி காலத்தில் ஏற்படும் ஸுகத்தில் எவ்வித தாரதம்யமும் கிடையாது. அப்பொழுது எவ்வித பாபத்திற்கும் இடமில்லை. தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு அவ்வுபாதிகளுடன் சேரும் போதுதான் பாபம், துக்கம் எல்லாம் ஏற்படுகிறது இவ்விஷயத்தை ரிக்வேதத்தில்,

सर्वे नन्दन्ति यशसाऽऽगतेन सभासाहेन सख्या सखायः ।
किल्विषस्पृक् पितुषणिर्ह्येषामरं हितो भवति वाजिनाय ॥ X 72 (10)

"இந்திரியங்களை இழுத்துக்கொண்டு வந்திருக்கும் ஸ்நேஹிதரான பிரஹ்மத்தினால் எல்லாரும் ஸுகமடைந்தவர்களாக ஆனந்திக்கிருர்கள். இவர்களில் எவன் அன்னத்தில் ஆசைப்பட்டு வீர்யத்திற்காக ஈடுபடுகிருனே அவன் தோஷமுள்ளவனாக ஆகிருன்."

என்று சொல்லியிருக்கும் வாக்கியத்தின் தாத்பர்யத்தை அடுத்த சுலோகத்தில் விளக்குகிருர். ஸுஷுப்தி காலத்தில் கண் முதலிய இந்திரியங்களை வெளியில் போகாமல் செய்வதாலும், மற்ற சமயங்களில்; வெளியில் போகும் போதும் தன்னுடைய சைதன்ய சக்தியைக்கொடுத்து உதவுகிறபடியாலும் ஆத்மா ஸ்நேஹிதர் அவை வெளியில் போகாமலேயிருந்தால் பாப ஸம்பந்தமே கிடையாது; வெளியில் போகவாரம்பித்தால் பாப ஸம்பந்தம் உண்டு; என்பதையும் விளக்குகிருர்.

सर्वे नन्दन्ति जीवा अधिगतयशसा गृह्णता चक्षुरादी-
न्नन्तः सर्वोपकर्त्रा बहिरपि च सुषुप्तौ यथा तुल्यसंस्थाः ।
एतेषां किल्बिषस्पृक्जठरभृतिकृते यो बहिर्वृत्तिशास्ते
त्वक्चक्षुःश्रोत्रनासारसनवशमितो याति शोकं च मोहम् ॥ ६६ ॥

अन्तः-உள்ளே चक्षुरादीन् கண் முதலிய இந்திரியங்களை गृह्णता-கிரஹித்து (இழுத்துக்) கொள்பவராயும் बहिः अपि च-வெளியிலும் सर्व-उपकर्त्रा எல்லாவற்றிற்கும்-உபகாரம் செய்பவராயும் உள்ள अधिगत-यशसा-அறியப்பட்ட-யசஸ்ஸுள்ள பிரஹ்மத்தினுடன் சேர்ந்து, यथा-எப்படி सुषुप्तौ-ஸுஷுப்தி காலத்தில் तुल्य-संस्थाः-ஒரே மாதிரி ஸமானமான நிலையுள்ளவர்களா (யிருக்கிருர்களோ அப்படி), सर्वे-எல்லா जीवाः-ஜீவர்களும் नन्दन्ति-ஆனந்தமடைகிருர்கள். एतेषां-இவர்களுக்குள் यः-எவன் जठर-भृतिकृते-வயிற்றை போஷிப்பதற்காக त्वक्-चक्षुः-श्रोत्र-नासा-रसन-वशः-தோல்-கண்-காது-மூக்கு-நாக்கு ஆகிய

இந்திரியங்களின் வசமாக इतः-போய் बहिः-वृत्तिः- வெளியில்-விருத்தியுள்ளவனுக ஆस्ते-இருக்கிருனே, (அவன்) किल्बिष-स्पृक्-பாப ஸம்பந்தமுள்ளவனுய் शोकं-சோகத்தையும் मोहं च-மோஹத்தையும் याति-அடைகிருன்.

பிரஹ்மத்திற்கு ஸமானமாக வேறு எதுவும் கிடையாது என்ற காரணத்தினுல் அதற்கே "பெரிய யசஸ்" என்ற பெயர் என்று சுவேதாச்வதர உபநிஷத்தில் காண்கிறது.

न तस्य प्रतिमा अस्ति यस्य नाम महद्यशः ॥ IV 19.

ஆகையால் பிரஹ்மத்தை யசஸ் என்றே இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

गृह्णता- ஸுஷுப்தி காலத்தில் ஆத்மா ஸகல இந்திரியங்களையும் கிரஹித்துக்கொண்டு விடுகிருரென்று பிரஹதாரண்யக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

यत्रैष एतत्सुप्तोऽभूत् य एष विज्ञानमयः पुरुषः तदेषां प्राणानां विज्ञानेन विज्ञानमादाय य एषोऽन्तर्हृदय आकाशः तस्मिन् शेते तानि यदा गृह्णाति अथ हैतत्पुरुषः स्वपिति नाम तद्गृहीत एव प्राणो भवति गृहीता वाक् गृहीतं चक्षुः गृहीतं श्रोत्रं गृहीतं मनः ॥ II 1 (17).

तुल्यसंस्थाः- ஸுஷுப்தி ஸமயத்தில் உள்ள ஸுகத்தில் துக்கம் கலக்காது. எல்லா பிராணிகளுக்கும் ஒரேமாதிரி ஸுகந்தான். அந்த ஸுகமும் ஆத்ம ஸ்வரூப ஸுகமே தவிர, புண்ய கர்மாவினுல் ஏற்படும் ஸுகமல்ல. அங்குள்ள ஆனந்தம் எவ்வித கவலையுமற்ற குழந்தை, எல்லா ஸம்பத்தும் பொருந்திய மஹாராஜா. ஸகல ஆசைகளையும் விட்ட உத்தமமான பிராஹ்மணர். இவர்களுடைய ஆனந்தானுபவத்தைப்போல மிகவும் மேலானது என்று பிருஹதாரண்யக உபநிஷத்தில் காண்கிறது.

अनन्वागतं पुण्येन अनन्वागतं पापेन, तीर्णो हि तदा सर्वान् शोकान् हृदयस्य भवति ॥ IV 3 (22)

स यथा कुमारो वा महाराजो वा महाब्राह्मणो वा अतिघ्नीं आनन्दस्य गत्वा शयीत एवमेवैष एतच्छेते ॥ II 1 (19).

இதே விஷயம் சாந்தோக்ய உபநிஷத்தில்

तत्रैतत्सुप्तः समस्तः संप्रसन्नः ... तं न कश्चन पाप्मा स्पृशति, तेजसा हि तदा संपन्नो भवति ॥ VIII 6 (3)

என்ற வாக்கியத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

(67)

ஸுஷுப்தி காலத்தில் அனுபவிக்கும் ஸுகம் ஜாக்ரத் ஸ்வப்ன காலங்களில் இந்திரியம் முதலானவைகளால் அனுபவிக்கப்படும் ஸுகத்தைவிட மிகவும் மேலானது என்பது எல்லா பிராணிகளும் அறிந்த விஷயமென்பதை எடுத்துக் காட்டுகிறார்.

जाग्रत्यामन्तरात्मा विषयसुखकृतेऽनेकयत्नान्विधास्य-
ञ्श्राम्यत्सर्वेन्द्रियौघोऽधिगतमपि सुखं विस्मरन्याति निद्राम् ।
विश्रामाय स्वरूपे त्वतितरसुलभं तेन चातीन्द्रियं हि
सौख्यं सर्वोत्तमं स्यात् परिणतिविरसादिन्द्रियोत्थात्सुखाच्च ॥

जाग्रत्यां-ஜாக்கிரத்தசையில் अन्तरात्मा-உள்ளேயிருக்கும் ஆத்மாவானவர் विषय-सुख-कृते-விஷயங்களால் உண்டாகும் ஸுகத்தை அடையும் பொருட்டு अनेक-यत्नान्-பலவித-பிரயத்தினங்களை विधास्यन्-செய்து வந்து श्राम्यत्-सर्व-इन्द्रिय-ओघः-சோர்ந்து போன-எல்லா-இந்திரிய-ஸமூஹத்தையுடையவனாய் अधिगतं-கிடைத்திருக்கும் सुखं-ஸுகத்தை अपि-கூட विस्मरन् மறந்து स्वरूपे-ஸ்வரூபத்தில் विश्रामाय-இளைப்பாறுவதற்காக निद्रा-தூக்கத்தை याति-அடைகிறான்; तेन-அதினால் अतितर-सुलभं-வெகு ஸுலபமாய் கிடைக்கக்கூடியதும் अतीन्द्रियं-இந்திரியங்களுக்கு அப்பாலுள்ளதுமான (இந்த) सौख्यं-

ஸுகமானது परिणति-विरसात् முடிவில் துக்கத்தைக் கொடுக்கும் इन्द्रिय-उत्थात्-இந்திரியங்களிலிருந்து-ஏற்படும் सुखात् च-ஸுகத்தைக்காட்டிலும் கூட सर्व-उत्तमं-எல்லா வற்றிற்கும்-மேலானதாக स्यात्-இருக்கிறது என்பது ஹி-பிரஸித்தம்

எவ்வளவோ சிரமப்பட்டு ஸம்பாதித்துக்கொண்டு வந்து இருக்கும் போகஸாதனங்களை மறந்து தூக்கமே பெரிது என்று ஜனங்கள் தூங்கிவிடுகிறது இல்லையா? தூக்க ஸுகம் கிடைப்பதற்கு பிரயத்தினம் தேவையா? இந்திரியங்களுக்கு சிரமம் உண்டா? வாஸ்தவத்தில் சிரமப்பட்டிருக்கும் இந்திரியங்களுக்கு இளைப்பாறும் நிலையே தூக்கம். இந்திரியங்களால் ஸம்பாதிக்கப் படும் ஸுகஸாதனங்கள் ஸுகத்தைக் கொடுக்குமென்பதும் நிச்சயமில்லை; அவைகள் ஸுகத்தைக் கொடுத்தாலும் கடைசியில் துக்கத்திலேயே கொண்டுபோய் விடுகின்றன; அந்த ஸுகத்தை அனுபவிப்பதிலும் இந்திரியங்கள் சோர்ந்து போகின்றன. ஸுஷுப்தி ஸுகத்தை ஒரு க்ஷணம் அனுபவித் தாலும் இந்திரியங்களின் சோர்வு போய் மறுபடியும் சுறுசுறுப்பும் பலமும் ஏற்படுகின்றன. ஆகையால் இந்திரியங் களுடைய அபேக்ஷையில்லாமல் ஸ்வரூப ஸுகத்தை அனுபவிக்கும் ஸமயமான ஸுஷுப்தியிலுள்ள ஸுகம் ஸர்வோத்தமம் என்று யாரும் ஒப்புக்கொள்ளவேண்டும்.

(68)

விஷயங்களைத்தேடுவதற்காக மனஸும் பலவித கவலைப் பட்டு சிரமமடைந்து இளைப்பாறுவதற்கு தூக்கத்தையே விரும்புகிறது என்பதும் அனுபவத்தில் தெரிந்ததே. இதையே பிருஹதாரண்யக உபநிஷத்திலுள்ள திருஷ்டாந்தத்தைச் சொல்லி தெளிவுபடுத்துகிறார்.

तद्यथाऽस्मिन्नाकाशे श्येनो वा सुपर्णो वा विपरिपत्य श्रान्तः संहत्य पक्षौ संलयायैव ध्रियत एवमेवायं पुरुषः एतस्मा अन्ताय धावति यत्र सुप्तो न कञ्चन कामं कामयते न कञ्चन स्वप्नं पश्यति ॥
IV 3 (19).

पक्षावभ्यस्य पक्षी जनयति मरुतं तेन यात्युच्चदेशं
लब्ध्वा वायुं महान्तं श्रममपनयति स्वीयपक्षौ प्रसार्य ।
दुःसंकल्पैर्विकल्पैर्विषयमनुकदर्थीकृतं चित्तमेत-
त्खिन्नं विश्रामहेतोः स्वपिति चिरमहो हस्तपादान्प्रसार्य ॥ ६८ ॥

पक्षी பக்ஷியானது पक्षौ-இரு இறக்கைகளையும் अभ्यस्य-அடித்து அடித்து मरुत्-காற்றை जनयति-உண்டு பண்ணுகிறது. तेन-அந்த காற்றினால் उच्च-देशं-மேலேயுள்ள-பிரதேசத்தை याति-அடைகிறது. महान्तं-பெரிய वायुं-வாயுவை लब्ध्वा-அடைந்து स्वीय-पक्षौ-தன்னுடைய-இரண்டு இறக்கைகளையும் प्रसार्य-நன்கு விரித்துக் கொண்டு श्रमं-சிரமத்தை अपनयति-போக்கடித்துக் கொள்கிறது. (அதைப்போலவே) एतत्-இந்த चित्तं-மனஸானது विषयं अनु-விஷயத்தைக் குறித்து दुःसंकल्पैः-கெட்ட எண்ணங்களாலும विकल्पैः-பலவித ஆலோசனைகளாலும் कदर्थीकृतं-மிகவும் சிரமத்தையடைந்து खिन्नं-வாடினதாய் विश्राम-हेतोः-இளைப்பாறுவதின்-காரணமாக हस्त-पादान्-கைகளையும-கால்களையும் प्रसार्य-நன்கு நீட்டிக் கொணடு चिरं-வெகு நேரம் अहो-ஆச்சர்யப்படும்படி स्वपिति-தூங்குகிறுன்.

विषयं अनु- "விஷயத்தைக்குறித்து" — என்பதால் விஷயத்தை ஸம்பாதிப்பதிலோ, ஸம்ரக்ஷணை செய்வதிலோ, விஷயத்தை அனுபவிப்பதிலோ, விஷயம் கிடைக்காமலிருப்பதிலோ, மற்றும் எல்லாவிதத்திலும் மனஸிற்கு கவலையும், பிரவிருத்தியும், சிரமமும, துககமும், சோர்வும் உண்டென்று தாத்பர்யம். இவைகளிலிருந்து கொஞ்சமேனும் விலகி இளைப்பாற வேண்டுமானுல் தூககத்தைத்தான் கோரவேண்டியிருககிறது.

पक्षी பக்ஷியென்று சுலோகத்தில் பொதுவாக போட்டிருந்த போதிலும ஆகாசததில் மேலே பறந்து இறக்கைகளை விரித்துக் கொண்டு இளைப்பாறுகிறதென்று சொல்லியிருப்பதால் உபநிஷத்தில் கண்ட பருந்தையோ கருடனையோ எடுத்துக் கொள்வதுதான் உசிதமாகும்.

(69)

ஸுஷுப்தி ஸுகத்தை அனுபவிக்கும்போது ஸ்தூல சரீரம் ஸூக்ஷ்ம சரீரம் இரண்டுமே சேஷ்டிககாமலிருப்பதால் வெளிப் பிரபஞ்சமோ உள் பிரபஞ்சமோ யாதொன்றும் தெரிகிறதில்லை; அதினல் பாபம் புண்யம் என்பதோ, ஸுகம் துக்கம் என்பதோ, சோகம் மோஹம் பயம் முதலியதோ, நல்லது கெட்டது என்பதோ, யாதொன்றும் கிடையாது. தனித்து ஆத்மா பிரமாத்மாவுடன் சேர்ந்திருப்பதினல் ஏற்படும் ஸ்வரூப ஆனந்தந்தான் உண்டு என்கிருர். பிருஹதாரண்யக உபநிஷத்தில் பிரியமான பார்யையினல் ஆலிங்கனம் செய்யப்பட்டவன் எப்படி வேறு எதையும் அறியாமல் அவ்வாலிங்கன ஸுகத்திலேயே ஈடுபட்டிருப்பானே அதுபோல என்று திருஷ்டாந்தம் கண்டிருக்கிறது.

तद्यथा प्रियया स्त्रिया संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नान्तरम् । एवमेवायं पुरुषः प्राज्ञेनात्मना संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नान्तरम् । IV 3 (21)

அந்த திருஷ்டாந்தத்தையே "அயலூர்களுக்குப் போய் விட்டு வீடு திரும்பினவன் தன் பிரியமான பார்யையை ஆலிங்கனம் செய்துகொண்டிருக்கும்போது போல" என்று இங்கு காட்டுகிருர்.

आश्लिष्यात्मानमात्मा न किमपि सहसैवान्तरं वेद बाह्यं
यद्वत्कामी विदेशात्सदनमुपगतो गाढमाश्लिष्य कान्ताम् ।
यात्यस्तं तत्र लोकव्यवहृतिरखिला पुण्यपापानुबन्धः
शोको मोहो भयं वा समविषममिदं न स्मरत्येव किंचित् ॥ ६९ ॥

विदेशात्-வேறு தேசத்திலிருந்து सदनं-வீட்டிற்கு उपगतः-திரும்பி வந்த कामी-காமியாயுள்ளவன் यद्वत्-எப்படி कान्तां-பிரியமான பார்யையை गाढं-கெட்டியாக आश्लिष्य-ஆலிங்கனம் செய்துகொண்டு (மற்றதெல்லாவற்றையும் மறந்துவிடுவானே அதுபோல) आत्मा-ஆத்மாவானவர் आत्मानं-பரமாத்மாவை आश्लिष्य-ஆலிங்கனம்

செய்துகொண்டு (பரமாத்மாவுடன் ஒன்ருகக் கலந்து கொண்டு) सहसा एव-உடனேயே (வேகமாக) आन्तरं-உள்ளேயுள்ளதையோ बाह्यं-வெளியிலுள்ளதையோ किं अपि-எதையும் न वेद-அறிகிறதில்லை. तत्र-அந்த நிலையில் लोक-व्यवहृतिः-உலக-வியவஹாரம் अखिला-எல்லாம், पुण्य-पाप-अनुबन्धः-புண்ய-பாபத்தின்-தொடர்ச்சி, शोक-சோகம், मोहः-மோஹம், भयं वा-பயமோ, अस्तं-நாசத்தை याति-அடைந்துவிடுகிறது. सम-विषमं-நேராகவும் நேரற்றதாகவும் (நல்லது-கெட்டது என்று இருக்கிற) इदं-இந்த किञ्चित्-எதையும் न स्मरति एव-ஞாபகத்தில் வைத்துக்கொள்வதே கிடையாது.

(70)

நல்ல தூக்கத்தில் உலக வியவஹாரம், புண்ய பாப ஸம்பந்தம், சோகம், மோக்ஷம், பயம் நல்லது கெட்டதெனபது, ஒன்றும் கிடையாது என்ருல், ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்த ஞானிக்கும் முக்தியில் இவ்விதந்தானேயிருக்கும்? எதற்காக ஞானம் ஸம்பாதிப்பதற்கு குருவைத் தேடிக்கொண்டு அவரிடம் போய் சிரவணம் மனனம முதலிய ஸாதனங்களை அனுஷ்டிக்க வேண்டும்? தூங்கினுலே போதாதா? என்று தோன்றலாம். அதற்காக ஸுஷுப்திக்கும் முக்திக்கும் உள்ள வித்தியாஸத்தை நன்கு எடுத்துச் சொல்கிருர் —

अल्पानल्पप्रपञ्चप्रलय उपरतिश्चेन्द्रियाणां सुखाप्ति-
जीवन्मुक्तौ सुषुप्तौ त्रितयमपि समं किं तु तत्रास्ति भेदः ।
प्राक्संस्कारात्प्रसुप्तः पुनरपि च पराबृत्तिमेति प्रबुद्धो
नश्यत्संस्कारजातो न च किल पुनरावर्तते यश्च मुक्तः ॥ ७० ॥

जीवन्मुक्तौ-ஜீவன்முக்தியிலும் सुषुप्तौ-நல்ல தூக்கத்திலும் अल्प-अनल्प-प्रपञ्च-प्रलयः-சிறிது-பெரிதாகிய உலகத்தின்-லயம் (1), इन्द्रियाणां-இந்திரியங்களின் उपरतिः-ஓய்வு என்பது (2), सुख-आप्तिः च-ஸுகத்தின் அனுபவமும் (3) ஆகிய त्रितयं अपि-மூன்றும் समं-ஸமான

மாய்த்தானிருக்கின்றது. किंतु-ஆனாலும் तत्र-அவ்விரண்டிற்குள் भेदः-வித்யாஸமானது अस्ति-இருக்கிறது. प्रसुप्तः-நன்கு தூங்கினவன் प्रबुद्धः-விழித்தவனாக ஆனதும் प्राक्-संस्कारात्-முன்னுள்ள-ஸம்ஸ்காரத்தினால் पुनः अपि च-மறுபடியும் परावृत्ति-(உலக வியவஹாரத்தில்) திரும்புதலை एति-அடைகிறான். यः-எவன் मुक्तः च-விடுபட்டவனாயிருக்கிறானோ सः-அவன் नश्यत्-संस्कार-जातः-வாஸனையின் கூட்டம் நாசமடைந்தவனாக पुनः-மறுபடியும் न आवर्तते-திரும்புவதில்லை किल-அல்லவா?

ஸுஷுப்திஸமயத்தில் முன்னுள்ள ஸம்ஸ்காரங்கள் எதுவும் நாசத்தையடையாமல் பீஜரூபமாக அவித்யையில் லயித்து மறைந்திருக்கின்றன. அதினால்தான் தூங்கி விழித்துக்கொண்டவன் முன் ஞாபகத்துடன் மறுபடியும் பிரவிருத்தியில் ஈடுபடுகிறான். ஸம்ஸ்காரங்களின் ஆசிரயமான அவித்யையே ஞானிக்கு நாசமடைந்துவிடுகிறபடியால், ஸம்ஸ்காரங்களும் நசித்துவிடுகின்றன. அதினால் அவன் மறுபடியும் ஸம்ஸாரத்தில் அகப்பட்டுக்கொள்வது கிடையாது. அவித்யையை போக்கடிப்பதற்கு வித்யை ஒன்றுதான் ஸாதனம். அதை ஸம்பாதிப்பதற்கு சிரவணம் முதலிய ஸாதனங்களை அனுஷ்டிக்க வேண்டியது அவசியமாயிருக்கிறது.

(71)

அவித்யை விலகி சுத்தமான ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரத்தினால் ஏற்படும் ஆனந்தானுபவத்திற்கு ஈடே கிடையாது. அது நிரதிசயமாய் ஸர்வோத்தமமாய் இருப்பதுடன், உலகத்தில் ஏற்படக்கூடிய எவ்வித ஆனந்தமும் அதின் ஒரு அம்சத்தின் லேசத்தைக் கைப்பற்றிக் கொண்டிருப்பதினால் தான் ஆனந்தமென்று தோன்றுகிறது. வாஸ்தவத்தில் ஆத்மாநந்தம் ஒன்று தான் உண்டு. இவ்விஷயம் பிருஹதாரண்யக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாவித போக ஸம்பத்துமுள்ள மனுஷியனின் ஆனந்தம்போல் நூறுபங்கு பிதிருக்களின் ஒரு ஆனந்தம்; அதைப்போல நூறுபங்கு கந்தர்வலோக ஆனந்தம்; அதைவிட நூறுபங்கு கர்ம தேவர்களின் ஆனந்தம்; அதைவிட நூறுபங்கு ஆஜான தேவர்களின் ஆனந்தம்; அதைவிட

நூறுபங்கு பிரஜாபதிலோக ஆனந்தம்; அதைவிட நூறுபங்கு பிரஹ்மலோக ஆனந்தம். இவ்வித ஆனந்தங்கள் எல்லாம் எதினுடைய லேசம் தானே எந்த ஆனந்தத்திற்கு கணக்கு கிடையாதோ அதுவே ஸர்வோத்க்ருஷ்டமான பரமமான ஆனந்தம்; அது ஸகல ஆசையும் துறந்த ஆத்ம ஞானியிடம் தான் இருக்கும்.

स यो मनुष्याणां राद्धः समृद्धो भवति अन्येषामधिपतिः सर्वैर्मानुष्यकैः भोगैः संपन्नतमः स मनुष्याणां परम आनन्दः । अथ ये शतं मनुष्याणां आनन्दाः स एकः पितॄणां जितलोकानां आनन्दः । ... अथ एष एव परम आनन्द ... ॥ IV 3 (33)
... एषोऽस्य परम आनन्दः । एतस्यैवानन्दस्य अन्यानि भूतानि मात्रामुपजीवन्ति ॥ ,, ,, (32)

இதையே அடுத்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிறார்.

आनन्दांश्च सर्वाननुभवति नृपः सर्वसंपत्समृद्ध-
तस्यानन्दः स एकः स खलु शतगुणः संप्रदिष्टः पितॄणाम् ।
आदेवब्रह्मलोकं शतशतगुणिताः ते यदन्तर्गताः स्यु-
र्ब्रह्मानन्दः स एकोऽस्त्यथ विषयसुखान्यस्य मात्रा भवन्ति ॥ ७१ ॥

यः-எந்த नृपः-அரசன் सर्व-संपत्-समृद्धः-ஸகல-ஸம்பத்துக்களும்-நன்கு நிறைந்தவனாக सर्वान्-எல்லாவித आनन्दान् च-ஆனந்தங்களையும் अनुभवति-அனுபவிக்கிறானோ, तस्य-அவனுடைய सः-அந்த आनन्दः-ஆனந்தம் एकः-ஒன்று. स खलु-அதுவே शतगुणः सन्-நூறு பங்கு பெருக்கினால் पितॄणां பித்ருக்களுக்கு प्रदिष्टः-சொல்லப் பட்டிருக்கிறது. आ-देव-ब्रह्मलोकं-(அப்படியே) தேவ லோகம்-பிரஹ்ம லோகம் வரை शत-शत-गुणिताः-நூறு-நூறுக-பெருக்கப்பட்ட ते-அந்த ஆனந்தங்களெல்லாம் यत्-अन्तर्गताः-எதற்கு-உள்ளடங்கினவைகளாக स्युः-

இருக்குமோ, सः-அந்த ब्रह्म-आनन्दः-பிரஹ்மானந்தம் एकः-ஒன்று अस्ति-இருக்கிறது. अथ-மேலும், विषय-सुखानि-விஷயங்களால் அடையக்கூடிய-ஸுகங்கள் எல்லாம் अस्य-இந்த பிரஹ்மானந்தத்தினுடைய मात्राः-லேசங்களாகவே भवन्ति-இருக்கின்றன.

இதே விஷயத்தை தைத்திரிய உபநிஷத் II 8ல் சொல்லும் போது 1. மனுஷ்யாநந்தம், 2. மனுஷ்யகந்தர்வாநந்தம், 3. தேவகந்தர்வாநந்தம், 4. பிதிருக்கள் ஆனந்தம், 5. ஆஜான தேவர்கள்ஆனந்தம் 6. கர்மதேவர்கள்ஆனந்தம், 7. தேவர்கள் ஆனந்தம், 8. இந்திரனின்ஆனந்தம் 9. பிரஹஸ்பதியின் ஆனந்தம், 10. பிரஜாபதியின்ஆனந்தம், 11. பிரஹ்மாவின் ஆனந்தம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. பிருஹதாரண்யக உபநிஷத்தில் மேலேகண்ட 2வதும், 3வதும் விடப்பட்டிருக்கிறது; ஆனால் இரண்டையும் ஒன்ருக்கி 4வது பிதிருக்களின் ஆனந்தத்திற்கு மேலானதாகக் கண்டிருக்கிறது. 5வது ஆஜான தேவர்களை கர்மதேவர்களுக்கு மேலே சொல்லியிருக்கிறது. அப்படியே 7வது தேவர்களையும் 8வது இந்திரனையும், 9வது பிருஹஸ்பதியையும் ஆஜானதேவர்களிடத்திலேயே உள்ளடக்கியிருக்கிறது. இவ்வித வித்தியாஸம் காண்பதினுலேயே நூறு, நூறு என்று சொன்னதற்கு எண்ணிக்கையில் தாத்பர்யமில்லையென்பதும் பிரஹ்மாநந்தத்தைத்தவிர மனுஷ்யலோகம் முதல் நான்முகர்லோகம் முடிய கிடைக்கக்கூடிய எல்லாவித ஆனந்தமும் அந்த பிரஹ்மாநந்தத்திலேயே உள்ளடங்கி லேசமாகத்தான் இருக்கின்றனவென்பதில்தான் தாத்பர்யம் என்பதும் தெளிவாகத்தெரிகிறது.

(72)

ஸகலவித ஆனந்தங்களும் ஆத்மாநந்தத்தில் அடங்கியவையென்ற விஷயம் மேலேகண்ட உபநிஷத்துக்களில் மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதில்லை, ரிக்வேதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அங்கு யோகரீதியாய் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது கீழுள்ள சக்கரங்களையெல்லாம் போதித்துக்கொண்டு இரண்டு புருவங்களுக்கும் மத்தியில் ஜீவாத்மாவை நிறுத்திக்கொண்டு அதற்கு மேலுள்ள ஸோம சக்கிரம் (ஸஹஸ்ராரம்) எதுவோ அதிலிருந்து அமிருதத்தைப் பொழியவேண்டுமென்று ஸோமனை (பிரஹ்மத்தை) பிரார்த்திக்கும் மந்திரமாக அமைந்திருக்கிறது

यत्रानन्दाश्च मोदाश्च मुदः प्रमुद आसते ।
कामस्य यत्राप्ताः कामाः तत्र मामपृतं कृधीन्द्रायेन्दो परिस्रव ॥
IX, *113 (11)*

இதை அடுத்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் கண்டிருக்கிறார்.

यत्रानन्दाश्च मोदाः प्रमुद इति मुदश्चासते सर्वे एते
यत्राप्ताः सर्वकामाः स्युरखिलविरमात्केवलीभाव आस्ते ।
मां तत्रानन्दसान्द्रे कृधि चिरममृतं सोम पीयूषपूर्णां
धारामिन्द्राय देहीत्यपि निगमगिरो भ्रूयुगान्तर्गताय ॥ ७२ ॥

आनन्दाः-ஆனந்தங்கள் मोदाः च-மோதங்கள் प्रमुदः-பிரமோதங்கள் मुदः च-ஸந்தோஷங்கள் इति-என்கிற एते-இவை सर्वे-எல்லாம் यत्र-எதனிடத்தில் (அடங்கி) आसते-இருக்கின்றனவோ, यत्र-எதில் (எது இருந்ததேயானல்) सर्व-कामाः எல்லா-காமங்களும் आप्ताः-அடையப்பட்டதாக स्युः-ஆகுமோ, (எதில்) अखिल-विरमात्-எல்லாம்-ஓய்ந்துவிடுவதால் केवलीभावः-தனித்திருக்கும் தன்மை आस्ते-இருக்கிறதோ, तत्र-அந்த आनन्द-सान्द्रे-ஆனந்தம்-அடர்த்தியாயுள்ள நிலையில் मां-என்னை चिरं-நீடித்து (சாசுவதமாய்) अमृतं-மரணமற்றவனாய், सोम-ஹே ஸோம, कृधि செய். पीयूष-पूर्णां-அமிருதம் நிரம்பிய धारां-தாரையை भ्रू-युग-अन्तर्गताय-புருவங்கள்-இரண்டிற்கும்-இடையிலிருக்கிற इन्द्राय-(பிரகாசரூபமான) ஜீவனுக்கு देहि-கொடு. इति-என்று अपि-கூட निगम-गिरः-வேத வாக்யங்கள் இருக்கின்றன.

தைத்திரீய உபநிஷத்தில் ஆனந்தமய கோசத்தை வர்ணிக்கும் போது

तस्य प्रियमेव शिरः । मोदो दक्षिणः पक्षः । प्रमोद उत्तरः पक्षः । आनन्द आत्मा । ब्रह्म पुच्छं प्रतिष्ठा … ॥ II 5

என்று சொல்லப்பட்டிருக்கிறது ஒரு பதார்த்தத்தைப் பார்க்கையில், அது நல்லது என்ற எண்ணம் ஏற்படும்போது அதில் பிரீதி ஏற்படுகிறது (அந்த பிரீதியை இந்த சுலோகத்தில் मुत् 'முத்' (ஸந்தோஷம்) என்று கண்டிருக்கிறது அந்த பதார்த்தம் தனக்கு கிடைத்துவிட்டால், அப்பொழுது ஏற்படும் ஸந்தோஷம் மோதம் எனப்படுகிறது. அதையே அனுபவிக்கும்போது விசேஷமாக ஏற்படும் ஸந்தோஷம் பிரமுத் (பிரமோதம்) எனப் படுகிறது. அனுபவிக்கும் சிரமமும் முடிந்து ஏற்படும் திருப்தி யாகிற ஸந்தோஷம் ஆனந்தம் எனப்படுகிறது இவ்வெல்லாவித ஸந்தோஷத்திற்கும் அடிப்படையாய் அஸ்திவாரமாயிருப்பது எவ்வித வேறு பதார்த்தத்தையும் எதிர்பாராமல் ஆனந்த ஸ்வரூபமாகவேயிருந்துவரும் ஆத்மா. அதுதான் பிரஹ்மம். அதின் ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்டால் வேறுபதார்த்தங்கள் நல்லதென்றோ, கிடைக்கவேண்டுமென்றோ, அனுபவிக்க வேண்டுமென்றோ, அவ்விதம் கிடைத்து திருப்தியடையவேண்டு மென்றோ, தோன்றவே தோன்றாததினால், அந்த ஸ்வரூப ஆனந்தத்தில் எல்லா ஸந்தோஷங்களும் அடங்கியேயிருக் கின்றன. எல்லாவித ஆசைகளும் நிறைவேறினதாகவே ஆகின்றன என்கிறார். அப்பொழுது எவ்வித வியாபாரமும் இல்லை யானதினாலும் வியாபாரத்திற்கு நிமித்தமான இரண்டாவது பதார்த்தமே இல்லையானதினாலும், அவ்வனுபவம் ஏற்பட்டவன் தனித்து கேவலனாய் இரண்டாவதற்றவனாய் இருக்கிறான். அதுவே ஸர்வோத்தமமான ஆனந்தம் மற்ற ஆனந்தங்கள் எல்லாம் புதிதாக உண்டாகிறபடியால் எப்படியும் நாசத்தை அடையும் ஸ்வரூபமாயுள்ள ஆனந்தம் உண்டாவதற்கு அவசியம் இல்லாததினால் நாசத்தையடையாது. எப்பொழுதும் நித்யமா யிருக்கும் அதுவே 'அமிருதம்' (மரணமற்றது).

(73)

ஸ்வரூபானந்தம் நித்யம், விஷயானந்தம் அநித்யம் என்றிருக்கும்போது, விஷயானந்தம் நித்யானந்தத்தின் லேசம் தான் என்று முன்சொன்னது எப்படியிருக்கமுடியும்? என்று கேட்கக்கூடுமானதினால் அதற்கு ஸமாதானம் பின்வரும் இரண்டு சுலோகங்களில் சொல்கிறார்.

आत्माऽकल्पः सुखात्मा स्फुरति तदपरा त्वन्यथैव स्फुरन्ती

स्थैर्यं वा चञ्चलत्वं मनसि परिणति याति तत्रस्थमस्मिन् ।

चाञ्चल्यं दुःखहेतुर्मनस इदमहो यावदिष्टार्थलब्धि-
स्तस्यां यावत्स्थिरत्वं मनसि विषयजं स्यात्सुखं तावदेव ॥ ७३ ॥

आत्मा-ஆத்மா अकम्पः-அசைவற்றவராக, सुख-आत्मा-ஆனந்தஸ்வரூபராக, स्फुरति-பிரகாசிக்கிறார். तत् अपरा तु-அவருக்கு வேறானதோ (அனாத்மாவான மாயையோ) अन्यथा एव-வேறுவிதமாகவே (அசைவுள்ளதாகவே) स्फुरन्ती-பிரகாசிக்கிற பதார்த்தம். तत्रत्यं-அவை இரண்டிலுமுள்ள स्थैर्यं वा-ஸ்திரத்தன்மை (அசைவற்ற தன்மை) யோ चञ्चलत्वं-சஞ்சலத்தன்மை (அசைந்துகொண்டேயிருக்கும் தன்மையோ) अस्मिन्-இந்த मनसि-மனஸில் परिणतिं-பரிணமத்தை (வேறுபாட்டை) याति-அடைகிறது. चाञ्चल्यं-சஞ்சலத்தன்மையாகிய इदं-இது मनसः-மனஸிற்கு दुःखहेतुः-துக்கத்திற்கு காரணம். अहो-ஆச்சர்யம்! इष्ट-अर्थ-लब्धिः-வேண்டப்பட்ட பதார்த்தம் கிடைத்திருப்பது यावत्-எதுவரையிலோ, मनसि-மனஸில் तस्यां-அந்த பதார்த்தம் கிடைத்ததினால் स्थिरत्वं-ஸ்திரத்தன்மை यावत्-எதுவரையிலோ, तावत् एव-அதுவரையில தான் विषयजं-விஷயத்தினால் ஏற்படும் सुखं-ஸுகம் स्यात्-இருக்கும்.

மனஸ் என்பது கண்ணாடிபோல் ஸ்வச்சமான திரவியம். அதில் எவ்வித அசைவற்றதாகிய ஆனந்தஸ்வரூபமான ஆத்மா மாத்திரம் பிரதிபலித்ததேயானால் மனஸில் ஸுகம் ஏற்படுகிறது. அப்படிக் கன்னியில் அசைந்து கொண்டேயிருக்கும் அனாத்ம பதார்த்தங்கள் பிரதிபலித்ததேயானால் மனஸில் ஸுகம் ஏற்படுவதற்கில்லாமல் சஞ்சலத்தன்மை ஏற்பட்டு துக்கப்படும் படிக்குத்தான் ஆகும். ஏதேனும் ஒரு விஷயத்தில் பற்றுதல் வைத்து அதையடையவேண்டுமென்று சஞ்சலப்பட்டுக்கொண்டு துக்கத்தை அனுபவித்து வருகையில் அந்த விஷயம் கிடைத்து விட்டதேயானால், ஸ்திரமாய் இனி சஞ்சலப்பட அவசியமில்லாமல் மனஸ்நின்றுவிடும்போது அதில் ஆத்மாவின் ஸ்வரூபஸுகம் பிரதிபலிக்கிறது. அந்த ஸுகம் வாஸ்தவத்தில் ஆத்மாவின்பிரதிபலனத்தினால் ஏற்பட்டதென்பதை நாம் கவனிக்காமல், இஷ்டப்

பட்ட பதார்த்தம் கிடைத்ததினால் ஏற்பட்டதாக எண்ணிக் கொண்டு அந்த பதார்த்தம்தான் ஸுகத்திற்கு ஸாதனம் என்று நினைத்துவிடுகிறோம். வாஸ்தவத்தில் அது மனஸை சஞ்சலப் படுத்துவதற்குத்தான் உதவினது. அது விஷயமான ஆசையே ஏற்படாமலிருந்தால் மனஸ் ஸுகமாகவேயிருந்திருக்கும்.

यावत् इष्टार्थलब्धिः "வேண்டப்பட்ட பதார்த்தம் கிடைத்திருப்பது எதுவரையிலோ" என்று முன் அர்த்தம் சொல்லப் பட்டது. இதை "துக்கத்திற்குக்காரணம்" என்பதுடன் சேர்த்தும் அன்வயம் செய்யலாம். அப்பொழுது "வேண்டப் பட்ட பதார்த்தம் கிடைக்கும் வரையில்" என்று அர்த்தம் செய்துகொள்ளவேண்டும். அதாவது, "வேண்டப்பட்ட பதார்த்தம் எதுவரை கிடையாமலிருக்கிறதோ அதுவரை துக்கத்தையே உண்டுபண்ணும்" என்று தாத்பர்யம்.

(74)

மனஸில் ஸ்திரத்தன்மை எவ்வளவு காலமிருக்கிறதோ அதுவரை ஸுகத்தின் அனுபவமிருக்கும். ஒரு க்ஷணந்தான் என்றிருந்தால், ஸுகமும் க்ஷணிகமாயிருக்கும்; கொஞ்சம் நீடித்திருந்தால், ஸுகமும் நீடித்திருக்கும்; சாசுவதமாய் நிலைத்துவிட்டால் ஸுகமும் சாசுவதமாயிருக்கும்; என்று உதாஹரணங்களால் தெளிவுபடுத்துகிறார்.

यद्वत्सौख्यं रतान्ते निमिषमिह मनस्येकताने रसे स्या-
त्स्थैर्यं यावत्सुषुप्तौ सुखमनतिशयं तावदेवाथ मुक्तौ ।
नित्यानन्दः प्रशान्ते हृदि तदिह सुखस्थैर्ययोः साहचर्यं
नित्यानन्दस्य मात्रा विषयसुखमिदं युज्यते तेन वक्तुम् ॥ ७४ ॥

यद्वत्-எப்படி रत-अन्त-ஸ்திரீஸம்போகத்தின்-முடிவில் रसे-சிருங்கார ரஸத்தில் एकताने-ஏகாக்ரமாக ஈடுபட்டிருக்கும் मनसि-மனஸில் इह-இங்கே सौख्यं-ஸுகமானது निमिषं-ஒரு நிமிஷம் மாத்திரம் स्यात्-இருக்குமோ, यावत्-எதுவரையில் सुषुप्तौ-நல்ல தூக்கத்தில் स्थैर्यं-ஸ்திரத்தன்மையோ तावत् एव-அதுவரையில்தான் अनतिशयं-எல்லையற்ற सुखं-ஸுகம் இருக்குமோ, (அதேமாதிரி)

अथ-மேலால் मुक्तौ-மோக்ஷ நிலையில் हृदि-மனஸ் प्रशान्ते-நன்கு அடங்கிவிடும்போது (அசைவற்றிருந்து விடும்போது) नित्य-आनन्दः-நித்யமான-ஆனந்தம் இருக்கும். तत्-ஆகையால் इह-இங்கே (இதிலிருந்து) सुख-स्थैर्ययोः-ஸுகத்திற்கும்-ஸ்திரத்தன்மைக்கும் साहचर्य-கூடவேயிருக்கும் தன்மை (தெளிவாகிறது). (ஆகையால) तेन-(இவ்விதம இரண்டும் கூடவேயிருந்து வருவதினால் என்ற) அந்தக்காரணத்தினால் इदं-இந்த विषय-सुखं-விஷய ஸுகம் என்பது नित्य-आनन्दस्य-நிதயமான-ஆனநதத்தின मात्रा-அம்சமதான் என்று वक्तुं-சொல்வது युज्यते-பொருத்தமாயிருக்கிறது.

(75)

ஜாக்கிரத் காலத்தில் பலவித விஷயங்களில் ஈடுபட்டு மனஸ் மிகவும் சஞ்சலப்பட்டு துக்கத்தையனுபவிக்கிறது; ஸ்வப்ன தசைக்குப் போனாலும் அங்கு ஜாக்கிரத்தின ஸம்ஸ்காரங்களினால கல்பிக்கப்பட்ட பலவித விஷயங்களால் சஞ்சலபபட்டு அங்கேயும் துக்கத்தைய அனுபவிககிறது; உள்ளே அசைவற்றிருக்கும் ஆத்மாவுடன் கலந்து கொண்டால்தான் சஞ்சலமற்று இருந்து ஸுகம் அனுபவிக்கலாமென்று மனஸ ஸுஷுப்தியை நாடுகிறது. இதிலிருந்தும் ஆத்ம ஸ்வரூப ஸுகநதான் மேலானதெனபது நன்கு தெரிகிறது என்று அடுத்த சுலோகத்தில் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி மூன்று தசைகளையும் வர்ணிக்கிறார்.

श्रान्तं स्वान्तं च बाह्यव्यवहृतिभिरिदं ताः समाकृष्य सर्वा-
स्तत्तत्संस्कारयुक्तं ह्युपरमति परावृत्तमिच्छन्निदानम् ।
स्वाप्नान्संस्कारजातप्रजनितविषयान्स्वाप्नदेहेऽनुभूता-
न्भोक्तुं यान्तः प्रत्यगात्मप्रवणमिदमगाद्भूरि विश्राममस्मिन् ॥

बाह्य-व्यवहृतिभिः-(ஜாக்ரதவஸ்தையில்) வெளி-வியவஹாரங்களினால் श्रान्तं-களைப்படைந்த इदं-இந்த स्वान्तं-மனஸானது निदानं-காரணமான ஆத்மாவையடைய

इच्छन्-விரும்பிக்கொண்டு परावृत्त-(ஜாக்ரத் வியவஹாரங்களிலிருந்து) திரும்பினதாய் सा:-அந்த सर्वा: च-எல்லா வியவஹாரங்களையும் समाकृष्य-நன்கு கூடவே இழுத்துக் கொண்டு तत्-तत्-संस्कार-युक्-அந்த-அந்த-வியவஹாரங்களினால் ஏற்படும் ஸம்ஸ்காரங்களுடன்-சேர்ந்ததாக இருந்துகொண்டு, उपरमति हि-(எல்லா வியவஹாரங்களிலிருந்தும்) ஓய்வடைகிறது அல்லவா (பிறகு) स्वप्न-देहे-ஸ்வப்னத்தில் தோன்றும்-தேஹத்தில் अनुभूतान्-அனுபவிக்கப்பட்ட स्वाप्नान्-ஸ்வப்னத்தில் தோன்றுகிற संस्कार-जात-प्रजनित-विषयान्-ஜாக்ரத் ஸம்ஸ்கார-கூட்டத்தினால்-உண்டாக்கப்பட்ட-விஷயங்களை प्रोज्झ्य-நன்கு விட்டு விட்டு अन्त:-உள்ளே प्रत्यगात्म-प्रवण-உள்ளேயுள்ள ஆத்மாவை-நோக்கினதாக इदं-இது अस्मिन्-இந்த ஆத்மாவில் भूरि-நிரம்ப विश्रामं-இளைப்பாறுதலை अगात्-அடைந்துவிடுகிறது.

ஜாக்கிரத் காலத்தில் ஏற்படும் பலவித வியவஹாரங்களினால் மிகவும் சிரமம் அடைந்ததினால்தான் மனஸ் ஓய்வு அடைய வேண்டியதை உத்தேசித்து உள்ளே திரும்பி ஆத்மாவை நாடிச் செல்கிறது. ஆனால் அதன் கூடவே ஜாக்ரத காலத்திய ஸம்ஸ்காரங்கள் போகிறபடியால், பிராரப்த கர்ம வேகத்தினால் அங்கேயும் ஒரு உலகத்தையும் அதில் வியவஹரிக்க ஒரு சரீரத்தையும் போக விஷயங்களையும் அந்த ஸம்ஸ்காரங்கள் ஏற்படுத்திக் கொடுத்துவிடுவதினால், அங்கேயும் வியவஹாரங்கள் ஏற்படுகின்றன. அந்த வியவஹாரங்களினாலும் மனஸ் களைப்படைகிறது. எவ்வித வியவஹாரமுமில்லாத நிலைக்குப் போனால்தான் நன்கு களைப்பாற முடியுமானதினால், எவ்வித வியவஹாரமுமற்ற ஆத்மஸ்வரூபத்தையே தேடி அதில் லயத்தை அடைந்துவிடுகிறது. அப்பொழுதுதான் அதற்கு ஓய்வு ஏற்பட்டு துக்கம் கலக்காத ஸுகத்தை அனுபவிக்கமுடிகிறது. அந்த நிலை தான் ஸுஷுப்தி (நல்ல தூக்கம்). எவ்வித ஸம்ஸ்காரமுமற்றிருந்து, இளைப்பாறுவதற்காக மாத்திரம் ஆத்மாவைத் தேடுவதை விட்டு எப்பொழுதும் அங்கேயே நிலைத்திருக்கும் தன்மையை அடைந்துவிட்டால், அதுவே மோக்ஷநிலை, அதுவே ஸர்வோத்தமமான சாச்வதமான ஆனந்தநிலையென்பதும் தெளிவாகும்.

(76)

ஸ்வப்ன காலத்தில் ஜாக்கிரத்கால ஸம்ஸ்காரங்கள் கூடவே இருக்கின்றன என்பதை மூன்று சுலோகங்களில் எடுத்துக் காட்டுகிறார்.

स्वप्ने भोगः सुखादेर्भवति ननु कुतः साधने मूर्छमाने
स्वाप्नं देहान्तरं तद्व्यवहृतिकुशलं नव्यमुत्पद्यते चेत् ।
तत्सामग्र्या अभावात्कुत इदमुदितं तद्धि सांकल्पिकं चे-
त्किं स्वाप्ने रतान्ते वपुषि निपतिते दृश्यते शुक्रमोक्षः ॥ ७६ ॥

स्वप्ने-ஸ்வப்னத்தில் सुखादेः-ஸுகம் முதலானதின் भोगः-அனுபவமானது, साधने-(அந்த அனுபவத்திற்கு) ஸாதனமாயிருப்பது (சரீரம் இந்திரியம் முதலியவை) मूर्छमाने-மூர்ச்சையடைந்திருக்கும்போது (பிரக்ஞையற்று சேஷ்டையன்னியில் இருக்கும்போது), ननु कुतः-எதினால் (எந்த காரணத்தினால், எந்த ஸாதனத்தைக்கொண்டு) भवति-ஏற்படமுடியும்? स्वाप्नं-ஸ்வப்னத்திற்கு வேண்டிய तत्-व्यवहृति कुशलं-அங்குள்ள-வியவஹாரத்தில்-ஸாமர்த்தியமுள்ள देहान्तरं-வேறு தேஹம் नव्यं-புதிதாக उत्पद्यते-உண்டாகிறது चेत्-என்றால், तत् सामग्र्याः-அதற்கு (அந்த தேஹம் உண்டாவதற்கு) வேண்டிய (தாயார், தகப்பனார், எலும்பு, ரக்தம் முதலிய) ஸாமக்ரீ अभावात्-இல்லாததினால், इदं-இது (இந்த புது தேஹம்) कुतः-எங்கிருந்து (எப்படி) उदितं-உண்டாயிருக்கிறது? तत्-அது साङ्कल्पिकं हि-வெறும் கல்பனைதானே चेत्-என்றால், स्वाप्ने-ஸ்வப்ன ஸமயத்தில் ஏற்படும் रतान्ते-ஸம்போகத்தின் கடைசியில் வெளிப்படும் शुक्रमोक्षः-சுக்கிர திராவமானது निपतिते-கீழே விழுந்துகிடக்கிற वपुषि-(ஸ்தூல) சரீரத்தில் दृश्यते किं-காணப்படுவது ஏன்?

(77)

ஸ்வப்ன சரீரம் உண்டாவதற்கு வேண்டிய ஸாதனங்கள் இல்லாததினால் உண்டாயிருக்க முடியாது. ஆனாலும் தோன்று

கிறது. அதினால் அதை வெறும் கல்பனையென்று சொல்லி விடலாமேயென்றால், கல்பனா சரீரத்தினால் அனுபவித்த ஸம்போகத்தில் ஏற்படும் சுக்கிர திராவம் கல்பனா சரீரத்தில் அல்லவா இருக்கவேண்டும்? அப்பொழுது அதுவும் கல்பனையாகத்தானே இருக்கவேண்டும்? அப்படிக்கன்னியில் எவ்வித ஸம்போகமும் செய்யாத ஸ்தூல சரீரத்தில் காணுவதற்கு என்ன காரணம்? இதிலிருந்து ஸ்வப்ன காலத்தில் ஸ்தூல சரீரத்தின் ஸம்பந்தம் பூராவும் விலகிவிடவில்லையென்று தெரிகிறது.

भीत्या रोदित्यनेन प्रवदति हसति श्लाघते नूनमस्मा-
त्स्वप्नेऽप्यङ्गेऽनुबन्धं त्यजति न महसा मूर्छितेऽप्यन्तरात्मा ।
पूर्वं ये येऽनुभूतास्तनुयुवतिहयव्याघ्रदेशादयोऽर्था-
स्तत्संस्कारस्वरूपान्सृजति पुनरमूञ्छ्रित्य संस्कारदेहम् ॥ ७७ ॥

(ஸ்வப்னகாலத்தில்) अनेन-இதினால் (ஸ்தூல சரீரத்தைக்கொண்டே) भीत्या-பயத்தினால் रोदिति-அழுகிறான், प्रवदति-புலம்புகிறான், हसति-சிரிக்கிறான், श्लाघते-ஸ்துதிக்கிறான். अस्मात्-ஆகையால் नूनं-நிச்சயமாக, स्वप्नेपि-ஸ்வப்ன ஸமயத்திலும், अङ्गे-ஸ்தூல சரீரம் मूर्छिते-பிரக்ஞையற்றிருந்தாலும் अपि-கூட, अन्तरात्मा-உள்ளேயிருக்கும் ஆத்மா अनुबन्धं-(ஸ்தூல சரீரத்தின்) தொடர்ச்சியை सहसा-பூராவும் न त्यजति-விட்டு விடுகிறதில்லை. पूर्वं-முன்னால் ये ये-எந்த எந்த तनु-युवति-हय-व्याघ्र-देश-आदयः- சரீரம்-ஸ்திரீகள்-குதிரை-புலி-இடம்-முதலான अर्थाः-விஷயங்கள் अनुभूताः-அனுபவிக்கப் பட்டிருக்கின்றனவோ तत्-संस्कार-स्वरूपान्-அவைகளின் வாஸனாமயமான अमून्-இவைகளை (ஸ்வப்ன விஷயங்களை), (ஆத்மாவானவர்) संस्कारदेहं-ஸம்ஸ்காரங்களுக்கு ஆசிரயமாயிருக்கிற ஸூக்ஷ்ம சரீரத்தை श्रित्य-வைத்துக்கொண்டு पुनः-மறுபடியும் सृजति-ஸ்ருஷ்டிக்கிறார்.

पूर्वं (முன்னால்)-என்பது இந்த ஜன்மத்திலேயே முன்னால் என்பது மட்டுமல்ல இதற்கு முன் ஏற்பட்டிருக்கும் அனந்தமான

ஜன்மாக்களில் சேர்ந்திருக்கக்கூடிய ஸம்ஸ்காரங்களும் இப்பொழுதுள்ள ஸ்வப்ன அனுபவத்திற்குக் காரணமாயிருக்கலாம்.

ஸூக்ஷ்ம சரீரத்தை வைத்துக் கொண்டு புதிதாக சரீரம் ஸ்திரீ முதலியன ஸ்ருஷ்டிக்கப்படுகிறது என்று சொன்னதிலிருந்தே ஸ்வப்ன காலத்தில் சேஷ்டிப்பதாகத் தோன்றும் சரீரம் ஸ்ருஷ்டிக்கப்பட்ட தேஹமே தவிர ஸூக்ஷ்ம சரீரமாகாது என்று தெளிவாய் தெரிகிறது.

(78)

இவ்விஷயம் பிருஹதாரண்யக உபநிஷத்தில் வர்ணிக்கப் பட்டிருக்கிறது,

सन्ध्यं तृतीयं स्वप्नस्थानं तस्मिन् सन्ध्ये स्थाने ....

स यत्र प्रस्वपिति अस्य लोकस्य सर्वावतो मात्रां अपादाय स्वयं विहत्य स्वयं निर्माय स्वेन भासा स्वेन ज्योतिषा प्रस्वपिति, अत्रायं पुरुषः स्वयं ज्योतिर्भवति ॥ IV 3 (9)

இதை அடுத்த சுலோகத்தில் எடுத்துச் சொல்கிருர்.

संधौ जाग्रत्सुषुप्त्योरनुभवविदिता स्वाप्न्यवस्था द्वितीया
तत्रात्मज्योतिरास्ते पुरुष इह समाकृष्य सर्वेन्द्रियाणि ।
संवेश्य स्थूलदेहं समुचितशयने स्वीयभासाऽन्तरात्मा
पश्यन्संस्काररूपानभिमतविषयान्याति कुत्रापि तद्वत् ॥ ७८ ॥

जाग्रत्-सुषुप्त्योः-ஜாக்கிரத்தும்-ஸுஷுப்தியும் सन्धौ-சேரும்போது (இரண்டிற்கும் இடையில்) द्वितीया-இரண்டாவதாக स्वाप्नी अवस्था-ஸ்வப்ன தசையானது अनुभव-विदिता-அனுபவத்திஞல்-பிரஸித்தமானது तत्र-அந்த ஸ்வப்ன தசையில் पुरुषः-ஆத்மா आत्म-ज्योतिः-ஸ்வயம்-ஜ்யோதிஸ்ஸாக आस्ते-இருக்கிருர் इह-இங்கே अन्तरात्मा-(ஸ்வயம் ஜ்யோதியான) உள்ளே இருக்கும்

ஆத்மா सर्व-इन्द्रियाणि-எல்லா-இந்திரியங்களையும் समाकृष्य-நன்கு இழுத்துக்கொண்டு, समुचित-शयने-உசிதமான-படுக்கையில் स्थूलदेहं-ஸ்தூலதேஹத்தை संवेश्य வைத்து விட்டு संस्कार रूपान्-ஸம்ஸ்கார ரூபமாயிருக்கும் अभिमत-विषयान्-இஷ்டப்பட்ட-விஷயங்களை स्वीय-भासा-தன்னுடைய பிரகாசத்தினுல் पश्यन्-பார்த்துக்கொண்டு कुत्र अपि-எங்கெல்லாமோ तद्वत्-அதைப்போல (ஸம்ஸ்கார ரூபமாயோ? இருந்துகொண்டு) याति-போகிருர் (சேஷ்டிக்கிருர்).

(79)

ஸ்தூல சரீரத்தை பூராவும் விட்டுவிட்டு ஆத்மா போய் விட்டால் மரணமல்லவா ஏற்படும்? ஆகையால் அதை ரக்ஷித்துக்கொண்டிருக்கும்படி பிராணன் அதில் தங்கியிருக்கும், என்று பிரஹதாரண்யக உபநிஷத்திலுள்ள

प्राणेन रक्षन्नवरं कुलायं बहिष्कुलायादमृतश्चरित्वा ।
स ईयतेऽमृतो यत्र कामं हिरण्मयः पुरुष एकहंसः ॥ IV 3 (12)

இந்த வாக்கியத்தையும், ஸ்வப்னத்தில் ஸம்ஸ்காரமயமான பலவித பதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்கிருர், என்பதற்கு

न तत्र रथा न रथयोगा न पन्थानो भवन्ति । अथ रथान् रथयोगान् पथः सृजते । न तत्र आनन्दाः मुदः प्रमुदो भवन्ति । अथ आनन्दान् मुदः प्रमुदः सृजते । न तत्र वेशान्ताः पुष्करिण्यः स्रवन्त्यो भवन्ति । अथ वेशान्तान् पुष्करिणीः स्रवन्तीः सृजते । स हि कर्ता ॥ ,, ,, (10)

स्वप्नान्त उच्चावचं ईयमानो रूपाणि देवः कुरुते बहूनि ।
उतेव स्त्रीभिः सह मोदमानो जक्षदुतेवापि भयानि पश्यन् ॥
,, ,, (13)

என்ற இவ்வாக்கியங்களையும் மேலால் வரும் இரண்டு சுலோகங்களில் ஸ்ரீமத் ஆசார்யார் விவரித்துச் சொல்கிருர்.

रक्षन्प्राणैः कुलायं निजशयनगतं श्वासमात्रावशेषै-
र्मा भूत्तत्प्रेतकल्पाकृतिकमिति पुनः सारमेयादिभक्ष्यम् ।
स्वप्ने स्वीयप्रभावात्सृजति हयरथान्निम्नगाः पल्वलानि
क्रीडास्थानान्यनेकान्यपि सुहृदबलापुत्रमित्रानुकारान् ॥ ७९ ॥

निज - शयन - गतं - தன்னுடைய-படுக்கையில்-இருக்கிற कुलायं-சரீரத்தை, तत्-அது प्रेत-कल्प-आकृतिकं பிரேதம்-மாதிரி-ரூபமுள்ளதாகவும் पुनः-மேலும் सारमेय-आदि-भक्ष्यं-நாய்-முதலானவைகளுக்கு-தின்னக்கூடியதாகவும் मा भूत्-ஆகிவிடக்கூடாது इति-என்று, श्वासमात्र-अवशेषैः-மூச்சுமாத்திரம்-மீதமுள்ளதாயுள்ள प्राणैः-பிராணன்களைக் கொண்டு रक्षन्-ரக்ஷித்துக்கொண்டு, स्वप्ने-ஸ்வப்னத்தில் स्वीय-प्रभावात्-தன்னுடைய-ஸாமர்த்தியத்தினுல் हय-रथान्-குதிரைகளையும்-ரதங்களையும், निम्नगाः-நதிகளையும், पल्वलानि-நீர்க்குட்டைகளையும், अनेकानि-பலவிதமான क्रीडा-स्थानानि-விளையாடும்-இடங்களையும் सुहृत्-अबला-पुत्र-मित्र-अनुकारान्-நண்பன்-ஸ்திரீ-மகன்-மித்திரன்-போலுள்ள ரூபமுடையவர்களையும் अपि-கூட सृजति-ஸ்ருஷ்டி செய்கிருர்.

(80).

मातङ्गव्याघ्रदस्युद्विषदुरगकपीन्कुत्रचित्प्रेयसीभिः
क्रीडन्नास्ते हसन्वा विहरति कुहचिन्मृष्टमश्नाति चान्नम् ।
म्लेच्छत्वं प्राप्तवानस्म्यहमिति कुहचिच्छङ्कितः स्वीयलोका-
दास्ते व्याघ्रादिभीत्या प्रचलति कुहचिद्रोदिति ग्रस्यमानः ॥ ८० ॥

मातङ्ग-व्याघ्र-दस्यु-द्विषत्-उरग-कपीन्-யானை-புலி-திருடன் சத்ரு-பாம்பு-குரங்கு இவைகளை (ஸ்ருஷ்டி செய்கிருன்). कुत्रचित्-சிலஸமயத்தில் प्रेयसीभिः-பிரியமான ஸ்திரீகளுடன் क्रीडन्-விளையாடிக்கொண்டு आस्ते-இருக்கிருன்; वा-அல்லது हसन्-சிரித்துக்கொண்டு विहरति-உல்லாஸமா

யிருக்கிறுன். कुहचित्-சில ஸமயத்தில் मृष्टं-சுத்தமான अन्नं-அன்னத்தை अश्नाति च-சாப்பிட்டுக்கொண்டு இருக்கிறுன. कुहचित्-சில ஸமயத்தில் म्लेच्छत्वं-மிலேச்சத தனமையை प्राप्तवान्-அடைந்தவனுக अहं-நான் अस्मि-இருக்கிறேன் इति-என்று स्वीय-लोकात्-தன்-உலகத்திலிருந்து (பந்துக்கள் ஸ்நேஹிதர்களிடமிருந்து) शङ्कित-ஸந்தேஹமுள்ளவனுக आस्ते-(விலகி) இருக்கிறுன. व्याघ्रादि-भीत्या-புலி முதலியதின்-பயத்தினுல் प्रचलति-ஓடுகிறுன; कुहचित्-சில ஸமயம் ग्रस्यमानः-(அவைகளால்) பிடிக்கப்படுபவனுய் रोदिति-அழுகிறுன்.

(81)

இதுவரை ஸுஷுப்தியையும் ஸ்வப்னத்தையும் வர்ணித்துவிட்டு, முன் 33, 34, 35 சுலோகங்களில் ஸ்வப்னம் போலவே தான் ஜாக்கிரத்தும என்று சொன்னதையனுஸரித்து, ஜாக்கிரத் காலததில் அனுபவிக்கும் உலகமும் கல்பிதம், வெறும் தோற்றந் தான என்பதை எடுத்துச்சொல்ல ஆரம்பிக்கிறுர். ஸ்வப்னத்திற்கு காரணம் எப்படி நித்ரையோ, அப்படியே ஜாக்கிரத் தோற்றத்திற்குக் காரணம அவித்யை ஆத்ம தத்வத்தை அறியாமலிருப்பதே என்கிறுர். அறியாமையினுல் பதார்த்தம் தோனறுமா? என்றுல், அதற்கு மூனறு உதாஹரணங்களை எடுத்துக்காட்டுகிறுர். 1. சிப்பியில் வெள்ளி, 2. கானலில் ஜலம், 3. கயிற்றில் பாம்பு. இவையெல்லாம தோன்றுவதற்குக் காரணம் அவைகளுக்கு அடிப்படையான சிப்பி, கானல், கயிறு இவைகளை அறியாமலிருப்பதுதானே எனகிறுர்—

यो यो दृग्गोचरोऽर्थो भवति स स तदा तद्गतात्मस्वरूपा-
विज्ञानोत्पद्यमानः स्फुरति ननु यथा शुक्तिकाज्ञानहेतुः ।
रौप्याभासो मृषैव स्फुरति च किरणाज्ञानतोऽम्भो भुजङ्गो
रज्ज्वज्ञानाभिमथं सुखभयकृदतो ह्यस्पष्टं किलेदम् ॥ ८१ ॥

यः यः-எந்த எந்த अर्थः-பதார்த்தமானது दृक्-गोचरः-பார்வைக்கு-விஷயமாக भवति-இருக்கிறதோ, सः सः-அது அது तदा-அந்த ஸமயத்தில் तद्-गत-आत्म-स्वरूप-अवि

ज्ञान-उत्पद्यमानः- அதில்-உள்ள-ஆத்மாவின்-ஸ்வரூப விஷய மான-அறிவின்மையினுலேயே-ஏற்பட்டு स्फुरति - விளங்கு கிறது ननु- அல்லவா? यथा-எதைப்போல் என்றால், रौप्य-आभासः-வெள்ளியின்-தோற்றம் मृषा एव-பொய்யாகவே இருந்துகொண்டு शुक्तिका - अज्ञान - हेतुः-சிப்பிவிஷயமான-அறிவின்மையை - காரணமாகக்கொண்டும், अम्बुः - ஜல மானது किरण-अज्ञानतः च-ஸூர்யகிரணத்தின்-அறியாமை யினுலும், भुजङ्गः-பாம்பானது रज्जु-अज्ञानात्-கயிற்றை-அறியாததினுலும், स्फुरति- விளங்குகிறது. (அவ்விதம் பொய்யாய் தோன்றுவதும் கூட) निमेषं-ஒரு நிமிஷம் सुख-भय-कृत् - ஸுகத்தையும்-பயத்தையும் - உண்டுபண்ணு கிறது. अतः-ஆகையால் दृश्यं (பார்க்கப்படுகிற) இது दृष्टि-सृष्टं-பார்க்கும் ஸமயத்தில்-ஸ்ருஷ்டிக்கப்பட்டது किल-அல்லவா?

दृग्गोचरः (பார்வைக்கு விஷயம்)-என்று சொல்லி யிருந்தபோதிலும் பார்வை, கேள்வி முதலான எல்லாவித அறிவுகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும். எதெல்லாம் இந்திரி யங்களாலோ, மனஸினுலோ அறியப்படுகிறதோ, அதெல்லாம் வெறும் தோற்றம். அவைகளுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள ஆத்மஸ்வரூபத்தை அறியாத காரணத்தினுலேயே தோனறு கின்றன எனறு தாத்பர்யம். தோற்றமாயிருந்தாலும் ஸுகத் திற்கு காரணமாய் “நல்லது” என்று தோன்றலாமென்பதற்கு வெள்ளியையும, ஜலத்தையும் துக்கத்திற்கு காரணமாய் “கெட்டது” எனறு தோன்றலாமென்பதற்கு பாம்பையும், திருஷ்டாந்தமாக கொடுத்திருக்கிறார்.

(82)

உலகம் தோற்றந்தான் என்பதற்கு ஆதாரமாக பகவத் கீதையிலுள்ள வாக்கியத்தின் தாத்பர்யத்தை விளக்கி அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார் பகவான் ஜகத் ஸ்ருஷ்டியைப்பற்றி சொல்லும்போது தன்னுடைய ஆசிரயத்தினுல்தான் மாயை ஜகத்தை ஸ்ருஷ்டி செய்கிறது என்கிறார்.

சு. 20.

मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनाऽनेन कौन्तेय जगत् विपरिवर्तते ॥ IX 10

தன்னை அதிஷ்டானமாகவைத்து ஜகத் தன்னிடத்தில் தோன்றுவதால், அது தன்னிடத்தில் இருக்கிறதே தவிர, தான் அதனிடத்தில் இல்லை என்றும் சொல்கிறார்.

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ,, 4
मत्तः परतरं नान्यत् किञ्चिदस्ति धनञ्जय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ VII 7
ये चैव सात्त्विका भावाः राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ ,, 12
न तदस्ति विना यत् स्यात् मया भूतं चराचरम् ॥ X 39

ஆரோபிதமான ஜகத்திற்குதான் அதிஷ்டானம் என்கிற முறையில் ஜகத் தன்னிடமிருப்பதாகச் சொன்னாரே தவிர, தன்னிடத்தில் வாஸ்தவமாக ஜகத் இல்லையென்றும் சொல்கிறார்.

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृत् न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ IX 5

"தோன்றின வெள்ளி எங்கே இருக்கிறது?" என்று கேட்டால் "கிளிஞ்சலில்" என்றுதான் பதில் சொல்லவேண்டும். "கிளிஞ்சலில் வெள்ளி இருக்கிறதா?" என்று கேட்டால், "இல்லை" என்றே பதில் சொல்லவேண்டும். இப்பதில்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டதாகவும் விரோதமாகவும் தோன்றின போதிலும், இரண்டுமே வாஸ்தவம். அப்படியேதான் "ஜகத் பகவானிடத்தில் இருக்கிறது", "பகவானிடத்தில் ஜகத் இல்லை" என்ற இரண்டு வாக்கியங்களும் என்று ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்லுகிறார்—

मायाख्यायास्त्वाश्रयेण प्रविततमखिलं यन्मया तेन मत्स्था-
न्येतान्येतेषु नाहं यदपि हि रजतं भाति शुक्तौ न रौप्ये ।
शुक्त्यंशस्तेन भूतान्यपि मयि न वसन्तीति विष्वग्विनेता
प्राहास्माद्दृश्यजातं सकलमपि मृषैवेन्द्रजालोपमेयम् ॥ ८२ ॥

माया - अध्यास-आश्रयेण - மாயையினால் ஏற்படும்-அத்யாஸத்திற்கு (தோற்றமாகிய ஆரோபிதத்திற்கு) - ஆசிரயமாய் (அதிஷ்டானமாய்) இருக்கும் मया-என்னால் अखिलं-எல்லாம் प्रविततं-நன்கு விஸ்தாரமாய் வியாபிக்கப் பட்டிருக்கிறது यत्-என்பது எதுவோ तेन-அதினால் एतानि-இவைகள் எல்லாம் मत्-स्थानि-என்னிடத்தில் இருப்பவைகள்; एतेषु-இவைகளிடத்தில் अहं-நான் न-இருப்பதில்லை. यत्-अपि-हि-எதனால் கூட शुक्तौ-கிளிஞ்சலில் रजतं-வெள்ளி भाति-தோன்றுகிறதோ तेन-அதனால் रौप्ये-அந்த வெள்ளியில் शुक्ति-अंशः-கிளிஞ்சலின்-அம்சம் கூட न-கிடையாது. (உண்மையில்), भूतानि-अपि - உண்டான பதார்த்தங்களும் मयि-என்னிடத்தில் न वसन्ति-இருக்கவில்லை. इति-என்று विष्वक्-विनेता-ஜகத்திற்கெல்லாம்-ஆசார்யர் (நடத்துகிறவர், பகவான்) प्राह-சொல்லி இருக்கிறார். अस्मात्-ஆகையினால் दृश्य-जातं-பார்க்கப் படுகிற-கூட்டம் सकलं अपि-எல்லாம் கூட इन्द्र जाल-उपमेयं-இந்திர ஜாலத்திற்கு-ஒப்பிடக் கூடியதாக मृषा एव-பொய்யேதான்.

அதிஷ்டானத்தினுடைய ஸத்தையை வைத்துக்கொண்டே ஆரோபிதம் இருப்பதாகத் தோன்றுவதினால், அதிஷ்டானத்தில் ஆரோபிதம் இருக்கிறதென்று ஒருவாறு சொல்லலாம். ஆனால் தோற்றத்திற்குக் காரணமாகிய அதிஷ்டான விஷயமான அறியாமை ஏற்படாமலேயிருந்தாலும் ஏற்பட்டு விலகிவிட்டாலும், தோற்றமே ஏற்படாததினால் அதிஷ்டானத்தில் ஆரோபிதம் இல்லையென்று சொல்வதுதான் நியாயமாகும். தவிரவும், ஆரோபிதத்திற்கு சொந்தமாக ஸத்தையே இல்லாமலிருப்-

பதினால், அது இன்னொரு ஆரோபிதத்திற்கு அதிஷ்டானமாக இருக்க யோக்கியதையற்றது; அப்படியிருக்க, தனக்கு ஸத்தையைக் கொடுத்த அதிஷ்டானத்திற்கும் அதிஷ்டானமாய் இருப்பது ஸாத்தியமேயில்லை. மேலும், அதற்கு ஸத்தையைக் கொடுத்த அதிஷ்டானம் வாஸ்தவமாக "ஸத்" இருக்கும் பதார்த்தமானதினால் அது வேறு அதிஷ்டானத்தை அபேக்ஷிக்காது. ஆகையால், அதிஷ்டானமாயிருக்கும் பதார்த்தம் ஆரோபிதத்தில் இருக்கிறது என்று சொல்வது நியாயமாகாது. இந்த முறையில்தான் பகவான் "என்னிடம் ஜகத் இருக்கிறது. ஜகத்தில் நான் இல்லை", என்றும், "வாஸ்தவத்தில் என்னிடம் ஜகத் இல்லை" என்றும் சொல்கிறார். எது வாஸ்தவமாய் இல்லாமல் இருப்பதாகத் தோன்றுகிறதோ அது இந்திரஜால வித்தையினால் காட்டப்படுகிற பொய்யான பதார்த்தங்கள் போலவேதான்.

(83)

ஜகத் தோன்றுவதற்குக் காரணம் மாயையினால் ஏற்படும் அத்யாஸம் என்று சொல்லப்பட்டது. அதாவது, தான் பிரஹ்மம் என்பதை அறியாமல் தன்னை சரீரம் முதலானதென்று பிராந்தியினால் நினைத்துக்கொண்டிருப்பது. அத்துடன் அந்த நினைப்பு நின்றுவிடுகிறதில்லை. ஜகத்தில் தோன்றும் பதார்த்தங்களில் "நல்லது, கெட்டது", "வேண்டும், வேண்டாம்" என்கிற எண்ணங்களும் ஏற்படுவதினால், நல்லதாய் தோன்றும் பதார்த்தத்தை ஸம்பாதித்து ஸுகமடைவதற்காகவும், கெட்டதாய் தோன்றும் பதார்த்தத்தை விலக்கி துக்கமடையாமல் இருப்பதற்கும் பிரவிருத்தி செய்யும்படி ஏற்படுகிறது. அதினால் புண்யம், பாபம், ஸுகம், துக்கம் எல்லாம் ஏற்படுகின்றன. அத்யாஸம் ஸகல ஜீவர்களுக்குமிருப்பதினால் இவ்வித பிரவிருத்திகளில்லாமல் யாராலும் இருக்க முடியாது என்ற தத்வத்தை பிருஹதாரண்யக உபநிஷத்தில் கண்டபடிக்கும் பகவத்கீதையில் கண்டபடிக்கும் ஆசார்யார் எடுத்துச் சொல்கிறார். இங்கே மனிதன் இறந்தபிறகு எங்கே போகிறான் என்று ஜாத்காருவின் புத்திரரான ஆர்த்தபாகர் என்பவர் யாக்ஞவல்க்யரைக் கேட்கும்போது "கர்மாவை அனுஸரித்து புண்ய கர்மாவாயிருந்தால் புண்யலோகத்திற்கும் பாபகர்மாவா

இருந்தால் பாப லோகத்திற்கும்" என்று அவர் பதில் சொல்கிருர்; அப்பொழுது அவ்விருவரும் பேசிக்கொண்டிருந்ததும் சிலாகித்துக் கொண்டிருந்ததும் கர்மாவைத்தான் என்று உபநிஷத் சொல்கிறது.

तौ ह यदूचतुः कर्म हैव तदूचतुः । अथ यत् प्रशशंसतुः कर्म हैव तत् प्रशशंसतुः । पुण्यो वै पुण्येन कर्मणा भवति, पापः पापेन, इति ... ॥ III 2 (13).

பகவானும் பிராணிகள் பூர்வ கர்மாவினுல் ஏவப்படுகிற படியால் மேற்கொண்டும் ஏதேனும் பிரவிருத்தி செய்து கொண்டேதானிருப்பார்கள் என்பதை

न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते हि अवशः कर्म सर्वः प्रकृतिजैः गुणैः ॥ III, 5
सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ।' XIV 5
न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः । XVIII 11

என்ற சுலோகங்களில் சொல்லியிருக்கிருர்

हेतुः कर्मैव लोके सुखतदितरयोरेवमज्ञोऽविदित्वा
मित्रं वा शत्रुरित्थं व्यवहरति मृषा याज्ञवल्क्यार्तभागौ ।
यत्कर्मैवोचतुः प्राग्जनकनृपगृहे चक्रतुस्तत्प्रशंसां
वंशोत्तंसो यदूनामिति वदति न कोऽप्यत्र तिष्ठत्यकर्मा ॥ ८३ ॥

लोके-உலகத்தில் सुख-तदितरयोः-ஸுகத்திற்கும்-அதிலிருந்து வேருகிய துக்கத்திற்கும் हेतुः-காரணம் कर्म एव-கர்மாதான். एवं-இவ்விதமாக अविदित्वा-தெரிந்து கொள்ளாமல் अज्ञः-அறிவற்றவன் मित्रं वा-நண்பன் என்ருே शत्रुः-சத்ரு என்ருே इत्थं-என்று मृषा வீணுக व्यवहरति-வ்யவஹாரம் செய்கிருன். यत्-எந்த कर्म एव-கர்மா

வையே प्राक्-முன்னால் जनक-नृप-गृहे-ஜனக-ராஜன்-கிருஹத்தில் याज्ञवल्क्य-आर्तभागौ-யாக்ஞவல்க்யரும் ஆர்த்தபாகரும் ऊचतुः-சொல்லிக் கொண்டார்கள், तत्-प्रशंसां-அது விஷயமான-பிரசம்ஸையை चक्रतुः-செய்தார்கள் (அதை சிலாகித்தார்கள்). यदूनां-யதுக்களுடைய वंश-उत्तंसः-வம்சத்திற்கு அலங்காரமாயிருந்தவர் (ஸ்ரீ கிருஷ்ண பகவான்) "अत्र இங்கே உலகத்தில் कः अपि-யாருங்கூட अकर्मा-கர்மா செய்யாதவராக न तिष्ठति-இருப்பதில்லை" इति-என்று वदति-சொல்கிறார்.

இப்பொழுதுதான் அனுபவிக்கும் ஸுகத்திற்கு முன்னால் தான் செய்த புண்யம்தான் காரணம். இப்பொழுது தான் அனுபவிக்கும் துக்கத்திற்கு முன்னால் தான் செய்த பாபம்தான் காரணம் என்கிற உண்மையை அறியாமல் பலர் தன் ஸுக துக்கங்களுக்கு மனிதர்களே காரணமென்று எண்ணி சிலரை நண்பர்களாகவும் சிலரை எதிரிகளாகவும் பாவித்து வியவஹாரம் செய்கின்றனர்.

(84)

கர்மாதான் ஸுக துக்கத்திற்குக் காரணம் என்பது வாஸ்தவம். ஆனால் கர்மாவானது ஜடமானதினால் அதுவாக ஸுக துக்கத்தைக் கொடுக்க சக்தியற்றது. அதைக் காரணமாக வைத்துக்கொண்டு ஸுக துக்கங்களை கொடுப்பதற்கு ஒரு சேதனன் வேண்டும். மரத்தை வெட்டித் தள்ளுவது கோடாலி தான் என்பதில் ஆக்ஷேபணையில்லை. ஆனாலும் அது ஜடமானதினால் அதுவாக வெட்டிவிடாது. ஒரு மனிதன் அதை கையில் எடுத்து உபயோகித்தால்தான் கோடாலி வெட்டமுடியும். அப்படியே ஸகல ஜீவர்களுக்கும் அந்தந்த கர்மாக்களுக்கு தக்கபடி ஸுக துக்கங்களைக் கொடுப்பதற்கு ஒரு சேதனராகிய ஆத்மா அவசியம்; ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கும் ஒரு சேதனனாகிய ஆத்மா அவசியம். ஸுக துக்கங்களை அனுபவிப்ப

தற்கும் ஒரு சேதனனாகிய ஆத்மா அவசியம். பலனைக் கொடுப்பவரை ஈசுவரன் என்றும், அனுபவிப்பவனை ஜீவன் என்றும் சொல்வார்கள். கர்மா தானாக பலனைக் கொடுக்க முடியாதென்பது அடுத்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

वृक्षच्छेदे कुठारः प्रभवति यदपि प्राणिनोद्यस्तथाऽपि
प्रायोऽन्नं तृप्तिहेतुस्तदपि निगदितं कारणं भोक्तृयत्नः ।
प्राचीनं कर्म तद्वद्विषमसमफलप्राप्तिहेतुस्तथाऽपि
स्वातन्त्र्यं नश्वरेऽस्मिन्न हि खलु घटते प्रेरकोऽस्यान्तरात्मा ॥

वृक्ष-छेदे-மரத்தை வெட்டுவதில் कुठारः-கோடாலியானது प्रभवति-சக்தியுள்ளது यत् अपि-என்றாலும் तथा अपि-அப்படியும் प्राणि-नोद्यः-பிராணியால் (சேதனனால்)-உபயோகப்படுத்த வேண்டியதாய் இருக்கிறது. प्रायः-ஸாதாரணமாக अन्नं-அன்னம் तृप्ति-हेतुः-திருப்திக்கு-காரணம்; तत् अपि-அப்படியிருந்தும் भोक्तृ-यत्नः-சாப்பிடுகிறவனுடைய-பிரயத்னம் कारणं-காரணமாக निगदितं-சொல்லப்படுகிறது. तद्वत्-அதைப்போலவே, प्राचीनं-முன் செய்திருக்கும் कर्म-கர்மா தான विषम सम-फल-प्राप्ति-हेतुः-கெட்டதோ-நல்லதோ-பலனை-அடைவதற்கு-காரணம்; तथा अपि-அப்படியேயானாலும் नश्वरे-நாசத்தையடையும் தன்மையுள்ள अस्मिन्-இந்த கர்மாவில் स्वातन्त्र्यं-ஸ்வதந்திரமாக இருக்கும் தன்மை (தானாகவே பலனைக் கொடுக்கக் கூடிய தன்மை) न हि खलु घटते-பொருந்தாது என்பது பிரஸித்தமல்லவா? (ஆகையால்) अस्य-இதற்கு (கர்மாவிற்கு) प्रेरकः-(பலனைக்கொடுக்கும்படி) ஏவுகிறவர் (செய்பவர்) अन्तरात्मा-உள்ளிருக்கும் ஆத்மா

கர்மாவானது செய்யப்படும் ஸமயத்தில் மாத்திரம் இருந்து, செய்து முடிந்தவுடன் நாசத்தையடைந்துவிடுவதால், அது பின்னால் ஒரு காலத்தில் பலனைக்கொடுக்கிறது என்பது ஸாத்திய

யில்லை என்பதைக் காட்டுவதற்காகத்தான் नश्वरे (நாசமடையக் கூடிய) என்று கர்மா குறிப்பிட்டப்பட்டிருக்கிறது. கர்மா செய்யும் போதும் பலன் ஏற்படும்போதும் தொடர்ந்திருக்கிறவனும், பலனுகிய ஸுக துக்கங்களை அனுபவிக்கக்கூடியவனுமான ஒரு சேதனன் அவசியம் வேண்டியிருக்கிறது. இதை பகவத் கீதையில்

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ XIII, 21

என்று சொல்லியிருக்கிருர். அனுபவிப்பதற்கு ஜீவன் வேண்டியதானுலும் அனுபவிப்பதில் அவனுக்குப் பூரா ஸ்வாதந்திரியம் இருந்துவிட்டால் ஸுகத்தை மாத்திரம் அனுபவிப்பானே தவிர துக்கத்தை அனுபவிக்கமாட்டான். ஆகையால் அவனுக்கும் ஸுக துக்கங்களை கர்மானுஸாரமாகக் கொடுப்பதற்கு அவனுக்கு மேல் ஒரு சேதனன் வேண்டியிருக்கிறது. அவரே ஈசுவரன். அவரே எல்லா பிராணிகளுடையவும் ஹ்ருதய குஹையில் கர்மாக்களுக்கெல்லாம் ஸாக்ஷியாக இருந்துகொண்டிருக்கிருர்,

(85)

ஈசுவரன் ஒருவர்தான் ஸகல பிராணிகளுக்கும் கர்ம பலனைக் கொடுப்பவர். வேறு எந்த தேவதையை உபாஸித்தாலும் அந்த தேவதையும் ஈசுவரனில் அடங்கினதேயானதினுல், அந்த உபாஸனையும் ஈசுவரனை உபாஸித்ததாகவேதான் ஆகிறது. ஆனுல் இந்த தத்வத்தை ஸாமான்ய ஜனங்கள் அறிவதில்லை. அறியாததினுல் மேலான பிரயோஜனத்தை அடையத் தவறிவிடுகிருர்கள்.

येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयान्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ IX 23
अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ ,, 24

அவர்கள் பலவித ஆசைகளைக்கொண்டு மற்ற தேவதைகளை சிரத்தையுடன் ஆராதித்து அந்த தேவதைகள் மூலமாக பலன்களை அடைகிறார்கள்; அந்த பலன்களையும் பகவானே தான் ஏற்படுத்திக்கொடுக்கிறார் என்பதை அவர்கள் அறியவில்லை; ஆகையால் அப்பலன்களும் சீக்கிரம் நாசத்தை அடைந்துவிடுகின்றன. பகவானையே நேரில் உபாஸித்தால் மற்ற தேவதைகளையும் உபாஸித்ததாக ஆகுமோ உத்தமமான பலனையே அடையலாமே என்பதையும் தெரிந்துகொள்வதில்லை.

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ VII 20

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ ,, 22

अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ ,, 23

இவ்விஷயத்தை இரண்டு சுலோகங்களில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்கிறார்.

स्मृत्या लोकेषु वर्णाश्रमविहितमदो नित्यकाम्यादि कर्म
सर्वं ब्रह्मार्पणं स्यादिति निगमगिरः संगिरन्तेऽतिरम्यम् ।
यन्नासानेत्रजिह्वाकरचरणशिरःश्रोत्रसंतर्पणेन
तुष्येदङ्गीव साक्षात्तरुरिव सकलो मूलसंतर्पणेन ॥ ८५ ॥

स्मृत्या-ஸ்மிருதியினால் लोकेषु-உலகத்தில் वर्ण-आश्रम-विहितं-வர்ணம்-ஆசிரமம்-இவைகளை உத்தேசித்தும் விதிக்கப்பட்டிருக்கிற अदः-அந்தந்த नित्य-काम्य-आदि-நித்யம்-காம்யம்-முதலான कर्म கர்மா सर्वं-எல்லாமே ब्रह्म-अर्पणं-பிரஹ்மத்திற்கு-அர்ப்பணமாக स्यात्-ஆகும இति-என்று निगम-गिरः-வேத-வாக்கியங்கள் अतिरम्यं-வெகு அழகாக संगिरन्ते-சொல்லுகின்றன. यत्-ஏனென்றால், नासा-नेत्र-जिह्वा-कर-चरण-शिरः-श्रोत्र संतर्पणेन-மூக்கு-கண்-

நாக்கு-கை-கால்-தலை-காது இவைகளுக்கு திருப்தி செய்வதினால் அங்கீ இவ-இந்த அங்கங்களையுடையவர் போலவும், மூல-ஸந்தர்ப்பணேன-வேருக்கு-(உரம், ஜலம், இவற்றின் மூலம்) திருப்தி செய்வதினால் ஸகல: பூரா தரு: இவ-மரம் போலவும் ஸாக்ஷாத்-நேராக துஷ்யேத்-பகவான் ஸந்தோஷமடைவார்.

வர்ணாச்ரமவிஹிதம் வர்ணத்தையும், ஆசிரமத்தையும் ஒட்டி விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்களில் ஸூர்யன், வாயு, அக்னி முதலிய தேவதைகளின் ஆராதனை ரூபமாக அநேக கர்மாக்கள் இருக்கும். சிலது அவசியம் செய்யவேண்டிய நித்ய கர்மாக்களாகவும், சிலது ஏதோ நிமித்தத்தைக்கருதிச் செய்யவேண்டிய நைமித்திக கர்மாக்களாகவும், சிலது பாபத்தைப் போக்குவதற்கான பிராயச்சித்த கர்மாக்களாகவும், சிலது விசேஷமாய் வேண்டப்படும் பலனை உத்தேசித்துச் செய்யும் காம்ய கர்மாக்களாகவும், சிலது உபாஸனாரூபமாயும் இருக்கும். எப்படியிருந்தாலும் எல்லா கர்மாக்களையும் செய்து கடைசியில் அவைகளை ப்ரஹ்மார்ப்பணம் செய்வதுதான் நியாயம். அந்தந்த தேவதையை உத்தேசித்துக் கர்மாவை செய்துவிட்டு கடைசியில் பிரஹ்மார்ப்பணம் செய்வது உசிதமா என்று தோன்றலாம். ஒரு பெரியவர் கிருஹத்திற்கு வந்தபோது அவருக்கு நல்ல சந்தனத்தைக் கொடுத்து, நல்ல காக்ஷிகளைக்காட்டி, நல்ல ருசியான ஆஹாரம்கொடுத்து, கையில் தாம்பூலாதிகள் ஸமர்ப்பித்து, கால்களில் வணங்கி, மலர்மாலைகள் அணிவித்து, இனிய சொல் சொல்லி, உபசாரம் செய்வதில்லையா? அப்பொழுது அக்கார்யங்களால் அந்தந்த அங்கங்கள் மூலமாக அந்த பெரியாரையே ஆராதித்ததாக ஆகிறதல்லவா? அப்படியே மரத்தின் வேரில் விட்டஜலம் வேருக்கு மாத்திரமா பிரயோஜனம்? பூரா மரமும் குளிர்ந்து செழிப்பதில்லையா? அப்படியே இதர தேவதைகளை கர்மாக்களால் ஆராதனை செய்வதும் இந்த தேவதைகளெல்லாரையும் தன் அங்கமாய்க்கொண்ட ஸர்வ தேவதாஸ்வரூபியான பகவானுடைய ஆராதனையேயாகும். ஆனால் ஜனங்கள் இவ்விதம் தெரிந்துகொள்ளாமல் அந்தந்த தேவதைகளை மாத்திரம் ஆராதிப்பதாக நினைத்துக்கொண்டு விடுவதால், பகவானுடைய ஆராதனைக்கு ஏற்பட்ட முக்கிய பலனையடைவதில்லை.

मूलसंतर्पणेन வேரில் ஜலம் விட்டால் எப்படி மரத்திலுள்ள துளிர், இலை, பூ, காய், பழம் எல்லாம் செழிப்படைகின்றனவோ, அப்படியே எல்லா தேவதைகளுக்கும் வேராயிருக்கிற பகவானை உத்தேசித்து பிரஹ்மார்ப்பணம் செய்துவிட்டால், அவருடைய அங்கங்களாகிய மற்ற தேவதைகளும் திருப்தியடைந்து விடுவார்கள். துளிர் முதலியவைகளில் ஜலம் விடுவது எப்படி வேண்டியதேயில்லையோ, அப்படியே பகவானை ஆராதிப்பவர்களுக்கு மற்ற தேவதைகளை தனித்து ஆராதனை செய்ய அவசியமில்லையென்ற தாத்பர்யமும் கிடைக்கிறது.

(86)

இவ்விதமாக ஸர்வ தேவதா ஸ்வரூபியாகிய பகவானுடைய தத்வத்தையறியாமல் கர்மாக்களைச் செய்கிறவர்களுக்கு பலன் அல்பமாய்த்தானிருக்கும். அந்தப்பலன் அனுபவித்து தீர்ந்தவுடன் மறுபடியும் துக்கம்தான். வேதாத்யயன ஸம்பன்னர்களாய் வைதீக கர்மானுஷ்டான நிரதர்களாய் இருந்தாலும், அவர்களும் ஸ்வர்க்கம் முதலிய மேல்லோகங்களுக்குப் போய்விட்டு கர்மபலன் முடிந்தவுடன் திரும்பி இங்கே பூலோகத்திற்கு வரவேண்டியதுதான்.

त्रैविद्या मां सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोकमश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥
IX 20

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभन्ते ॥ ,, 21

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ VIII, 16

என்ற இந்த கீதா சுலோகங்களின் கருத்துக்களை அடுத்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிறார்.

यः प्रेत्यात्मानभिज्ञः श्रुतिविदपि तथा कर्मकृत्कर्मणोऽस्य
नाशः स्यादल्पभोगात्पुनरवतरणे दुःखभोगो महीयान् ।

आत्माभिज्ञस्य लिप्सोरपि भवति महाञ्शाश्वतः सिद्धिभोगो
ह्यात्मा तस्मादुपास्यः खलु तदधिगमे सर्वसौख्यान्यलिप्सोः ॥

श्रुतिवित्-வேதர்-(அத்யயனத்துடன் அர்த்தம்) அறிந்தவனைகவும் तथा-कर्म-कृत-அதில் சொல்லியபடி-கர்மாக்களை-அனுஷ்டிக்கிறவனுகவும் अपि-இருந்தாலுங்கூட यः-எவன் आत्म-अनभिज्ञः-ஆத்ம தத்வத்தை-அறியாதவனை प्रेति-இறந்துபோகிருனே, अस्य-இவனுடைய कर्मणः-கர்மாவிற்கு अल्प-भोगात्-கொஞ்சம்-போகத்திலை नाशः-நாசமானது स्यात्-ஏற்பட்டுவிடும். पुनः-மறுபடியும் अवतरणे-கீழே இறங்கும்போது महीयान्-மிகவும் அதிகமான दुःखभोगः-துக்கத்தின்-அனுபவம் (உண்டு). आत्म-अभिज्ञस्य-ஆத்ம தத்வத்தை-அறிந்தவனுக்கு लिप्सोः अपि-ஏதேனும் அடைய வேண்டுமென்ற ஆசையுள்ளவனையிருந்தாலுங்கூட महान्-பெரியதாய் शाश्वतः-நீடித்ததாயுள்ள सिद्धि-भोगः-(அணிமாதி) ஸித்திகளுடன்-போகமானது भवति-ஏற்படும். तस्मात्-ஆகையினுல் आत्मा हि-ஆத்மாவல்லவா उपास्यः-உபாஸிக்க வேண்டியவர்? अलिप्सोः-ஆசையற்றவருக்கு तत्-अधिगमे-அந்த ஆத்மாவைப்பற்றி-ஸாக்ஷாத்தாக அறிவு ஏற்படும்போது सर्व-सौख्यानि-எல்லா-ஸௌக்யங்களும் खलु-இருக்குமல்லவா?

இந்த சுலோகத்திற்கு மூல சுருதி பிரஹதாரண்யக உபநிஷத்தில்

अथ यो ह वा अस्मात् लोकात् स्वं लोकं अदृष्ट्वा प्रैति ... यदिह वा अप्यनेवंवित् महत् पुण्यं कर्म करोति तद्ध अस्य अन्ततः क्षीयते एव । आत्मानमेव लोकं उपासीत । स यः आत्मानमेव लोकं उपास्ते न ह अस्य कर्म क्षीयते । अस्माद्धि एव आत्मनो यत् यत् कामयते तत् तत् सृजते ॥ I 4 (15)

महान् शाश्वतः கொஞ்சமேனும் ஆத்ம விஷயமான அறிவில்லாமல் கர்மாவையே செய்கிறவனுடைய போகத்தைவிட பெரிது சாசுவதம் என்று மாத்திரந்தான் அர்த்தம்.

सर्वसौख्यानि ஆத்மஞானி அனுபவிக்கும் பிரஹ்மானந்தம் பெரிய ஸமுத்திரம் போன்றது. உலகிலுள்ள விஷயானந்தமெல்லாம் அதிலுள்ள சிறிய திவிலை போன்றது. ஸமுத்திரத்தில் நீர்த் திவிலைகள் அடங்கியுள்ளதுபோல் பிரஹ்மானந்தத்தில் எல்லா விஷயானந்தங்களும் அடங்கியுள்ளது என்ற கருத்தில் தான் ஆத்மஞானி எல்லா ஸுகங்களையும் அனுபவிக்கிறான் என்று கூறப்படுகிறது.

ஆசைப்படாதவனைப்பற்றி பிரஹதாரண்யகத்திலேயே

अथ अकामयमानः, योऽकामः निष्कामः आप्तकामः आत्मकामः ॥ IV 4 (6)

"ஆசைப்படாதவன்; எவன் காமம் (ஆசை) இல்லாதவனோ, காமம் விலகினவனோ? காமம் அடைந்தவனோ. ஆத்மாவிலேயே காமம் உள்ளவனோ"

என்ற வாக்கியத்தின்படி இனி அடையவேண்டிய ஸுகம் கிடையாதென்றுதான் தாத்பர்யம்.

(87)

முன் 78வது சுலோகத்தில் ஆத்மா ஸ்வயம் ஜ்யோதிஸ் ஸ்வரூபராயிருப்பதினால்தான் ஸ்வப்ன ஸமயத்தில் ஸூர்யன் முதலான பிரகாசமில்லாமல் போனாலும் தன்னுடைய பிரகாசத்தினாலேயே அங்கு தோன்றும் பதார்த்தங்களை அறிகிறானென்று சொல்லப்பட்டது. ஜாக்கிரத் காலத்திலுங்கூட அறிவு ஏற்படுவது ஆத்மாவினுடைய பிரகாசத்தினாலேயே தவிர ஸூர்யாதி பிரகாசத்தினால், ஆத்மா ஜ்யோதிஸ் ஸ்வரூபமில்லாதபோனால் ஸூர்யாதிகளும் பிரகாசிக்காது, என்று சொல்கிறார்.

सूर्याद्यैरर्थभानं न हि भवति पुनः केवलैर्नात्र चित्रं
सूर्यात्सूर्यप्रतीतिर्न भवति सहसा नापि चन्द्रस्य चन्द्रात् ।
अग्नेरग्नेश्च किंतु स्फुरति रविमुखं चक्षुषश्चित्प्रयुक्ता-
दात्मज्योतिस्ततोऽयं पुरुष इह महो देवतानां च चित्रम् ॥

कैवल्ये-தனித்திருக்கும் सूर्याद्यैः ஸூர்யன் முதலானவைகளால் अर्थभानं-பதார்த்தங்களின்-தோற்றம் न भवति पुनः हि-ஏற்படுவதில்லையென்பது பிரஸித்தம். अत्र-இவ் விஷயத்தில் चित्रं-ஆச்சர்யம் ஒன்றும் न-இல்லை. सूर्यात्-ஸூர்யனிருப்பதினால் மாத்திரம் सूर्य-प्रतीति-ஸூர்யனுடைய-தோற்றம் सहसा-உடனே न भवति-ஏற்படுவதில்லை. चन्द्रात्-சந்திரனால் चन्द्रस्य अपि-சந்திரனுடைய தோற்றமும், अग्नेः-அக்னியினால் अग्नेः च-அக்னியினுடைய தோற்றமும், न ஏற்படுவதில்லை. किं तु-ஆனால் चित् प्रयुक्तात्-சைதன்யத்தினால்-ஏவப்பட்ட चक्षुषः-கண்களினால்தான் रवि मुखं-ஸூர்யன்-முதலானவை स्फुरति-பிரகாசிக்கின்றன. ततः-ஆகையினால் अयं இந்த पुरुषः-புருஷன் आत्म-ज्योतिः-ஸ்வயம்-பிரகாசமாயுள்ளவர். इह-இங்கு देवतानां-தேவதைகளுக்கெல்லாம் (இந்திரியங்களுக்கெல்லாம்) महः च-(அது) ஜ்யோதிஸ்ஸாக இருப்பது தான் चित्रं-ஆச்சர்யம்!

உலகத்தில் சாதாரணமாக பதார்த்தங்களைப் பார்க்கவேண்டுமானால் ஸூர்யன் சந்திரன் அல்லது அக்னி இவைகளின் பிரகாசத்தைக்கொண்டே பார்ப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் அவைகள் மாத்திரம் இருந்தால் பதார்த்தம் தோன்றுவதில்லை என்பது தூக்கத்திலும், குருடன் விஷயத்திலும் அனுபவத்தினால் நன்கு தெரிகிறது. நல்ல பார்வையுடைய கண் இருந்தால்தான் பதார்த்தம் தெரியும், ஸூர்யாதிகள் இருப்பதும் அதனால்தான் தெரியும். மேலும் கண்மாத்திரம் திறந்திருந்து, ஆத்மா மனஸை வேறிடத்தில் வைத்திருந்தால் அப்பொழுதும் பதார்த்தம் தென்படுவதில்லை. ஆகையால் ஆத்ம ஜ்யோதிஸ் கண் மூலமாய் வெளியில் வந்தால்தான் பதார்த்தம் தெரியும். இதிலிருந்து எல்லா பதார்த்தங்களையும் அவைகளைத் தோன்ற உதவும் ஸூர்யாதிகளையும் வாஸ்தவமாய் பார்ப்பது ஸ்வயம் ஜ்யோதிஸ்ஸான ஆத்மாதான்.

தவிரவும், ஸூர்யாதிகள் ரூபத்தை மாத்திரம் பிரகாசிக்கச் செய்யும். கந்தம் தெரியவேண்டுமானால் பிருதிவீ, ரஸம் தெரிய வேண்டுமானால் வருணன், ஸ்பர்சம், தெரியவேண்டுமானால்

வாயு இப்படியே ஒவ்வொரு தேவதையும் அதற்கு ஸம்பந்தப் பட்ட இந்திரியங்கள் மூலமாக அறிவை ஏற்படுத்த உதவுகின்றன. தனக்கு ஸம்பந்தப்படாத இந்திரியங்கள் மூலமாக ஏற்படும் அறிவை உண்டுபண்ண அவைகளுக்கு சக்தி கிடையாது. ஆத்மாவோ சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் எல்லா வற்றையும் அறிந்துகொள்ள சக்திவாய்ந்தது. மனஸினால் கல்பிக்கும் பதார்த்தங்களையும் அறியக்கூடிய தன்மையுள்ளது. ஆகையால் ஆத்மாவினுடைய பிரகாசப்படுத்தும் சக்தி மிகவும் ஆச்சர்யமே என்று தாத்பர்யம்.

இந்த சுலோகத்திற்கு மூலசுருதி ஸாமவேத ஆரண்யகத்தில் இருக்கிறது. அதையே ஸூர்ய-உபஸ்தான மந்திரத்தில் சேர்த்து சொல்லப்பட்டு வருகிறது.

**चित्रं देवानामुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः ।**
**आप्रा द्यावापृथिवी अन्तरिक्षं सूर्य आत्मा जगतस्तस्थुषश्च ॥ V 3.**

"தேவர்களுடைய ஸைன்யம் (இந்திரியங்களுடைய ஸமூஹம்) ஆச்சர்யமாய் வெளிக்கிளம்புகிறது. மித்திரனையும், வருணனையும், அக்னியையும், தெரியும்படிச் செய்துகொண்டு, ஆகாசம், பூமி, அந்தரிக்ஷம் எல்லாவற்றையும் நிரப்பிக் கொண்டு, சலனமுள்ளதும், சலனமற்றதுமான யாவற்றையும் (ஸூர்யன் போல்) பிரகாசப்படுத்திக்கொண்டு ஆத்மா (இருந்து வருகிறார்)."

(88)

ஆத்மா இந்திரியங்களுக்கு மாத்திரம் பிரேரகர் என்பதில்லை, பிராணனை பிரேரணை செய்வதும் அவர்தான் என்று இரண்டு சுலோகங்களால் எடுத்துக்காட்டுகிறார். முதல் சுலோகத்தில் பிராணன் செய்யும காரியங்களைச் சொல்கிறார்.

**प्राणेनाम्भांसि भूयः पिबति पुनरसावन्नमश्नाति तत्र**
**तत्पाकं जाठरोऽग्निस्तदुपहितबलो द्राक्छनैर्वा करोति ।**
**व्यानः सर्वाङ्गनाडीष्वथ नयति रसं प्राणसंतर्पणार्थं**
**निःसारं पूतिगन्धं त्यजति बहिरयं देहतोऽपानसंज्ञः ॥ ८८ ॥**

प्राणेन-பிராணனைக்கொண்டு भूयः-நிரம்ப अम्भांसि-ஜலத்தை पिबति-(ஆத்மா) குடிக்கிறார். पुनः-அப்படியே असौ-அவர் अन्नं-அன்னத்தை अश्नाति-சாப்பிடுகிறார். तत्र-அங்கே तत्-पाकं-அதன்-பாகத்தை तत्-उपहित-बलः-பிராணனால்-கொடுக்கப்பட்ட-சக்தியுடன் கூடிய जाठर-வயிற்றிலுள்ள अग्निः-அக்னியானது द्राक् உடனேயோ शनैः वा-மெள்ளமெள்ளவோ करोति-செய்கிறது. अथ-அதன் பிறகு प्राण-संतर्पणार्थं-பிராணன்களுடைய (இந்திரியங்களுடைய)-திருப்தியை (போஷணத்தை) உத்தேசித்து सर्व-अङ्ग-नाडीषु-எல்லா,-சரீரத்திலுள்ள-நாடிகள் வழியாக रसं-(ஜலம் அன்னம் இவைகளின்) ஸாரத்தை व्यानः-வியானன் नयति கொண்டுபோகிறது. निःसारं-ஸாரமற்றதாய் पूतिगन्धं-அழுகின நாற்றமுள்ள அம்சத்தை अयं-இந்த अपान-संज्ञः-அபானன் என்ற பெயருடையது देहतः-தேஹத்திலிருந்து बहिः-வெளியிலே त्यजति-எறிந்துவிடுகிறது.

(89)

இவ்விதம் வேலை செய்கிற பிராணன் எதனுடைய இருப்பினால் வேலை செய்கிறதோ, அதுவே ஆத்மா என்கிறார். பிராணனுக்கு சக்தியைக் கொடுப்பதால் பிராணனுக்கு பிராணன் என்றும், கண்ணுக்கு பார்க்கும் சக்தியைக் கொடுப்பதால் கண்ணுக்குக் கண் என்றும், அப்படியே காதுக்குக் காது, மனஸிற்கு மனஸ் என்றெல்லாம் சொல்லலாமென்று கேனோபநிஷத்தில் உள்ள

श्रोत्रस्य श्रोत्रं मनसो मनो यत् वाचो ह वाचं स उ प्राणस्य प्राणः ।
चक्षुषः चक्षुः अतिमुच्य धीराः प्रेत्यास्मात् लोकात् अमृता भवन्ति ॥

என்ற வாக்கியத்தையனுஸரித்து இங்கே சொல்கிறார்,

व्यापारं देहसंस्थः प्रतिवपुरखिलं पञ्चधा व्यात्मकोऽसौ
प्राणः सर्वेन्द्रियाणामधिपतिरनिशं सत्तया निर्विवादम् ।
यस्येत्थं चिद्घनस्य स्फुटमिह कुरुते सोऽस्मि सर्वस्य साक्षी
प्राणस्य प्राण एषोऽप्यखिलतनुभृतां चक्षुषश्चक्षुरेषः ॥ ८९ ॥

पञ्च-वृत्ति-आत्मकः-(பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்கிற) ஐந்து விருத்திகளின் ஸ்வரூபமாய் सर्व इन्द्रियाणां-எல்லா இந்திரியங்களுக்கும் अधिपतिः- யஜமானனாக प्रतिवपुः-ஒவ்வொரு சரீரத்திலும் देह-संस्थः-சரீரத்திலேயே இருந்துகொண்டிருக்கும் असौ-இந்த प्राणः-பிராணன் यस्य-எந்த चित्-घनस्य-சைதன்யமே ஸ்வரூபமாயுள்ள ஆத்மாவினுடைய सत्तया-இருப்பினால் अनिशं-எப்பொழுதும் निर्विबारं-தடையன்னியில் स्फुटं-நன்றாக इह-இங்கே अखिलं-எல்லா व्यापारं-வியாபாரத்தையும் इत्थं-இவ்விதம் कुरुते-செய்கிறதோ, सः-அந்த सर्वस्य-எல்லாவற்றிற்கும் साक्षी-ஸாக்ஷியாக अस्मि-இருக்கிறேன். एषः-இவர் अखिल-तनुभृतां-எல்லா-பிராணிகளுக்கும் अपि-கூட प्राणस्य-பிராணனுக்கு प्राणः பிராணன். एषः-இவர் चक्षुषः-கண்ணுக்கு चक्षुः-கண்.

பிரதிசரீரம் தனித்தனியாக எடுத்துக்கொண்டால் அந்த சைதன்யம் பிரத்யகாத்மா எனப்படும். ஸமஷ்டியாக ஜகத் பூராவையும் எடுத்துக்கொண்டால அதே சைதன்யம் அந்தர்யாமீ எனப்படும். வியஷ்டி ஸமஷ்டியென்ற பேதம் உபாதி பேதத்தினால் ஏற்படுகிறதைத் தவிர ஸ்வரூபத்தில் சைதன்யம் ஒன்றேதான்.

(90)

முன் 56, 57 சுலோகங்களில் ஸத்யத்திற்கு ஸத்யம் என்றும், இங்கே பிராணனுக்கு பிராணன், கண்ணுக்கு கண், என்றும் சொன்னது போலவே, ஆத்மா ஜ்யோதிஸ்களுக்கும் ஜ்யோதிஸ் என்று ஒருவாறு 87வது சுலோகத்தில் சொன்னதை இன்னும விஸ்தரித்துக்காட்டி, மற்ற ஜ்யோதிஸ்களுக்கு ஆத்மாவைப் பிரகாசப்படுத்திக்காட்ட அவசியமுமில்லையென்றும் சக்தியும் கிடையாதென்றும் விளக்குகிறார். முண்டகோபநிஷத்தில் காணும்

तत् शुभ्रं ज्योतिषां ज्योतिः तत् यत् आत्मविदो विदुः ॥ II 2 (10)

என்ற வாக்கியத்தையும், முண்டகோபநிஷத்தில் II 2 (11), காடகோபநிஷத் V 15 ஆக இரண்டு இடத்திலும் காணும்

சு. 22.

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥

என்ற வாக்கியத்தையும், பகவத்கீதையிலுள்ள

यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ XV 12

न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः । ,, 6

என்ற வாக்கியங்களையும், ஸங்கிரஹித்து அடுத்த சுலோகத்தில் சொல்கிறார்.

यं भान्तं चिद्घनैकं क्षितिजलपवनादित्यचन्द्रादयो ये
भासा तस्यैव चानु प्रविरलगतयो भान्ति तस्मिन्वसन्ति ।
विद्युत्पुञ्जोऽग्निसंघोऽप्युडुगणविततिर्भासयेत्किं परेशं
ज्योतिः शान्तं ह्यनन्तं कविमजममरं शाश्वतं जन्मशून्यम् ॥

क्षिति-जल-पवन-आदित्य-चन्द्र-आदयः-பூமி-ஜலம்-வாயு-ஸூர்யன்-சந்திரன்-முதலானவை प्रविरल-गतयः-தனித் தனி-போக்குள்ளவைகளாக இருந்து கொண்டிருக்கும் ये-எவைகளோ (அவைகள்) भान्तं-பிரகாசித்துக் கொண்டிருக்கிற चिद्घन-एकं-சைதன்யஸ்வரூபராய்-ஒன்றுயிருக்கிற यं-எவரை अनु-ஒட்டி, तस्य-அவருடைய भासा एव च-பிரகாசத்தினாலேயே भान्ति-பிரகாசிக்கின்றனவோ, तस्मिन्-அவரிருப்பதினாலேயே वसन्ति-இருக்கின்றனவோ, विद्युत्-पुञ्जः-மின்னல்-கூட்டம், अग्नि-सङ्घः-அக்னி-ஸமூஹம், उडु-गण-विततिः-நக்ஷத்திர-கூட்டங்களின்-வரிசை अपि-இவையெல்லாமும் ज्योतिः-ஜ்யோதிஸ் ஸ்வரூபராய் शान्तं-சாந்தராய் अनन्तं-எல்லையற்றவராய் कविं-ஞானஸ்வரூபராய் अजं-பிறக்காதவராய் अमरं-சாவு அற்றவராய் शाश्वतं-எப்பொழுதும் இருப்பவராய் जन्म-शून्यं-ஜன்மமே-கிடையாதவராய் இருக்கும் परेशं-மேலான ஆளுபவரை (பரமாத்மாவை) किं भासयेत् हि-பிரகாசப்படுத்த முடியுமா?

ஸாதாரணமாகவே ஒரு தீபம் பிரகாசிப்பதற்கு இன்னொரு தீபத்தின் பிரகாசத்தை அபேக்ஷிப்பது ஸாத்தியமுமில்லை, அவசியமும் இல்லை. அப்படியிருக்க தீபத்தின் பிரகாசம் கண்ணாடியில் விழுந்து அதற்குள் இந்த தீபத்தின் பிரகாசத்தைக் கொண்டு பிரகாசிக்கும் பிரதிபிம்ப தீபத்தின் பிரகாசத்தைக் கொண்டு வாஸ்தவமான தீபத்தை பிரகாசப்படுத்துவது எப்படி ஸாத்தியம்? அதற்கு அவசியந்தான் என்ன? அதே போல, உலகத்தில் மற்ற பதார்த்தங்களைத் தெரியும்படி செய்கிறதாகத் தோன்றுகிற ஸௌர்யாதிகள்கூட எந்த ஆத்ம ஜ்யோதிஸ்ஸிலிருந்து பிரகாசத்தை இரவல் வாங்கிக் கொண்டு பிரகாசிக்கின்றனவோ, அவைகள் தங்களுக்கும் பிரகாசத்தை இரவல் கொடுத்த ஆத்மாவை எப்படி பிரகாசப்படுத்த முடியும்? என்று தாத்பர்யம்.

தவிரவும், இவைகளுடைய பிரகாசமோ, செய்கையோ, இருப்போ, எல்லாம் ஆத்மாவிற்கு உள்பட்டு பராதீனமாயிருப்பதுடன், இவை யாவும் ஒரு காலத்தில் உண்டாகி, பலவித மாறுதல்களை அடைந்து, நாசத்தையடைய வேண்டியவைகள். ஆத்மாவோ நித்யர், ஸ்வயம், ஜ்யோதிஸ் ஸ்வரூபர்; அவருக்கு உத்பத்தியோ, மாறுதலோ, நாசமோ கிடையாது; சுத்த சைதன்ய ஸ்வரூபர். அவரே எல்லாவற்றையும் அறிகிறவர்; இவைகள் எல்லாம் அறியப்படுபவைகள் அறியப்படும் பதார்த்தம் அறிகிறவனை அறிய முடியுமா?

இதே விஷயம் பிருஹதாரண்யக உபநிஷத்திலும்

प्राणस्य प्राणं उत चक्षुषः चक्षुः। उत श्रोत्रस्य श्रोत्रं मनसो ये मनो विदुः, ते निचिक्युः ब्रह्म पुराणं अग्र्यम् ॥ IV 4 (18)

एक धैवानुद्रष्टव्यं एतत् अप्रमयं ध्रुवम् ।
विरजः पर आकाशात् अज आत्मा महान् ध्रुवः ॥ ,, ,, (20)

(91)

இதுவரை ஜகத்மித்யையென்றும், ஜீவன் ஸ்வரூபத்தில் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லையென்றும், அந்த பிரஹ்மம் ஒன்றுதான் வாஸ்தவமாக இருக்கிறது, அதுவே நித்யம், அதுவே ஞானஸ்வரூபம், அதுவே நிரதிசயமான ஆனந்த ஸ்வரூபம், ஜகத்தில் எதெல்லாம் இருப்பதாயும், பிரகாசிப்பு

தாயும், ஸ்வரூபமாயுந் தோன்றுகிறதோ அவையெல்லாம் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை. அவையாவும் பிரஹ்ம தத்வத்தை அறியாத காரணத்தினுல் தோன்றுபவைகளே தவிர வாஸ்தவமான பதார்த்தமல்லவென்றும் பலவிதமாய் ஆத்ம தத்வத்தை எடுத்துச் சொல்லிவிட்டு. இனி அந்த ஆத்ம தத்வத்தை அறிந்து ஸாக்ஷாத்காரம் செய்திருக்கும் ஞானியின் அனுபவத்தை வர்ணிக்கவாரம்பிக்கிருர். அந்த ஞானி பிராரப்த கர்ம சேஷத்தினுல் சரீரம் இருந்துவரும் வரை ஜீவன் முக்தன் என்றும், பிரார்ப்தம் முடிந்து ஸகல உபாதிகளும் நிவிருத்தியான பிறகு விதேஹ முக்தன் என்றும், வியவஹரிக்கப்படுவான் என்பதை முன்னமேயே 42-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிருர். இப்போது அவ்விருவர் நிலையையும் தனித்தனியே எடுத்துச் சொல்கிருர்

तद्ब्रह्मैवाहमस्मीत्यनुभव उदितो यस्य कस्यापि चेद्वै
पुंसः श्रीसद्गुरूणामतुलितकरुणापूर्णपीयूषदृष्ट्या ।
जीवन्मुक्तः स एव भ्रमविधुरमनाः निर्गतेऽनाद्युपाधौ
नित्यानन्दैकधाम प्रविशति परमं नष्टसंदेहवृत्तिः ॥ ९१ ॥

यस्य कस्य अपि-யாராவது ஒரு पुंसः-மனிதனுக்கு तत्-அந்த ब्रह्मैव பிரஹ்மமாகவே अहं-நான் अस्मि-இருக்கிறேன் इति-என்று अनुभवः-அனுபவமானது, श्री-सद्गुरूणां-மஹிமை பொருந்திய-ஸத்குருவினுடைய अतुलित-करुणा-पूर्ण-पीयूष-दृष्ट्या-ஒப்பற்ற கருணை-நிறைந்த-அமிருதமயமான-கடாக்ஷத்தால், उदितः चेत् वै-ஏற்படுமேயாஞல், भ्रम-विधुर-मनाः-பிராந்தி-விலகிய-அந்தக்கரணத்தையுடைய सः एव-அவன்தான் जीवन्मुक्तः-ஜீவன் முக்தன். अनादि-उपाधौ-அநாதி காலம் தொட்டு வந்திருக்கும் உபாதி निर्गते-போய்விட்டதேயாஞல் नष्ट-संदेह-वृत्तिः-எவ்வித ஸந்தேஹ விருத்தியும் நாசத்தையடைந்தவராக परमं-உத்தமமான नित्य-आनन्द-एक-धाम-நித்யமான-ஆனந்தத்திற்கு-ஒரே-இருப்பிடத்தை (மோக்ஷத்தை) प्रविशति-நுழைந்து விடுகிருர் (திரும்பி வருவதில்லாத நிலையை அடைகிருர்).

ईक्ष्या குருநாதருடைய கருணை கடாக்ஷத்தால் என்று மேலே அர்த்தம் சொல்லப்பட்டது. அவருடைய பரம கருணையால் கிடைத்த உபதேசத்தை சிரத்தையுடன் கிரஹித்து சிரவண மனன நிதித்யாஸனாதிகள் செய்து ஆத்ம தத்வத்தை ஸாக்ஷாத்காரம் செய்யும் வரை அக்கருணை கூடவேயிருந்து உதவ வேண்டுமென்று கருத்து.

अनाद्युपाधौ அநாதியான உபாதியாகிய அவித்யை ஞான மேற்பட்டவுடனேயே நிவர்த்தியாகிவிடும். ஆனாலும் பிராரப்த கர்ம சேஷம் இருக்கும் வரை அதினால் ஏற்பட்ட சரீரம் இருந்தே வருமாதலால், அவ்வுபாதி பூராவும் பாக்கியன்னியில் நிவிருத்தியாவது சரீரம் விலகும்போது என்ற அபிப்பிராயம்.

नष्टसंदेहवृत्ति: ஸந்தேஹ விருத்தி விலகினவனாய் என்பது சரீரம் போவதற்கு முன்னால் இருந்த ஜீவன் முக்தனையேதான் குறிக்கிறது. விதேஹ முக்தியில் தான் அவ்விதம் ஏற்படுகிறதென்ற தாத்பர்யம் கிடையாது. ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட உடனேயே ஸர்வ ஸம்சயங்களும் நிவர்த்தியாகிவிடுகின்றன. இது முண்டகோபநிஷத்தில்

भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥ II 2 (9)

என்று வியக்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது. பின்னால் 99-வது சுலோகத்தை பார்க்கவும்.

(92)

ஜீவன் முக்தி தசையை அடைந்த ஞானியினுடைய மனோநிலை எப்படியிருக்கும் என்பதை விஸ்தாரமாக பத்து சுலோகங்களில் வர்ணிக்கிறார். அந்த நிலையடைய வேண்டுமென்று பிரவிருத்தி செய்யும் ஸாதகன் அந்த சுலோகங்களில் கண்டபடி அனுஸந்தானம் செய்து அப்யாஸம் செய்து செய்து அந்நிலை அவனுடைய ஸ்வரூபத்துடன் சேர்ந்துவிட வேண்டுமென்று தாத்பர்யம்—

नो देहो नेन्द्रियाणि क्षरमतिचपलं नो मनो नैव बुद्धिः
प्राणो नैवाहमस्मीत्यखिलजडमिदं वस्तुजातं कथं स्याम् ।
नाहङ्कारो न दारा गृहसुतसुजनक्षेत्रवित्तादि दूरं
साक्षी चित्प्रत्यगात्मा निखिलजगदधिष्ठानभूतः शिवोऽहम् ॥

अहं - நான் देहः-சரீரம் नो-அல்ல; इन्द्रियाणि- இந்திரியங்கள் न-அல்ல; क्षरं- நாசமடையக்கூடியதாயும் अति-चपलं-வெகு சஞ்சலமாயுமுள்ள मनः- மனஸ் नो-அல்ல; बुद्धिः - புத்தியும் न एव - இல்லவேயில்லை; प्राणः - பிராணனுகவும் न एव अस्मि-இல்லவேயில்லை; इति- என்றிருப்பதினுல் इदं-இந்த अखिल-जडं-எல்லா ஜடமான वस्तु-जातं-பதார்த்தங்களின்-கூட்டமாக कथं-எப்படி स्याम्- நான் இருக்கமுடியும்? अहङ्कारः-அஹங்காரமும் न-(நான்) இல்லை. दाराः-மனைவிகளும் न-(எனக்கு) இல்லை. गृह- सुत - सुजन - क्षेत्र - वित्त - आदि - வீடு-புத்திரன்-வேண்டிய ஜனங்கள்-நிலம்-சொத்து-முதலியது दूरं-தூரவே யிருக்கிறது (ஆத்மாவாகவே முடியாது). साक्षी-எல்லா வற்றையும் பார்த்துக்கொண்டிருப்பவராய் चित्-சைதன்ய ஸ்வரூபராய் प्रत्यक्-आत्मा - உள்ளேயுள்ள - ஆத்மாவாய், निखिल - जगत् - अधिष्ठान-भूतः - எல்லா-ஜகத்திற்கும்- அதிஷ்டானமாய்-இருப்பவராய் शिवः-மங்கள ஸ்வரூபராய் இருப்பவரே अहं-நான்.

ஆத்ம ஸ்வரூபத்தையறியாததினுல் எதுவெல்லாம் 'நான்' என்றும் எதுவெல்லாம் "என்னுடையது" என்றும் நினைக்கப் படுகிறதோ, அவையாதொன்றும் உண்மையில் ஆத்மா ஆகாது. அப்படியே மற்ற ஜடப்பொருளும் ஆத்மாவல்ல அவைகளை பார்த்துக்கொண்டு, அவை தோன்றுவதற்கெல்லாம் அதிஷ்டானமாய் இருந்துவரும் சைதன்யந்தான் ஆத்மா. அவை யாவும் ஜடமாயிருப்பதுடன் நாசத்தையடையக் கூடியவை யாகவும் பிரதிக்ஷணம் மாறுதலடையக் கூடியவையாகவும் இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் உள்ளே அதிஷ்டான மாயிருக்கும் ஆத்மா ஒருவர்தான் எப்பொழுதும் இருப்பவராயும் எவ்வித மாறுதலேயுமடையாதவராயுமிருப்பவர் அவர்தான் வாஸ்தவமான "நான்"

क्षरं अतिचपलं (நாசமடையக்கூடியதாயும் வெகு சஞ்சலம் உள்ளதாயும்)-என்பது மனஸ் என்ற வார்த்தைக்கு முன்னு லேயே போடப்பட்டிருந்தபோதிலும், அந்த இரு லக்ஷணங் களும் தேஹம் முதலிய எல்லாவற்றிற்குமே பொருந்துமானதினுல்,

பின்னால் வரும் इदं वस्तुजातं (இந்த பதார்த்தக்கூட்டம்) என்பதற்கும் விசேஷணமாக எடுத்துக்கொள்ளலாம்.

(93)

தோற்றமாயுள்ள ஜகத்தை அதிஷ்டானமான ஆத்மாவில் எப்படி ஒடுங்கச்செய்வது என்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார். பலவித வர்ணங்களாகத் தோன்றும் ரூபம் எல்லாம பலவிதமில்லாத ஒரே கண்ணில் அடங்குவதில்லையா? கண்ணைத் திறந்தால் பலவித ரூபங்கள் தெரியலாம்; ஆனால் எல்லாம் "ரூபம்" என்ற ஒரு வார்த்தையில் அடங்கக்கூடியவைகளே, கண்ணால் பார்ப்பது ரூபம், மூக்கால் நுகர்வது கந்தம், காதால் கேட்பது சப்தம், நாக்கால் அறிவது ரஸம், த்வக்கால் அறிவது ஸ்பர்சம்; இவையும் பலவிதமாயிருந்தபோதிலும் இவையெல்லாவற்றையும் அறியும் மனஸ் ஒன்றுதானே; எல்லாவற்றிற்கும் சேர்த்து "உணர்ச்சி" என்று ஒரே வார்த்தை போதுமானதல்லவா? அப்படியே காமம், கோபம், லோபம், முதலான பலவித உணர்ச்சிகள் இருந்தபோதிலும், அவைகள் எல்லாவற்றையும் சேர்த்து ஒன்றாகவே "அறிவு" என்று சொல்லிவிடலாமல்லவா? அந்த அறிவையே ஸ்வரூபமாய் உடையது ஆத்மா. அவர் ஒரு காலத்திலும் வேறு எதினாலும் அறியப்படமாட்டார். அவருடைய பிரகாசம் பரவுகிறதினால் தான் எல்லா பதார்த்தங்களும் அறியப்பட்டதாக ஆகின்றன. என்கிறார்.

दृश्यं यद्रूपमेतद्भवति च विशदं नीलपीताद्यनेकं
सर्वस्यैतस्य दृग्वै स्फुरदनुभवतो लोचनं चैकरूपम् ।
तद्दृश्यं मानसं दृक्परिणतविषयाकारधीवृत्तयोऽपि
दृश्या दृग्रूप एव प्रभुरिह स तथा दृश्यते नैव साक्षी ॥ ९३ ॥

विशदं-தெளிவாக दृश्यं-பார்க்கப்படுகிற नील-पीत-आदि-நீலம்-மஞ்சள்-முதலான अनेकं-பலவிதமான यत्-எந்த एतत्-இந்த रूपं-ரூபம் भवति च-இருக்கிறதோ एतस्य-இந்த सर्वस्य எல்லாவற்றையும் दृक्-பார்க்கிறதாயிருக்கும் लोचनं च-கண்ணோ स्फुरदनुभवतः-ஸ்பஷ்டமான அனுபவத்தால் एक-रूपं-ஒரே-தன்மையுடனிருக்கிறது (தெரிகிறது) वै-என்பது பிரஸித்தம்.

तत्-அந்த கண்ணும் दृश्यं-பார்க்கப்படுவதுதான்; दृक्-(அதையுத்தேசித்து) பார்க்கிறதாயிருப்பது मानसं-அந்தக்கரணம். परिणत-विषयाकार-धी-वृत्तयः-விஷயங்களுடைய ரூபத்தில் மாறுதலையடைந்திருக்கிற-அந்தக்கரணத்தின்-விருத்திகள் अपि-கூட दृश्याः-பார்க்கப்படுபவைதான். इह-இங்கு साक्षी-நேரில் பார்த்துக்கொண்டிருக்கிற प्रभुः-(கண் முதலியவைகளின்) யஜமானனான सः-அந்த ஆத்மா दृगेव-எப்பொழுதும் பார்க்கிற ஸ்வபாவமுள்ளவர்தான் तथा-(மற்றவைகளைப்போல) அவ்விதம் न एव दृश्यते-பார்க்கப்படுகிறதேயில்லை.

ஆத்மாவிற்குக் கீழ்பட்ட தத்வங்கள் தங்களுக்கு மேலுள்ள தத்வங்களை யுத்தேசித்து பார்க்கப்படுபவனவாகவும் தங்களுக்கு கீழ்பட்ட தத்வங்களை யுத்தேசித்து பார்க்கிறவையாகவும் இருந்துவருகின்றன. வெளியிலுள்ள ரூபம் கண்ணுக்கு திருச்யம், கண் மனஸிற்கு திருச்யம், மனஸ் ஆத்மாவிற்கு திருச்யம்; ரூபத்தை யுத்தேசித்து கண் திருக்கண்ணை யுத்தேசித்து மனஸ் திருக், மனஸை உத்தேசித்து ஆத்மா திருக் இவ்விதம் திருக்காக இருக்கும் ஆத்மா மாத்திரம் எப்பொழுதும் யாருக்கும திருச்யமாவது கிடையாது; அது எப்பொழுதும் திருக்தான். பார்ப்பதற்கு விஷயமிருந்தால் ஆத்மா த்ரஷ்டா (பார்க்கிறவன்) என்று சொல்லப்படும்; பார்ப்பதற்கு யாதொரு விஷயமுமில்லாமல் போனாலும் அவருடைய பார்வை இருந்தே தீரும் அப்பார்வையுடையவரே திருக் எனப்படுகிறார். இதிலிருந்து ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும் ஆத்மாவின ஸ்வரூபத்தில சேர்ந்ததில்லையென்பது தெளிவாய் தெரிய வரும். அனாத்ம பதார்த்தங்களிலிருந்து அவரை பிரித்து அறிவதற்காக அவரை ஸாக்ஷியென்று வியவஹரிக்க வேண்டியிருக்கிறதே தவிர அது ஸ்வரூப லக்ஷணமாகாது. பார்க்கப்படுபவை பலவாக இருந்தாலும் பார்க்கிறவன் ஒருவன் தான் என்றபடி எல்லாவற்றையும் பார்க்கிற ஆத்மா ஒருவன் என்பதும் தொனிக்கிறது.

(94)

இவ்வித அனுபவம் ஏற்படவேண்டுமானால், 42-வது சுலோகத்திலும் 91-வது சுலோகத்திலும் சொல்லியபடி குருநாதருடைய கருணை கடாக்ஷமேற்பட்டு அவரால்

உபதேசிக்கப்பட்ட தத்வத்தை அனுஸந்தானம் செய்து ஸாக்ஷாத்கரிக்க வேண்டுமென்பதை மறுபடியும் திருஷ்டாந்தம் சொல்லி ஞாபகப்படுத்துகிறார்,

रज्ज्वज्ञानाद्भुजङ्गस्तदुपरि सहसा भाति मन्दान्धकारे
स्वात्माज्ञानात्तथाऽसौ भृशमसुखमभूदात्मनो जीवभावः ।
आप्तोक्त्याऽहिभ्रमान्ते स च खलु विदिता रज्जुरेका तथाऽहं
कूटस्थो नैव जीवो निजगुरुवचसा साक्षिभूतः शिवोऽहम् ॥ ९४ ॥

मन्द-अन्धकारे-லேசான-இருட்டில் रज्जु-अज्ञानात्-கயிறு-என்ற அறிவு இல்லாததினால் तत्-उपरि-அதன்-மேல் सहसा-உடனே भुजङ्गः-பாம்பு भाति-தோன்றுகிறது. तथा-அவ்விதமே, स्व-आत्म-अज्ञानात्-தன்னுடைய-ஸ்வரூப விஷயமான-அறியாமையினால் आत्मनः-ஆத்மாவிற்கு असौ-இந்த जीव-भावः-ஜீவனாயிருக்கும்-தன்மை, भृशं-வெகு असुखं-துக்கத்தைககொடுக்கக்கூடிய முறையில், अभूत्-ஏற்பட்டிருக்கிறது. आप्त-उक्त्या (மிகவும் ஹிதத்தைக் கோருகிற) நணபனுடைய-வார்த்தையினால் अहि-भ्रम-अन्ते-பாமபு-என்கிற பிராந்தி-போய்விடுமபோது स च-அந்த பாமபே रज्जुः-கயிறு एका-ஒன்றுதான் என்று विदिता-அறியப்பட்டுவிடுகிறது खलु-அல்லவா? तथा-அவ்விதமே, निज-गुरु-वचसा-தன-குருநாதரின்-உபதேசத்தினால் अहं-நான் कूटस्थः-எவ்வித விகாரமுமற்ற, साक्षि-भूतः-ஸாக்ஷியாயிருக்கும் शिवः-மங்களஸ்வரூபியான ஆத்மாதான் न एव जीवः-ஜீவனேயில்லை;

நண்பனுடைய வார்த்தையால் பாம்பு என்ற பிராந்தி விலகலாம. ஆனால் ஆதமஞானியான குருவின் உபதேசத்தால் தான அநாத்ம பிராந்தி நீங்கும. எப்படி பிராந்தி நிவிருத்தியாகி ஸர்ப்பம மறைந்தவுடன் ஸர்ப்பமாய் தோன்றினது வாஸதவத்தில கயிற்றைததவிர வேறிலலையென்று தெரிந்துவிடுகிறதோ, அப்படியே அதிஷ்டானமான ஆத்ம தத்வம் தெரிந்தவுடன் அனாத்மாவாக தோன்றின. ஜகத மறைவதுடன் அதுவும் ஆதமாவைத் தவிர வேறில்லையென்றும் தெரிந்துவிடும். அது

ஆத்மாவைத் தவிர வேறு என்று தோன்றிக்கொண்டிருந்த ஸமயத்தில் தான் ஆத்மாவிற்கு ஜீவத்தன்மையும் வேருகத் தோன்றின ஜகத்திஞல் துக்க-அனுபவமும் ஏற்படுகின்றன. ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் ஏற்படும்போது இரண்டாவது பதார்த்தமேயில்லாததிஞல் ஜீவத்தன்மைக்கோ, துக்கத்திற்கோ நிமித்தமே கிடையாது. இரண்டாவது பதார்த்தம் இல்லாத காரணத்திஞலேயே ஆத்மாவிற்கு ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும் நிவிருத்தியாகிவிடும். அறிகிறவன் என்ற நிலே போய் அறிவு என்ற நிலே மாத்திரம் மிஞ்சும். அப்பொழுது எவ்வித விகாரத்திற்கும் இடமில்லாததிஞல் அந்த நிலேயை "கூடஸ்த" நிலேயென்று சொல்வார்கள்.

(95)

அந்த நிலேயை எப்படி அறிகிறதென்ருல், அறியப்படும் பதார்த்தங்களே விலக்கி விலக்கிப் பார்த்தால் அறியலாம். ஆஞல் உலகத்தில் ஏதேனும் அறியவேண்டுமாஞல் ஸூர்யன் முதலான பிரகாசங்களின் ஸஹாயம் வேண்டியிருக்கிறதே, அப்படியே ஆத்மாவை அறிவதற்கு வேறு பிரகாசம் தேவைப் படுமா? தேவைப்பட்டால் அந்த பிரகாசம் எது? என்று கேட்கத் தோன்றும். ஜடமாயிருக்கும் ஒரு பதார்த்தத்தை பார்க்க முடியாமல் இருட்டு சூழ்ந்துகொண்டிருந்தால், அதைப் பார்ப்பதற்கு வெளிச்சம் வேண்டும். ஜ்வலித்துக்கொண்டிருக்கும் தீபத்தைப் பார்ப்பதற்கு வேறு வெளிச்சம் தேவையில்லே. ஆத்மா ஸ்வயம் பிரகாசமாயிருப்பதால் அதைப் பார்க்க வேறு எவ்வித பிரகாசமும் தேவையில்லேயென்பதை முன்ஞல் 87-வது சுலோகத்தில் காட்டப்பட்டது. இப்பொழுது ஆத்மா ஸ்வயம் ஜ்யோதிஸ்தான் என்று எப்படி அறிகிறதென்று காட்டுகிருர்.

இவ்விஷயம் பிரஹதாரண்யக உபநிஷத்தில் ஜனக மஹா ராஜனுக்கும் யாஞ்யவல்க்ய மஹர்ஷிக்கும் நடந்த ஸம்வாத ரூபமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

याज्ञवल्क्य, किंज्योतिरयं पुरुषः ? आदित्य ज्योतिः, सम्राट् ... ॥ IV 3(2)

अस्तमित आदित्ये, याज्ञवल्क्य, किंज्योतिरेवायं पुरुषः ? चन्द्रमा एवास्य ज्योतिर्भवति ॥ ... ,, ,, (3)

अस्तमित आदित्ये, याज्ञवल्क्य, चन्द्रमसि अस्तमिते, किंज्योतिरेवायं पुरुषः ? अग्निरेवास्य ज्योतिर्भवति ... ॥ ,, ,, (4)

अस्तमित आदित्ये, याज्ञवल्क्य, चन्द्रमसि अस्तमिते, शान्ते अग्नौ, किंज्योतिरेवायं पुरुषः ? वाक् एवास्य ज्योतिर्भवति ॥ ... ,, ,, (5)

अस्तमित आदित्ये, याज्ञवल्क्य, चन्द्रमसि अस्तमिते, शान्ते अग्नौ, शान्तायां वाचि, किंज्योतिरेवायं पुरुषः ? आत्मैव अस्य ज्योतिर्भवति ... ॥ ,, ,, (6)

कतमः आत्मा ? योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः ... ॥ ,, ,, (7)

இதையே தெளிவுபடுத்தி ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிறார்

कि ज्योतिस्ते वदस्वाह्नि रविरिह मे चन्द्रदीपादि रात्रौ
स्यादेवं भानुदीपादिकपरिकलने किं तव ज्योतिरस्ति ।
चक्षुस्तन्मीलने किं भवति च सुतरां धीर्धियः किं प्रकाशे
तत्रैवाहं ततस्त्वं तदसि परमकं ज्योतिरस्मि प्रभोऽहम् ॥ ९५ ॥

குரு: ते-உனக்கு ज्योतिः-ஜ்யோதிஸ் (பிரகாசம், அறிவு உண்டுபண்ணுவது) किं-எது? वदस्व-சொல்லு.

சிஷ்யன்: इह-இங்கே मे-எனக்கு अह्नि-பகலில் रविः-ஸூர்யன் (ஜ்யோதிஸ்); रात्रौ-இரவில் चन्द्र दीप-आदि - சந்திரன் - தீபம் - முதலியன (ஜ்யோதிஸ்)

குரு: स्यात् एवं-இப்படி இருக்கலாம் भानु-दीपादिक-परिकलने-ஸூர்யன்-தீபம் - முதலானதை - அறிவதில் तव-உனக்கு किं-எந்த ज्योतिः ஜ்யோதிஸ் अस्ति-இருக்கிறது?

சிஷ்யன் : चक्षुः-கண்

குரு : तत्-मीलने च-கண்ணை மூடிக்கொண்டால் किं-எது (ஜ்யோதிஸாக) भवति-இருக்கிறது?

சிஷ்யன் : सुतरां-நன்ருக धीः-புத்தி

குரு : धियः-புத்தியை प्रकाशे-பிரகாசப்படுத்துவதில் (ஜ்யோதிஸ் எது?)

சிஷ்யன் : तत्र-அங்கே अहं एव-நான்தான்

குரு : ततः-ஆகையினுல் त्वं-நீ तत्-அந்த परमकं-மிகவும் மேலான ज्योतिः - ஜ்யோதிஸ்ஸாக असि- இருக்கிருய் (அல்லவா?)

சிஷ்யன் : प्रभो-ஹே பிரபோ, अहं-நான் अस्मि-(அப்படித் தான் மேலான ஜ்யோதிஸ்ஸாக) இருக்கிறேன்.

வெளியிலுள்ள பதார்த்தங்களைக்காட்டிக் கொடுப்பதற்கு ஸூர்ய சந்திராதி வெளிச்சம் வேண்டியிருக்கிறது. ஆனுல் ஸூர்ய சந்திராதிகள் இருக்கிறதென்று காட்டிக்கொடுக்க, கண் தேவைப்படுகிறது. கண்ணை மூடிக்கொண்டு ஆலோசனை செய்யும் போது அப்பொழுது மானஸிகமாக முன் தோன்றும் பதார்த்தங்களை காட்டிக்கொடுப்பது புத்திதான்; மேலும் கண் இப்பொழுது நன்ருகத் தெரியவில்லை, இப்பொழுது நன்ருகத் தெரிகிறது, என்று காட்டுவதும் புத்தியேதான். அந்த புத்தியில் இப்பொழுது காமம் ஏற்பட்டிருக்கிறது, கோபம் ஏற்பட்டிருக்கிறது, இப்பொழுது புத்தியில் ஓட்டமில்லை, என்பதுபோலுள்ள பலவித மாறுபாடுகளையும் காட்டிக்கொடுப்பது ஆத்மாவின் ஜ்யோதிஸ்ஸைத் தவிர வேறு கிடையாது. ஆத்மா ஸ்வயம் பிரகாசமாயிருப்பதால் அதைக்காட்டிக்கொடுக்க வேறு ஜ்யோதிஸ் தேவையில்லை. ஆகையால் அதுவே மேலான ஜ்யோதிஸ். பதார்த்தங்களை காட்டிக்கொடுக்கும் ஸூர்யன் முதலானவைகளையும், கண், புத்தி இவைகளையும் பிரகாசப் படுத்துவதினுல் ஆத்மா ஜ்யோதிஸ்களுக்கெல்லாம் ஜ்யோதிஸ் என்று சொல்லப்படுகிறது. தவிரவும் ஆத்மாவினுடைய ஸம்பந்தமில்லையானுல், புத்தி எதையும் காட்டிக்கொடுக்காது;

ஆத்மாவும் புத்தியும் ஸம்பந்தப்படவில்லையானால், கண்ணும் எதையும் காட்டிக்கொடுக்காது; அப்படியே ஆத்மா, புத்தி, கண் இவைகளில்லையானால் ஸூர்யன் முதலானவையும் எதையும் காட்டிக்கொடுக்க வல்லமையற்றவை. ஆகையால் எல்லாவித அறிவிற்கும் ஆத்மா வேண்டியிருப்பதால் அதுதான் வாஸ்தவத்தில் காட்டிக்கொடுக்கும் பிரகாசமான வஸ்து. (இதே விஷயம் 'ஏகச்லோகீ' என்கிற பிரகரணத்திலும் காண்கிறது) அதற்கு மேல் பிரகாசமாய் அதைக் காட்டிக்கொடுக்கக்கூடியதாய் எதுவும் கிடையாது என்பதை ஏற்கனவே 90-வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது இவ்வித உத்தமமான ஜ்யோதிஸ்ஸாகிய ஆத்ம தத்வத்தை ஸாக்ஷாத்காரம் செய்து அந்நிலையில் இருப்பவரே ஜீவன்முக்தர்.

(96)

அவ்வித ஜீவன்முக்தருக்கும் பிராரப்தசேஷம் இருக்கும் என்று முன் 42-வது சுலோகத்திலும், 91-வது சுலோகத்திலும் சொல்லியிருப்பதினால், அவருக்கும் உலகத் தோற்றமிருக்குமே? அப்படியானால் அதனால் ஏற்படக்கூடிய ஸுக துக்க அனுபவங்களும் ஏற்பட்டுவிடாதா? அவ்விதம் ஏற்பட்டால், ஆத்மானந்த அனுபவத்திற்கு இடைஞ்சல் ஏற்படாதா? என்று தோன்றலாம். பிராரப்தகர்மா சரீராதி உபாதிகளைச் சேர்ந்ததே தவிர, அவைகளில் 'தான்'' என்ற அபிமானமில்லாத ஆத்மாவை, பாதிக்காது; ஆகையால் பிரஹ்மானந்த அனுபவம் கொஞ்சமேனும் கெடாது என்கிறார்.

कञ्चित्कालं स्थितः कौ पुनरिह भजते नैव देहादिसङ्गं
यावत्प्रारब्धभोगं कथमपि स सुखं चेष्टतेऽसङ्गबुद्ध्या ।
निर्द्वन्द्वो नित्यशुद्धो विगलितममताहंकृतिर्नित्यतृप्तो
ब्रह्मानन्दस्वरूपः स्थिरमतिरचलो निर्गताशेषमोहः ॥ ९६ ॥

सः-அந்த ஞானியானவர் कञ्चित् कालं-சிலகாலம் (பிராரப்தம் நாசமாகும்வரை) कौ-உலகத்தில் स्थितः-இருந்து पुनः-மறுபடியும் इह-இங்கே देह-आदि-सङ्ग-தேஹம் முதலான-கூட்டத்தை न एव भजते-அடைவதே கிடையாது. यावत्-प्रारब्ध भोग-பிராரப்தபோகம் இருக்கும்

வரையில் (கூட) निर्द्वन्द्वः-ஸுக துக்கம், பசி, தாஹம், ஜராமரணம் முதலிய) த்வந்தங்கள் (இரட்டைகள்) அற்றவராய், नित्य-शुद्धः-எப்பொழுதும்—சுத்தராய், विगलितममता - अहं कृतिः - 'என்னுடையது' என்கிற எண்ணமோ 'நான் என்கிற' எண்ணமோ — பூராவும் நழுவினராய், नित्य तृप्तः - எப்பொழுதும் திருப்தியுள்ள வராய். ब्रह्मानन्द - स्वरूपः - பிரஹ்மானந்த - ஸ்வரூபராய், स्थिर-मतिः-ஸ்திரமான-புத்தியுள்ளவராய், अचलः - அசை வற்றவராய், निर्गत-अशेष-मोहः-பாக்கியன்னியில் மோஹம் விலகினவராய், இருந்துகொண்டு असङ्गबुद्धया - தான் பற்றுதலற்றவர் என்ற புத்தியுடன் कथं अपि-எப்படியோ सुखं-ஸுகமாக चेष्टते-சேஷ்டித்து வருவார்.

பிராரப்த கர்மா முடிந்த பிறகு வேறு சரீராதிகளை எடுக்க கர்மா இல்லாததினால் மறு ஜன்மமோ வேறு லோகம் போவதோ ஏற்படாது. இங்கே இருக்கும் வரையில்கூட சரீராதிகளை பாதிக்கக்கூடிய சீதோஷ்ணம் முதலிய த்வந்தங்கள், சரீராதி களிலிருந்து தான் வேறுபட்டவர் என்ற உணர்ச்சியுடைய ஞானியை பாதிக்க முடியாது. அவர் எப்பொழுதும் ஆனந்த ரூபியாகவே தான் இருந்து வருவார். ஆனால் பிராரப்த கர்மாவிற்கு அதீனமாக சரீராதிகள் இருப்பதால், அவர் மஹாராஜ விபவத்தோடுகூட இருப்பதாகவும் தோன்றலாம், தரித்திரனாகவும் தோன்றலாம், வித்வானாகவும் தோன்றலாம், பயித்தியம் மாதிரியும் தோன்றலாம், என்றெல்லாம் இருப்பதினால் कथमपि (எப்படியோ இருப்பார்) என்று சொல்லப்பட்டது. சரீராதிகளைச் சேர்ந்த ஸுகம், துக்கம், புண்யம், பாபம் முதலியவை அவரிடம் ஒட்டாததினால் அவர் எப்பொழுதும் திருப்தராய் ஆனந்த பரிதராய் இருந்து வருவார்.

(97)

பிராரப்த கர்மா ஏன் ஜீவன் முக்தரை பாதிப்பதில்லை யென்றால் அதற்கு காரணமாயிருக்கிற அவித்யை ஞானோதய ஸமயத்திலேயே விலகிவிட்டபடியால் அதினுடைய காரியங் களாகிய ஸுக துக்கங்களைக் கொண்டு அவரைப்பாதிக்க முடியாது என்கிறார். சரீராதிகளில் ஸுக துக்காதிகள் தோன்றி

ளுலும் அவைகளையும் ஸாக்ஷியாக மாத்திரம் பார்த்துக்கொண்டு அஸங்கராகவே ஞானி இருப்பார்.

जीवात्मब्रह्मभेदं दलयति सहसा यत्प्रकाशैकरूपं
विज्ञानं तच्च बुद्धौ समुदितमतुलं यस्य पुंसः पवित्रम् ।
माया तेनैव तस्य क्षयमुपगमिता संसृतेः कारणं या
नष्टा सा कार्यकर्त्री पुनरपि भविता नैव विज्ञानमात्रात् ॥ ९७ ॥

प्रकाश-एक-रूपं - பிரகாசம் ஒன்றையே ஸ்வரூபமாயுடைய यत्-எந்த विज्ञानं-அனுபவ ஞானம் जीवात्म-ब्रह्म-भेदं - ஜீவாத்மாவிற்கும - பிரஹ்மத்திற்கும்-உள்ள வேற்றுமையை सहसा - உடனே दलयति - பிளந்து விடுகிறதோ (போக்கடித்துவிடுகிறதோ), तत् च-அந்த अतुलं-நிகரற்ற पवित्रं பரிசுத்தமான (ஞானம்) यस्य-எந்த पुंसः-மனிதருடைய बुद्धौ புத்தியில் समुदितं-நன்கு உதயமாகிறதோ, तस्य-அவருக்கு तेन एव - அந்த ஞானத்தினலேயே, संसृतेः-ஸம்ஸாரத்திற்கு कारणं-காரணமான या-எந்த माया-மாயையானது क्षयं-நாசத்தை उपगमिता-அடையும்படி செய்விக்கப்பட்டுவிட்டதோ (அவ்விதம்) नष्टा-நாசத்தையடைந்துள்ள सा - அந்த மாயை विज्ञान-मात्रात्-அவ்வறிவு இருபபதினுலேயே पुनः अपि-மறுபடியும் कार्य - कर्त्री காரியத்தைசெய்ய யோக்கியதையுள்ளதாக न एव भविता-இருக்க முடியவே முடியாது.

ஜீவாத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் ஸ்வரூபத்தில் பேதம் இருப்பதாகத் தோன்றுவது மாயையினுலதான். அந்த தோற்றத்தை விலக்கக்கூடிய ஞானம், மாயையையும் நாசம் செய்தேயாகவேண்டும். ஒரு பதார்த்தம் இருக்கிறபோது எவ்வளவு பாதகமாயிருந்தாலும், நாசத்தையடைந்த பிறகு அது ஒன்றும் செய்யமுடியாது. அப்படியே இந்த மாயையையும் எவ்விதமாயும் பாதிககமுடியாது.

विज्ञानमात्रात् அவ்வறிவு ஏற்பட்டதினுலேயே नष्टा நாசமடைந்த மாயை—என்றும் அன்வயம் செய்து கொள்ளலாம்.

(98)

ஜகத்திற்கு பிரஹ்மத்தைவிட்டு தனியாக ஸத்தை கிடையாதென்ற ஞானம ஏற்பட்டுவிட்டால், ஜகத்தை பார்க்கும் போது ஜகத் என்ற எண்ணமே தோன்ருமல் பிரஹ்மாகாரமாகவே தோன்றும். ஜகத்தில் தோன்றும் நாம ரூபங்களுக்கு மதிப்பே கொடுக்கமாட்டார். தங்கக்காப்பை தங்கமாக மாத்திரம் பார்க்கும்போது காப்பு என்கிற பெயரும ரூபமும் எப்படி மதிப்பற்றுப் போய்விடுகிறதோ அதேபோல. இளநீர் சாப்பிடுவதற்காக வாங்கின தேங்காயிலுள்ள இளநீரை சாப்பிட்டுவிட்டு மேல் ஓட்டை விட்டெறிந்துவிடுவதுபோல என்று ஸ்ரீமத் ஆசார்யார் திருஷ்டாந்தம் கொடுக்கிருர்.

विश्वं नेति प्रमाणाद्विगलितजगदाकारभानस्त्यजेद्वै
पीत्वा यद्वत्फलाम्भस्त्यजति च सुतरां तत्फलं सौरभाढ्यम् ।
सम्यक्सच्चिद्घनैकामृतसुखकवलास्वादपूर्णो हृदाऽसौ
ज्ञात्वा निःसारमेवं जगदखिलमिदं स्वप्रभः शान्तचित्तः ॥ ९८ ॥

फल-अम्भः-பழத்திலுள்ள - ஜலத்தை पीत्वा - குடித்து விட்டு सौरभ - आढ्यं-நன்கு வாஸனையுடன் இருக்கும் (இருந்தாலும்) तत्-அந்த फलं-பழத்தை सुतरां-பூராவுமே त्यजति च-எறிந்துவிடுகிருன் என்பது यद्वत्-எப்படியோ, एवं-அதைப்போலவே विश्वं-ஜகத் न-வாஸ்தவமாயில்லை इति-என்று प्रमाणात्-பிரமாணத்திஞல் विगलित-जगत्-आकार-भानः-ஜகத்தின் உருவம் தோன்றுவது விலகினவராகவும், सम्यक्-நன்ருக सत्-चित्-घन-एक-अमृत - सुख - कवल आस्वाद:-पूर्णः-ஸத்ஸ்வருபமாகவும் - சித்ஸ்வருபமாகவேயிருக்கும்- அமிருதமான - ஸுகமாகிற- கவனத்தை - ருசிபார்த்து அதன் ரஸம்-நிறைந்தவராகவும், स्व-प्रभः- ஸ்வயம்-பிரகாசராகவும், शान्त-चित्तः - அடங்கின சித்தத்தை யுடையவராகவும் இருக்கும (ஞானியாகிய) असौ-இவர் हृदा-மனஸிஞல் इदं-இந்த अखिलं-எல்லா जगत्-ஜகத்தும் निःसारं-ஸாரமற்றது என்று ज्ञात्वा - அறிந்துகொண்டு (அதை) त्यजेत् वै-நிச்சயமாய் விட்டுவிடுவார்.

प्रमाणात् (பிரமாணத்தினுல்) -என்பது உபநிஷத்தில் கண்டபடி नेह नानाऽस्ति किंचन (பிரஹதாரண்யகம் IV 4-19) முதலான சப்தப்பிரமாணத்தை எடுத்துக்கொள்ளலாம். முன் 64, 65, 81, 82 சுலோகங்களில் விவரித்திருக்கும் யுக்திகளாகிய அனுமானப் பிரமாணத்தையும எடுத்துக்கொள்ளலாம். ஜீவன் முக்தருடைய அனுபவ ரூபமான பிரத்யக்ஷப் பிரமாணத்தையும் எடுத்துக்கொள்ளலாம்.

फलाम्म :— ரஸம் பிழிந்து எடுக்கக் கூடிய எந்தப் பழத்தையும் திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ளலாம். அவைகளில் உள்ள சக்கையான அம்சத்தை எறிந்துவிடுகிருேம். ரஸத்தை குடித்துவிட்டு பழத்தை எறிந்துவிடுவது என்பதினுல் தேங்காய்க்கு மிகவும் பொருத்தமாயிருக்குமென்று மேலே சொல்லப்பட்டது

(99)

பிராரப்த காலத்திலும் கர்மாக்கள் ஞானியை பாதிக்கிறது இல்லை என்பதற்கு பிரமாணமாக முண்டக உபநிஷத் வாக்கியத்தை சுலோக ரூபமாக உதாஹரிக்கிருர்.

भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥ II 2 (9)

क्षीयन्ते चास्य कर्माण्यपि खलु हृदयग्रन्थिरुद्भिद्यते वै
छिद्यन्ते संशया ये जनिमृतिफलदाः दृष्टमात्रे परेशे ।
तस्मिंश्चिन्मात्ररूपे गुणमलरहिते तत्त्वमस्यादिलक्ष्ये
कूटस्थे प्रत्यगात्मन्यखिलविधिमनोऽगोचरे ब्रह्मणीशे ॥ ९९ ॥

अस्य-இந்த ஞானியினுடைய कर्माणि-கர்மாக்கள் क्षीयन्ते च-நாசமடைந்துவிடுகின்றன; हृदय-ग्रन्थिः- ஹ்ருதய-முடிச்சு अपि-கூட उद्भिद्यते खलु वै- அறுந்துவிடுகிறது என்பது பிரஸித்தம்; जनि-मृति-फलदाः-ஜனனத்தையும்-மரணத்தையும்-பலனுகக்கொடுப்பதாக ये-எந்த संशयाः-ஸம்சயங்கள் உண்டோ அவைகள் छिद्यन्ते-போய் விடுகின்றன [எப்பொழுது?] तस्मिन्- அந்த चिन्मात्र-रूपे-

சுத்தசைதன்ய-ஸ்வரூபராய் गुण-मल-रहिते-எவ்வித குணமோ—தோஷமோ—இல்லாதவராய் तत्-त्वं-असि-आदि-लक्ष्ये-"தத் த்வம் அஸி" முதலான வாக்கியங்களால்—குறிக்கப்பட்டிருக்கிறவராய், कूटस्थे - கூடஸ்தராய் (எவ்வித மாறுதலுமற்றவராய்) प्रत्यक्-आत्मनि - உள்ளேயிருக்கும் - ஆத்மஸ்வரூபமாய் अखिल-विधि-मनो-अगोचरे-எல்லா—விதிகளுக்கும்-மனஸிற்கும்-விஷயமாகாதவராய், ब्रह्मणि-பிரஹ்மமாய், ईशे ஈசுவரராய், உள்ள परेशे-பரமாத்மாவானவர் दृष्टमात्रे-பார்க்கப்பட்டவுடனே.

कर्माणि கர்மாக்கள்—என்பதினுல் ஸஞ்சிதம், ஆகாமி, பிராரப்தம் என்ற மூன்றுவித கர்மாக்களையும் கிரஹித்துக் கொள்ளவேண்டும். பிராரப்த கர்மா வெளியிலிருந்து பார்ப்பவர்களுடைய திருஷ்டியில் தோன்றினுலும் ஞானி அஸங்கராய் இருப்பதால் அவரைப் பாதிக்காது என்று முன் சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

हृदय-ग्रन्थिः (ஹ்ருதய—முடிச்சு) — ஆத்மாவையும் அந்த:கரணத்தையும் ஒன்ருகச் செய்திருக்கும் அத்யாஸம் என்று கருத்து.

गुणमलरहिते (குணமும் மலரும் அற்ற)—சுத்த சைதன்ய ஸ்வரூபம் என்பதால் நிர்குணமாய் நிர்மலமாய்த்தான் இருக்கும்.

तत्त्वमस्यादिलक्ष्ये மஹாவாக்கியங்களின் பொருள் என்பதும் லக்ஷணுவிருத்தியினுல்தான்; எவ்வித வார்த்தைகளாலும் நேரில் பிரதிவாதனம் பண்ணமுடியாதது.

अखिलविधिमनोऽगोचरे— வார்த்தைக்கு விஷயமாகாதது போல மனஸினுலும் அறியமுடியாதது. வேதங்களில் பலவித் கர்மாக்கள் விதிக்கப்பட்டிருக்கின்றனவேயென்ருல், அவையெல்லாம் உபாதியுடன் கலந்திருக்கும் ஆத்மாவிற்கு விதிக்கப்பட்டவைகளேதவிர, சுத்த சைதன்யரூபமான ஆத்மாவிடத்தில் அவ்விதிகள் பிரயோஜனப்படமாட்டா.

(100)

இதுவரை பலவிதமாக எடுத்துச்சொல்லிவந்த ஸம்ஸாரத்தின் ஸ்வருபத்தையும் காரணத்தையும் அதினால் ஏற்படும் ஆபத்துக்களையும் அதை விலக்கிவிடுவதற்குள்ள ஸாதனத்தையும் ஒருங்கே சேர்த்து ஸம்ஸாரத்தையே ஒரு விஷவிருக்ஷமாக வர்ணிக்கிருர். காடகோபநிஷத்தில்

ऊर्ध्वमूलो अवाक् छाखः एषोऽश्वत्थः सनातनः । VI 1

என்றும், பகவத்கீதையில்

ऊर्ध्वमूलमधः शाखं अश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ XV 1
अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखाः गुणप्रवृद्धा विषयप्रवालाः ।
अधश्च मूलान्यनुसंततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ 2
न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिः न च संप्रतिष्ठा ।
अश्वत्थमेनं सुविरूढमूलं असङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥ 3
ततः पदं तत् परिमार्गितव्यं यस्मिन् गता न निवर्तन्ति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ 4

என்றும் சொல்லியிருப்பதைத் தழுவி இந்த சுலோகம் இயற்றி இருக்கிருர்.

आदौ मध्ये तथाऽन्ते जनिमृतिफलदं कर्ममूलं विशालं
ज्ञात्वा संसारवृक्षं भ्रममदमुदिताशोकतानेकपत्रम् ।
कामक्रोधादिशाखं सुतपशुवनिताकन्यकापक्षिसङ्घं
छित्त्वाऽसङ्गासिनैनं पटुमतिरभितश्चिन्तयेद्वासुदेवम् ॥ १०० ॥

संसार-वृक्षं-ஸம்ஸாரமாகிற—விருக்ஷத்தை आदौ-முதலிலும் मध्ये—மத்தியிலும் तथा-அப்படியே अन्ते-முடிவிலும் जनि-मृति-फलदं-பிறப்பு—இறப்பு என்கிற பழங்களையே கொடுப்பது என்றும், कर्म-मूलं-(புண்ணியம்,

பாபம் என்கிற கர்மாக்களை வேராகவுடையதென்றும், विशालं - விஸ்தாரமாய் இருப்பதென்றும் अममद-मुदिता-शोकता-अनेक-पत्रं-பிராந்தி-கொழுப்பு - ஸந்தோஷம்-சோகம் (முதலிய) அநேக இலைகளுடன்கூடியதென்றும் काम क्रोध-आदि-शाखं-காமம்-கோபம் - (லோபம்) முதலிய வைகளை இலைகளாகவுடையதென்றும் सुत - पशु-वनिता-कन्यका-पक्षि - सङ्घं - புத்திரன் - பசு - மனைவி - பெண்- (முதலிய) பக்ஷிகளின் - கூட்டத்துடன்கூடியதென்றும், ज्ञात्वा-நன்கு அறிந்து, पटु-मतिः- நல்ல-புத்தியுள்ளவன் एनं-இந்த விருக்ஷத்தை असङ्ग असिना-பற்றுதலற்றிருக்கும் தன்மையாகிய-வாளினால் छित्वा - வெட்டித்தள்ளிவிட்டு, अभितः- நாலாபக்கத்திலும் वासुदेवं-வாஸுதேவரை (பரமாத்மாவை) चिन्तयेत्-அனுஸந்தானம் செய்ய வேண்டும்.

அவ்விதம் அனுஸந்தானம் செய்யவேண்டுமானால் எத்தனையோ ஜன்மாக்களில் ஸாதனங்களை நன்கு அனுஷ்டித்து, எல்லாம் பகவானுடைய விபூதிகள்தான் என்ற ஞானம் ஏற்பட வேண்டும். அவ்வித ஞானமேற்படக்கூடிய மஹாத்மா வெகு அரிது என்று பகவானே சொல்லுகிறார்.

बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ VII 19

இங்கேயும் முன் 91-வது சுலோகத்தில் अनुभव उदितो यस्य कस्यापि चेत् (யாரேனும் ஒருவருக்கும் இந்த அனுபவம் ஏற்படுமேயானால்) என்று சொல்லியிருப்பதினாலும் வெகு துர்லபம் என்று தெரிகிறது.

(101)

இதுவரை 100 சுலோகங்கள் அடங்கிய சதசுலோகீ என்ற பிரகரணத்தில் ஸர்வவேத ஸாரத்தையும் சுருக்கமாக எடுத்துச் சொல்லிவிட்டு, கடைசியான 101வது சுலோகத்தில் பரம ஸித்தாந்தத்தைச் சொல்லி ஸ்ரீமத் ஆசார்யார் பிரஹ்மார்ப்பணம்

செய்கிறார். அந்த ஸித்தாந்தம் தைத்திரீய உபநிஷத்தில் வருண பகவான் தன் குமாரரான ப்ருகுவிற்கு ப்ரஹ்மலக்ஷணத்தை உபதேசித்ததையனுஸரித்தும், சாந்தோக்ய உபநிஷத்தில் உத்தாலகர் தன் குமாரரான சுவேதகேதுவிற்கு ஒன்பது தடவை உபதேசித்த முறையை அனுஸரித்துமே, ஶ்ரீமத் ஆசார்யாரால் இங்கே சொல்லப்படுகிறது.

यतो वा इमानि भूतानि जायन्ते, येन जातानि जीवन्ति,
यत् प्रयन्ति अभिविशन्ति, तत् विजिज्ञासस्व । तत् ब्रह्म । ...

तै-III 1

सन्मूलाः सौम्य इमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः ॥

छा-VI 8 (4, 6)

ऐतदात्म्यं इदं सर्वं, तत् सत्यं, स आत्मा तत् त्वं असि श्वेतकेतोः ॥

छा-VI 8 (7), 9 (4), 10 (3), 11 (3), 12 (3), 13 (3), 14 (3), 15 (3), 16 (3).

இவ்விதமாக ப்ரத்யகாத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றாகவே இருப்பதினால் அந்த ப்ரத்யகாத்மாவிலிருந்து வேறுபடாத ப்ரஹ்மத்திலேயேதான், முன் 85-வது சுலோகத்தில் கண்டபடி, ஸகல கர்மாக்களையும் அர்ப்பணம் செய்யமுடியும். அதுவே பரிபூர்ணமான வஸ்துவாயிருப்பதினால் கர்மாக்களில் ஏதேனும் குறையிருந்தாலும் அவருக்கு அர்ப்பணம் செய்வதால் குறைநீங்கி விடுகிறது என்ற பாவனையுடன் ப்ரஹ்மத்திற்கு நமஸ்காரம் செய்து இந்த க்ரந்தத்தை ஶ்ரீமத் ஆசார்யார் ஸமாப்திசெய்கிறார்.

जातं मय्येव सर्वं पुनरपि मयि तत्संस्थितं चैव विश्वं
सर्वं मय्येव याति प्रविलयमिति तद्ब्रह्म चैवाहमस्मि ।
यस्य स्मृत्या च यज्ञाद्यखिलशुभविधौ सुप्रयातीह कार्यं
न्यूनं संपूर्णतां वै तमहमतिमुदेवाच्युतं संनतोऽस्मि ॥ १०१ ॥

ஸர்வம் - எல்லாம் மயி ஏவ - என்னிடத்தில்தான் ஜாதம் - உண்டானது. புன: அபி - மறுபடியும் மயி ஏவ ச - என்னிடத்தில்தான் தத் - அந்த விச்வம் - எல்லாம் (ஜகத்) ஸம்ஸ்திதம் நன்கு இருந்துவருகிறது. ஸர்வம் - எல்லாம் மயி ஏவ - என்னிடத்தில்தான் ப்ரவிலயம் - லயத்தையும் யாதி - அடைகிறது இதி - என்ற காரணத்தினால் அஹம் ஏவ - நான் தான் தத் - அந்த (உபநிஷத்தில் 'தத் (அது)' என்று சொல்லப்பட்ட) ப்ரஹ்ம ச - பிரஹ்மமாகவும் அஸ்மி - இருக்கிறேன். யஸ்ய - எவரை ஸ்ம்ருத்யா ச - ஸ்மரித்துக்கொள்வதினால் யஜ்ஞ-ஆதி-அகில-சுப-விதௌ - யக்ஞம்-முதலான-எல்லா சுபகர்மாக்கள்-செய்வதில் இஹ - இங்கு கார்யம் - செய்யவேண்டியது ந்யூனம் - குறையாயிருப்பது ஸம்பூர்ணதாம் - நன்கு (குறையன்னியில்) பூர்ணமாக செய்யப்பட்ட தன்மையை ஸுப்ரயாதி-நன்கு அடைந்துவிடும் வை-என்பது பிரஸித்தமோ, தம்-அந்த அச்யுதம்-பரமாத்மாவை அஹம்-நான் அதி-முதா ஏவ-வெகு-ஸந்தோஷத்துடனேயே ஸந்நத:-நன்கு நமஸ்கரித்தவனாக அஸ்மி - இருக்கிறேன்.

பிரஹ்மதத்வமும் ஆத்மதத்வமும் ஒன்றேயாதலால் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிலயம் எல்லாம் தன்னிடத்தில்தான் என்று ஏற்படுவதால் அப்படியே இந்த சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்.

எல்லாமே பிரஹ்மமாயிருப்பதினால் அர்ப்பணம் செய்கிறவனும் பிரஹ்மம், அர்ப்பணத்தை பெற்றுக்கொள்ளுபவரும் பிரஹ்மம், அர்ப்பணம் செய்யப்படும் பதார்த்தமும் பிரஹ்மம், அர்ப்பணம் செய்வதான கர்மாவும் பிரஹ்மம், அதினால் அடைய வேண்டிய பலனும் பிரஹ்மம்,

ब्रह्मार्पणं ब्रह्म हविः ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ IV-24.

என்றெல்லாம் பகவத்கீதையில் சொன்னதுடன்

यत् करोषि यत् अश्नासि यत् जुहोषि ददासि यत् ।
यत् तपस्यसि कौन्तेय तत् कुरुष्व मदर्पणम् ॥ IX-27

என்றும் சொல்லியிருப்பதால் பிரத்யகாத்மாவிலிருந்து வேறுபடாத பிரஹ்மத்தையே நமஸ்கரித்து அதனிடத்தில் அர்ப்பணம் செய்யவேண்டியிருக்கிறது அதில் தவறுதலோ குறையோ எதுவும் கிடையாததினாலேயே அச்யுத: "தவருதவர்" என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. அத்துடன் சேருகிற எதுவும் குறையற்றதாகவே ஏற்பட்டுவிடும். "நழுவவிடாதவர்" என்ற முறையிலும் "அச்யுத" என்ற சப்தம் பொருந்துகிறது. அதினால் இந்த விசேஷ மஹிமையைக் காட்டக்கூடிய அந்த "அச்யுத" சப்தத்தை உபயோகித்து ஸ்ரீமத் ஆசார்யார் இந்த கிரந்தத்தை முடிக்கிருர். அவ்விதம் முடிப்பதும் பெரியோர்களின் ஸம்பிரதாயத்தையனுஸரித்தே செய்யப்படுகிறதென்று நன்கு வாசகர்கள் உணரவேண்டியதற்காக கர்மாக்கள் செய்து கடைசியில் பிரஹ்மார்ப்பணம் செய்யும்போது ஸாதாரணமாக சொல்லும் சுலோகமான

यस्य स्मृत्या च नामोक्त्या जपहोमक्रियादिषु ।
न्यूनं संपूर्णतां याति सद्यो वन्दे तमच्युतम् ॥

என்ற வாக்கியத்திலுள்ள வார்த்தைகளையே இந்த கடைசி சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் உபயோகித்திருக்கிருர்.

ஆரம்பத்தில் முதல் இரண்டு சுலோகங்களால் குருவின் மஹிமையைச் சொல்லிவிட்டு, 3வது சுலோகத்தில் பிரஹ்மத்தை பிரத்யகாத்மாவாகவும், ஜகத்தாகவும் இரண்டுவிதமாய் அறியலாம்என்று சொன்னபடியே, இந்த கடைசி சுலோகத்தில் எல்லாமே பிரஹ்மம்தான் என்று சொல்லி வேதாந்தத்தின் பரமஸித்தாந்தத்தை விளக்கிக் காட்டியிருக்கிருர்.

இவ்விதம் ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யராயும்
ஸ்ரீ கோவிந்த பகவத்பூஜ்யபாதரின் சிஷ்யராயும் உள்ள
ஸ்ரீமத் சங்கர பகவத்பாதருடைய கிருதிகளில்
சதசுலோகீ முற்றிற்று.
சுபமஸ்து.

|| श्रीः ||

# || हस्तामलकीयभाष्यम् ||

## ஸ்ரீ ஹஸ்தாமலகீயபாஷ்யம்

( ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் இயற்றியது )

( மங்கள சுலோகம் )

यस्मिन् ज्ञाते भवेत् सर्वं विज्ञातं परमात्मनि ।
तं वन्दे नित्यविज्ञानमानन्दमजमव्ययम् ॥ १ ॥

யஸ்மின் ஞாதே பவேத் ஸர்வம் விஜ்ஞாதம் பரமாத்மனி।
தம் வந்தே நித்யவிஜ்ஞானமாநந்தமஜமவ்யயம் ॥

यस्मिन्-எந்த परमात्मनि-பரபிரஹ்மம் ज्ञाते (सति)-அறியப்பட்டபொழுது सर्वं-எல்லா பதார்த்தமும் विज्ञातं-அறியப்பட்டதாக भवेत्-ஆகுமோ, नित्यविज्ञानं-அழிவற்ற சைதன்ய ஸ்வரூபராயும் आनन्दं-ஆநந்தஸ்வரூபராயும் अजं-பிறப்பற்றவராயும் अव्ययं-நாசமற்றவராயுமுள்ள तं-அந்த பரமாதமாவை वन्दे-வணங்குகிறேன்.

(காரணமான மண்ணை அறிந்து விட்டால் அதன் காரியமான குடம், சால், பானை முதலியவை அறியப்பட்டவையாக ஆகிறது. அதுபோல் எல்லா வஸ்துக்களுக்கும் மூலகாரணமான பிரஹ்மத்தை அறிந்து விட்டால், எல்லா வஸ்துக்களும் அறிந்ததாக ஆகும். காரண வஸ்துவே காரிய வஸ்துக்களாக மாறி இருப்பதால், காரியங்கள் காரணத்தைக்காட்டிலும் வேருன தனிப்பொருளல்ல. உண்மையில் வேருக இல்லாவிட்டாலும், வேறு வஸ்துபோல் தோன்றுவதால் அவை பொய்யானவை. உண்மையான பிரஹ்மத்தை அறிந்து விட்டால், அறியவேண்டியதாக வேறு உண்மைப் பொருள் ஒன்றுமில்லை என்று கருத்து).

यदज्ञानादभूद् द्वैतं ज्ञाते यस्मिन्निवर्तते ।
रज्जुसर्पवदत्यन्तं तं वन्दे पुरुषोत्तमम् ॥ २ ॥

யதக்ஞானதபூத் த்வைதம் ஞாதே யஸ்மின் நிவர்ததே।
ரஜ்ஜுஸர்பவதத்யந்தம் தம் வந்தே புருஷோத்தமம் ॥

यदज्ञानात्-எவரை அறியாததால் द्वैतं-இரண்டான பிரபஞ்சம் अभूत्-தோன்றியுள்ளதோ यस्मिन्-எவர் ज्ञाते-அறியப்பட்டபொழுது रज्जुसर्पवत्-கயிற்றில் தோன்றிய பாம்புபோல் अत्यन्तं निवर्तते-முழுவதும் விலகிவிடுகிறதோ तं-அந்த पुरुषोत्तमं-புருஷோத்தமனை वन्दे-வணங்குகிறேன்

(கயிற்றை பிராந்தியால் பாம்பாகப் பார்க்கிறான். இது கயிறு என்று அறியாததால், அவனுக்குக் கயிறே பாம்பாகத் தோன்றுகிறது. நன்றாக கவனித்துப் பார்த்து 'இது கயிறுதான்' என்று தெரிந்துவிட்டால், பிறகு பாம்பு தோன்றுவதில்லை. கயிறுதான் தெரிகிறது. இதுபோலவே பிரஹ்மத்தை அறியாததால், அந்த பிரஹ்மமே பிரபஞ்சமாக தோன்றுகிறது. ஆசார்ய உபதேசத்தால் பிரஹ்மத்தை அறிந்துவிட்டால், அக்ஞானம் விலகினதும், அக்ஞானத்தால் தோன்றிய பிரபஞ்சமும் மறைந்து பிறவி மரணமற்ற பேரானந்த நிலையை அடைகிறான்.)

यस्योपदेशदीधित्या चिदात्मा नः प्रकाशते ।
नमः सद्गुरवे तस्मै स्वाविद्याध्वान्तभानवे ॥ ३ ॥

யஸ்யோபதேச தீதித்யா சிதாத்மா ந: ப்ரகாசதே |
நம: ஸத்குரவே தஸ்மை ஸ்வாவித்யாத்வாந்தபாநவே ||

यस्य-எவருடைய उपदेशदीधित्या-உபதேசமாகிற கிரணத்தால் चिदात्मा-சைதன்யஸ்வரூபமான ஆத்மா नः-நமக்கு प्रकाशते-விளங்குகிறதோ स्वाविद्याध्वान्तभानवे-ஆத்மாஞானமாகிற இருளுக்கு ஸூரியனாக இருக்கிற तस्मै-அந்த सद्गुरवे-ஸத்குருவுக்கு नमः-நமஸ்காரம்

[முதல் சுலோகத்தால் பிரஹ்ம ஞானத்தால் எல்லாவற்றையும் அறிவான் என்பதும், 2-வது சுலோகத்தில் பிரபஞ்சத்தின் தத்வத்தையறிந்ததும் பிரபஞ்சம் மறைவதால் அறியவேண்டிய தாக வேறொன்றுமில்லை எனபதும் 3-வது சுலோகத்தில் ஸத்குருவின் உபதேசத்தால்தான் ஆத்மாவை அறியமுடியும் என்பதும் கூறப்பட்டது.]

(பாஷ்யம் அவதாரிகை)

इह हि सर्वस्य जन्तोः सुखं मे भूयाद्दुःखं मे मा भूयात् इति स्वरसत एव सुखोपादित्साद्दुःखजिहासे भवतः । तत्र यः कश्चित्

पुण्यातिशयशाली अवश्यंभाविदुःखाविनाभूतत्वादनित्यत्वाच्च विषयजं सुखं दुःखमेवेति ज्ञात्वा यत्नेन ससाधनात्संसारात्यक्तासक्तिरत्यन्तं विरज्यते । विरक्तश्च संसारहानौ यतते । संसारस्य च आत्मस्वरूपापरिज्ञानकृतत्वात् आत्मज्ञानान्निवृत्तिरिति; तं प्रति आत्मज्ञानमाचार्य उपदिशति ॥

இவ்வுலகில் எல்லா பிராணிகளுக்கும், எனக்கு ஸுகம் இருக்கவேண்டும், எனக்கு துக்கம் இருக்கக்கூடாது என்று ஸ்வபாவமாகவே ஸுகத்தையடைவதிலும், துக்கம் விலகுவதிலும் ஆசை உள்ளது. அதில் சிறந்த புண்யங்களுடன் கூடிய எவனோ ஒருவன், கட்டாயம் உண்டாகிற துக்கத்துடன் சேர்ந்தே இருப்பதாலும், அழிந்து போவதாலும், விஷயங்களிலிருந்து உண்டாகும் ஸுகத்தையும் துக்கம்தான் என்று அறிந்து, முயற்சியுடன் ஸாதனங்களுடன்கூட ஸம்ஸாரத்திலிருந்து பற்றுதலை விட்டவனாகி, வைராக்கியமடைகிறான். விரக்தனான இவன் ஸம்ஸாரம் விலகுவதில் முயற்சிக்கிறான். ஆத்ம ஸ்வரூபத்தை அறியாத காரணத்தால் ஸம்ஸார நிலை ஏற்பட்டு உள்ளதால், ஆத்மஞானத்தால் அக்ஞானம் விலகி, அதனால் ஏற்பட்ட ஸம்ஸார நிலையும் விலகிவிடும். ஆகவே ஆசார்யார் பின்வரும் சுலோகங்களால் வைராக்கியமுள்ளவனுக்கு ஆத்ம ஞானத்தை உபதேசிக்கிறார்.

(ஹஸ்தாமலகீய மூலம்)

निमित्तं मनश्चक्षुरादिप्रवृत्तौ
निरस्ताखिलोपाधिराकाशकल्पः ।
रविर्लोकचेष्टानिमित्तं यथा यः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ १ ॥

நிமித்தம் மநஸ்சக்ஷுராதிப்ரவ்ருத்தௌ
நிரஸ்தாகிலோபாதி ராகாசகல்ப: ।
ரவிர் லோகசேஷ்டாநிமித்தம் யதா ய:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ॥

यथा எப்படி रविः-ஸூரியன் लोकचेष्टानिमित्तं-ஜனங்கள் செயல்புரிவதற்குக் காரணமாகிறானோ, (அப்படி) निरस्ता-

विलोपाधिः-எல்லா உபாதிகளும் விலகின. आकाशकल्पः-ஆகாசம்போன்ற यः-எவர் मनश्चक्षुरादिप्रवृत्तौ-மனம், கண் முதலியவைகள் செயல்படுவதற்கு निमित्तं காரணமாகிறாரோ सः-அந்த नित्योपलब्धिस्वरूपः-அழியாத ஞான வடிவமான अहं-நான் आत्मा-ஆத்மா.

( பாஷ்யம் )

ननु सर्वत्र ग्रन्थादौ शिष्टानामिष्टदेवतास्तुतिनमस्कारपूर्विका प्रवृत्तिरुपलब्धा ; अयं च विना स्तुतिनमस्कारौ प्रवर्तमानोऽशिष्टत्वात् अनादरणीयवचनः प्रसज्येतेति चेत् — न ; स्तुतिनमस्कारयोस्त्रैविध्यात् ; त्रिविधौ हि स्तुतिनमस्कारौ — कायिकौ वाचिकौ मानसिकौ चेति । तत्र कायिकवाचिकयोरभावेऽपि परमशिष्टत्वादाचार्यस्य, ग्रन्थस्य अविघ्नेन परिसमाप्तेश्च मानसिकौ स्तुतिनमस्कारावकरोदयमाचार्य इत्यवगम्यते ; यत्किंचिदेतत् । प्रकृतमनुसरामः ॥

உலகில் எல்லா இடத்திலும் சிஷ்டர்கள் (ஸதாசாரஸம்பன்னர்களான மஹான்கள்) கிரந்தாரம்பத்தில் இஷ்ட தேவதையை ஸ்துதி செய்து நமஸ்காரம் செய்துதான் கிரந்தத்தை ஆரம்பிப்பதாகக் கண்டிருக்கிறோம். இந்த கிரந்தத்தை இயற்றியவர், ஸ்துதி, நமஸ்காரமில்லாமலே கிரந்தத்தை ஆரம்பிப்பதால், சிஷ்டரல்லவென்பதால், இவருடைய கிரந்தம் ஆதரிக்கத் தகுந்ததல்லவென்று ஆகிவிடுமே எனில், அது சரியல்ல. ஸ்துதியும் நமஸ்காரமும் மூன்றுவிதமாக இருப்பதால். ஸ்துதி நமஸ்காரங்கள், சரீரத்தால் செய்வது, வாக்கால் செய்வது, மனதால் செய்வது என்று மூன்றுவிதமல்லவா! அதில் காயிக வாசிக ஸ்துதி நமஸ்காரங்களில்லாமல்போனாலும், இக்கிரந்தத்தை இயற்றிய ஆசார்யர் சிறந்த சிஷ்டரானதாலும், இடையூறன்னியில் இக்கிரந்தம் முடிந்திருப்பதாலும், இந்த ஆசார்யர் ஸ்துதி நமஸ்காரங்களை மானஸிகமாகச் செய்துள்ளார் என்று தெரிய வருகிறது. இது ஸாதாரண விஷயம். பிரகிருதமான வியாக்யானத்தைத் தொடருவோம்.

(பாஷ்யம்)

मनश्च चक्षुश्च मनश्चक्षुषी, ते आदी येषां तानि मनश्चक्षुरादीनि; आदिशब्दः प्रत्येकमभिसंबध्यते; ततश्च अयमर्थो भवति— मनआदीनां मनोऽहंकारबुद्धिचित्तानां चतुर्णामन्तःकरणानाम्, तथा चक्षुरादीनां चक्षुस्त्वक्श्रोत्रजिह्वाघ्राणानां पञ्चबुद्धीन्द्रियाणां, एवं वाक्पाणिपादपायूपस्थानां पञ्चकर्मेन्द्रियाणाम्, प्रवृत्तौ स्वस्वव्यापारे, निमित्तं हेतुः यः सोऽहमात्मेति संबन्धः । स कीदृश इत्याकाङ्क्षायामाह — नित्योपलब्धिरिति । नित्या च असावुपलब्धिश्चेति नित्योपलब्धिः, सा स्वरूपं यस्य स तथोक्तः । रविः आदित्यः यथा येन प्रकारेण प्रकाशकत्वेन लोकानां चेष्टायां स्पन्दने निमित्तं हेतुः, तथैव अधिष्ठातृत्वेन यो निमित्तं सोऽहमात्मेत्यर्थः — इति इयं दृष्टिः आत्मज्ञानोपायत्वेन दर्शिता । परमार्थतस्तु निरस्ताः निराकृताः अखिलाः निरवशेषाः उपाधयो बुद्ध्यादिलक्षणाः यस्य स तथोक्तः । निरस्ताखिलोपाधित्वादेव अयमाकाशकल्पः आकाशवद्विशुद्धः इत्यर्थः ।

மனதும் கண்ணும் எவைகளுக்கு முதலில் உள்ளனவோ அவை மனஸ் சக்ஷுராதிகள். ஆதிபதம் (மனஸ் சக்ஷுஸ் இரண்டுடனும்) தனித்தனியாக சேர்க்கப்படுகிறது. அதனால் இவ்வாறு பொருள் கிடைக்கிறது. மனம் முதலானவைகளுக்கும் அதாவது மனம், அஹங்காரம், புத்தி, சித்தம் என்ற நான்குவிதமான அந்தக்கரணங்களுக்கும், அவ்விதமே கண் முதலானவைகளுக்கும், அதாவது கண், த்வக்கு, காது, நாக்கு, மூக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங்களுக்கும், இவ்விதமே வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்களுக்கும் பிரவிருத்தியில்-தன் தன் காரியத்தைச் செய்வதில் நிமித்தம்-காரணமாக எது உள்ளதோ அந்த நான் ஆத்மா என்று சேர்க்கவேண்டும்.

அவர் எப்பேற்பட்டவர் என்று அறிய விரும்பும்பொழுது சொல்கிறார். நித்யமான - அழியாத, உபலப்தி - ஞானம் (சைதன்யம்) எவருக்கு ஸ்வரூபமோ, அவர் நித்யோபலப்தி ஸ்வரூபர். எவ்வாறு ரவி-ஸூரியன் பிரகாசிக்கச்செய்வதால்

ஜனங்களின் சேஷ்டைக்கு—செய்கைக்கு காரணமாகிருனே, அவ்வாறே அதிஷ்டாதாவாக எவர் காரணமோ அந்த நான் ஆத்மா என்று பொருள். இவ்விதமான அறிவு ஆத்மஞானத்திற்கு உபாயமாகக் காட்டப்பட்டது. வாஸ்தவத்தில் ஆத்மா பாக்கியன்னியில் புத்தி முதலான எல்லா உபாதிகளும் அற்றவர். இதனாலேயே இந்த ஆத்மா ஆகாசம்போல மிகவும் சுத்தமானவர்.

[ குறிப்பு :— ஸூரியன் உதயமாகி வெளிச்சத்தைக் கொடுக்க ஆரம்பித்ததும், ஜனங்கள் அவரவர் காரியங்களை நடத்துகிருர்கள். ஸூரியன் வாக்காலோ, மனதாலோ, சரீரத்தாலோ, ஜனங்களைத் தூண்டாத போதிலும், பிரகாசிக்கச் செய்வதன் மூலம் காரணமாகிருன். இதுபோல சித்ரூபியான ஆத்மாவின் ஸந்நிதியில், சித்சக்தியால் மனம் எண்ணுகிறது, கண் பார்க்கிறது, ஒவ்வொரு இந்திரியமும் அதனதன் வேலையைச் செய்கிறது. இந்த முறையில் ஆத்மா காரணம் ஆகிருன், ஆனல் ஆத்மா நேரிடையாக இந்திரியங்களைத் தூண்டுவதில்லை. இந்திரியங்களுடன் ஆத்மாவுக்கு எவ்விதத் தொடர்பும் கிடையாது. தான் இருப்பது மூலமாகவே அவைகளை நியமனம் செய்வதால், அதிஷ்டாதா என்ற ரீதியில் காரணம் ஆகிருன். இதுகூட வியவஹார நிலையில் தான். பரமார்த்த நிலையில், புத்தி முதலான எல்லா உபாதிகளும் மறைந்து விடுகிற படியால், எவ்வித உபாதியுமற்ற ஆகாசம்போல் சுத்தமான ஆத்மசைதன்யம்தான் உள்ளது. அந்த நிலையில் இந்திரியங்கள் செயல்படுவதற்கு ஆத்மா காரணம் என்ற வியவஹாரமும் கிடையாது.]

(1)

## ( பாஷ்யம் )

ननु मनश्चक्षुरादिप्रवृत्तौ किमर्थमधिष्ठाता इष्यते ? स्वयमेव कस्मान्न प्रवर्तन्ते ? कथं च नित्योपलब्धिस्वरूपत्वम् अधिष्ठातुरिष्यते ? इत्यत आह —

(அ) மனம், கண் முதலானவை செயல்படுவதற்கு நியமனம் செய்பவன் எதற்காக விரும்பப்படுகிறது ? ஏன் அவைகள் தானகவே செயல்படுவதில்லை ? நியமனம் செய்கிற ஆத்மா அழியாத ஞானஸ்வரூபன் என்பது எப்படி ? என்ருல் அதற்கு பதில் சொல்கிருர் :—

(மூலம்)

यमग्न्युष्णवत् नित्यबोधस्वरूपं
मनश्चक्षुरादीन्यबोधात्मकानि ।
प्रवर्तन्त आश्रित्य निष्कम्पमेकं
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ २ ॥

யமக்ந்யுஷ்ணவத் நித்ய போத ஸ்வரூபம்
மனஸ் சக்ஷுராதீன்யபோதாத்மகானி ।
ப்ரவர்தந்த ஆச்ரித்ய நிஷ்கம்பமேகம்
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥

अग्न्युष्णवत्-நெருப்பின் சூடுபோல் नित्यबोधस्वरूपं-அழிவற்ற சைதன்ய வடிவமாயும் निष्कम्पं-ஸந்தேஹமற்றதாயும் एकं-ஒன்றாயும் உள்ள यं-எவரை आश्रित्य-ஆசிரயித்துக்கொண்டு अबोधात्मकानि-ஞானமற்ற ஜட ஸ்வரூபமான मनश्चक्षुरादीनि-மனம் முதலியவைகளும் கண் முதலியவைகளும் प्रवर्तन्ते-செயல்படுகின்றனவோ सः-அந்த नित्योपलब्धिस्वरूपः-அழிவற்ற ஞானவடிவமான अहं-நான் आत्मा-ஆத்மா.

(பாஷ்யம்)

यं नित्यबोधस्वरूपमात्मानम् आश्रित्य मनश्चक्षुरादीनि प्रवर्तन्ते, सोऽहमात्मेति संबन्धः । ननु कथं बोधस्य नित्यत्वम्? बोधो हि नाम ज्ञानम्; तच्च इन्द्रियार्थसंनिकर्षादिना जायते समुत्पद्यते; उत्पन्नं च ज्ञानं स्वकार्येण संस्कारेण विरोधिना ज्ञानान्तरेण वा विनश्यति; अतः उत्पत्तिनाशधर्मवत्त्वात् न नित्यं भवितुमर्हति; नापि बोधस्वरूपत्वमात्मन उपपद्यते, नित्यत्वादात्मनः, अनित्यत्वाच्च बोधस्य; न हि नित्यानित्ययोरेकस्वभावत्वम्, विरोधात् इति ॥

அழிவற்ற ஞானவடிவமான எந்த ஆத்மாவை ஆசிரயித்து மனம் முதலியவைகளும், கண் முதலியவைகளும் செயல் புரிகின்றனவோ அந்த நான் ஆத்மா என்று அன்வயம்.

போதத்திற்கு அழிவற்ற தன்மை எப்படி இருக்க முடியும்? போதமென்பது அறிவு. அது இந்திரியங்களுக்கு விஷயங்களுடன் தொடர்பு முதலியவற்ருல் உண்டாகிறது. உண்டான ஞானம் தன் காரியமான [1] ஸம்ஸ்காரத்தாலோ, விரோதியான வேறு ஞானத்தாலோ அழிந்து போகிறது. ஆகையால் உண்டாவது, அழிவது என்ற தன்மைகளுடன் கூடியிருப்பதால் (ஞானம்) நித்யமாக இருக்கமுடியாது. ஆத்மா நித்யமானதாலும் ஞானம் அழியும் தன்மையுள்ளதாலும் ஞான வடிவமாக இருக்கும் தன்மை ஆத்மாவுக்குப் பொருந்தாது. ஒன்றுக்கொன்று விரோதமானதால் நித்யமான வஸ்துவும் அநித்யமான வஸ்துவும் ஒரே ஸ்வரூபமாக இருக்க முடியாது என்ருல்,

(பாஷ்யம்)

अत्रोच्यते — बोधो हि नाम चैतन्यमभिप्रेतम्; न च ज्ञानं चैतन्यम्, जन्यज्ञानस्य ज्ञेयत्वेन घटादिवज्जडत्वात् । ज्ञेयं हि ज्ञानम्; घटज्ञानं मे जातं, पटज्ञानं मे जातमिति साक्षादनुभूयमानत्वात् । अतः तस्य अनित्यत्वेन अनात्मस्वरूपत्वेऽपि, नित्यबोधस्वरूपत्वम् आत्मन उपपद्यते ।

இங்கு சொல்லப்படுகிறது. போதம் என்பது சைதன்யம் என்பதாக அபிப்பிராயப்பட்டுள்ளது ஞானம் சைதன்யம் அல்ல. உண்டாகிற ஞானம் அறியப்படுவதால் குடம் முதலியதுபோல் ஜடமானதால். எனக்கு குடத்தைப்பற்றிய அறிவு உண்டானது, எனக்கு வஸ்திரத்தைப்பற்றிய அறிவு உண்டானது என்று நேராக அனுபவிக்கப்படுகிறபடியால் ஞானம் அறியப்படுவதல்லவா! ஆகையால் அந்த ஞானம் அநித்யமானதால் ஆத்மஸ்வரூபமாக இல்லாமல் போனாலும் ஆத்மா அழிவற்ற சைதன்யஸ்வரூபம் என்பது பொருந்துகிறது.

---

1. மாம்பழத்தைப் பார்த்து மாம்பழம் என்று அறிகிருேம். பிறகு பலாப்பழத்தைப் பார்க்கும்பொழுது மாம்பழம் என்ற அறிவையழித்து பலாப்பழம் என்ற அறிவு உண்டாகிறது. சில சமயங்களில் பின்னால் மாம்பழத்தை நினைப்பதற்கு காரணமான ஸம்ஸ்காரம் உண்டாகி அது மாம்பழ ஞானத்தை அழித்து விடுகிறது.

ननु आत्मनः चेतनत्वे किं प्रमाणमिति चेन्, जगत्प्रकाश इति ब्रूमः। जगत् प्रकाशत इति सर्वजनसिद्धम्; तत्र ज्ञानादीनां ज्ञेयत्वेन जडत्वात्, आत्मप्रकाशेनैव जगत् प्रकाशत इति निश्चितं भवति। आत्मा च स्वपरप्रकाशवान् सवितृप्रकाशवत् — यथा सविता स्वयं प्रकाशमानो जगदपि प्रकाशयति, तथा आत्माऽपीति। अस्तु तर्हि चिद्धर्मा पुरुषः, कथमयं चित्स्वभाव इति; न, धर्मधर्मिभावस्य अनुपपत्तेः ॥

*ஆத்மா சேதனம் என்பதற்கு என்ன பிரமாணம் என்றால் உலகம் தெரிவது என்று சொல்கிறோம். உலகம் தெரிகிறது என்பது எல்லா ஜனங்களும் அறிந்ததே. அங்கு ஞானம் முதலானவை (மனோவிருத்திஞானம்) அறியப்படுகிறபடியால் ஜடம். அவற்றால் பிரபஞ்சம் விளங்காது. ஆகையால் ஆத்மாவின் பிரகாசத்தால்தான் உலகம் விளங்குகிறது என்று தீர்மானிக்கப் படுகிறது. ஆத்மாவோ ஸூரியனின் பிரகாசம்போல் தானும் பிரகாசித்துக்கொண்டு மற்றதையும் பிரகாசப்படுத்துகிறது. எப்படி ஸூரியன் தான் பிரகாசித்துக்கொண்டு ஜகத்தையும் பிரகாசப்படுத்துகிறதோ, அதுபோல் ஆத்மாவும். அப்படியானால் ஆத்மா சைதன்யத்தை தர்மமாக உடையதாக இருக்கட்டும்! சைதன்யம் ஆத்மாவின் ஸ்வரூபம் என்பது எப்படி? என்றால், அது சரியல்ல. தர்மம், தர்மத்தோடு கூடியது என்ற தன்மை பொருந்தாததால்.*

तथा हि — आत्मनश्चैतन्यं भिन्नम्, अभिन्नं वा, भिन्नाभिन्नं वा। तत्र न तावद्भिन्नम्; भिन्नं चेत्, घटवदात्मधर्मत्वानुपपत्तेः। ननु घटः असंबन्धात् आत्मधर्मो न भवति, चैतन्यं तु आत्मसंबन्धीति युक्तमात्मधर्मत्वम् इत्यपि न, संबन्धानुपपत्तेः। संबन्धो हि तावत् संयोगो वा समवायो वा स्यात्, संबन्धान्तरस्य अत्र असंभवात्। न तावत् संयोगः, तस्य द्रव्यमात्रधर्मत्वात्, अद्रव्यत्वाच्चैतन्यस्य। नापि समवायः, अनवस्थापातात्। समवायो हि संबद्धः समवायिनौ संबध्नाति, असंबद्धो वा? न तावदसंबद्धः, घटादिवदकिंचित्करत्वात्। संबद्धश्चेत्, संयोगादेरभावेन समवायस्यापि समवायान्तरमभ्युपगन्तव्यम्। एवं परंपरापेक्षायाम् अनव-

स्यापात इति यत्किंचिदेतत् । तस्माद्भिन्नत्वपक्षे धर्मधर्मिभावः सर्वथा नोपपद्यते । अभिन्नत्वपक्षे तु बोधस्य आत्मरूपत्वेन सुतरां धर्मधर्मिभावो नास्त्येव । न हि तस्य तदेव धर्मो भवति; न हि शुक्लं शुक्लस्य धर्मो भवतीति । तस्मात् भिन्नाभिन्नत्वपक्ष एव अवशिष्यते । स च विरोधान्न युज्यते — न ह्येकमेकस्मात् भिन्नमभिन्नं च भवितुमर्हति, विरोधात् ॥

அதாவது:- ஆத்மாவைக்காட்டிலும் சைதன்யம் வேறு, அல்லது வேருக இல்லாததா, அல்லது வேருகவும் வேறல்லாததாகவும் உள்ளதா? அதில் சைதன்யம் ஆத்மாவைக்காட்டிலும் வேருக இருக்கமுடியாது. வேருக இருந்தால், வேருன குடம் போல், வேருன சைதன்யத்திற்கும் ஆத்மாவின் தர்மமாயிருக்கும் தன்மை பொருந்தாது. குடத்திற்கு ஆத்மாவுடன் சேர்க்கை இல்லாததால் அது ஆத்மாவின் தர்மமாகாது. சைதன்யமோ ஆத்மாவுடன் சேர்ந்துள்ளது என்பதால் ஆத்மாவின் தர்மமாய் இருப்பது பொருந்துமே என்பதும் சரியல்ல. ஆத்மாவுக்கும் சைதன்யத்திற்கும் சேர்க்கை பொருந்தாததால். ஸம்பந்தம் என்பது ஸம்யோகமாகவோ அல்லது ஸமவாயமாகவோ இருக்க வேணும். இவ்விரண்டைத்தவிர வேறு ஸம்பந்தம் இங்கு இருக்க முடியாததால். அவ்விரண்டில் இங்கு ஸம்யோகம் பொருந்தாது. ஸம்யோகம் திரவியங்களில் மட்டுமிருக்கிற தர்மமானதால், சைதன்யம் திரவ்யமாக இல்லாததால்.

ஸமவாயமும் பொருந்தாது, அநவஸ்தை (முடிவில்லாமை) என்ற தோஷம் வருமானதால் ஸமவாயமானது, தான் முதலில் சேர்ந்துகொண்டு ஸமவாயத்துடன் கூடிய இரண்டு வஸ்துக்களை சேர்க்கிறதா, அல்லது தான் சேராமலே சேர்க்கிறதா? ஸமவாயம் தான் சேராமல் மற்றதை சேர்க்கமுடியாது. அதில் சேராத குடம் முதலியவைபோல் தான் ஸமவாயமும் சேர்க்காது. ஸமவாயம் தான் சேர்ந்துகொண்டு மற்றதை சேர்க்கிறது என்றால், தான் சேருவதற்கு ஸம்யோகம் முதலியவை பொருந்தாததால் ஸமவாயம் சேருவதற்கு மற்றொரு ஸமவாயத்தை ஒப்புக்கொள்ளவேண்டும். அதற்கும் மற்றொரு ஸமவாயம் என்ற முறையில் ஸமவாய பரம்பரையை அபேக்ஷிப்பதால் அநவஸ்தை என்ற தோஷம் ஏற்படும். ஆகையால் ஆத்மாவைக்காட்டிலும் சைதன்யம் வேறு என்ற பக்ஷத்தில் இரண்டிற்கும் தர்ம தர்மித்தன்மை எவ்விதத்திலும் பொருந்தாது.

ஆத்மாவைக்காட்டிலும் சைதன்யம் வேறல்ல என்ற பக்ஷத்திலும், சைதன்யம் ஆத்ம ஸ்வரூபமானதால் தர்மதர்மித்தன்மை சிறிதும் பொருந்தாது. அதற்கு அதுவே தர்மமாக இருக்க முடியாது. வெளுப்பு நிறத்திற்கு வெளுப்பு நிறமே தர்மமாக ஆகாதல்லவா! ஆகையால் ஆத்மாவைக்காட்டிலும் சைதன்யம் வேருகவும், வேறல்லாததாகவுமுள்ளது என்ற மூன்ருவது பக்ஷம் தான் மிஞ்சியுள்ளது. ஒன்றுக்கொன்று விரோதமுள்ளதால் இந்த பக்ஷமும் சரியல்ல. ஒரு வஸ்துவே அதே வஸ்துவைக்காட்டிலும் வேருகவும், வேறல்லாததாகவுமிருக்கமுடியாது விரோதத்தால்.

अथोच्यते — प्रत्यक्षसिद्धत्वात् भेदाभेदौ अविरुद्धौ। तथाहि — गौरियमिति पिण्डाऽव्यतिरेकेण गोत्वं प्रतीयते; तदेव पिण्डान्तरे प्रत्यभिज्ञायमानत्वात् भेदेनावगम्यते; अतः प्रत्यक्षेणैव भेदाभेदयोः प्रतीयमानत्वात् अविरोध इति — नैतत्साधु मन्यामहे, प्रत्यक्षस्य अन्यथासिद्धत्वात् — भिन्नमपि हि वस्तु प्रत्यक्षेण अत्यन्तसंनिधानादिदोषात् अभिन्नवत्प्रतीयते — यथा दीपज्वाला भिन्नापि कुतश्चित्कारणादभिन्नवत्प्रतिभासते; तथा अभिन्नमपि वस्तु भिन्नमिव प्रतिभासते — यथा एकस्माच्चन्द्राद्द्वितीयश्चन्द्र इति — अतः प्रत्यक्षस्य अन्यथासिद्धत्वात् न तेन प्रत्यक्षेण प्रमाणसिद्धस्य भेदाभेदविरोधस्य प्रतिक्षेपो युक्त इति ॥

இவ்வாறு சொல்லப்படுமேயாகுல்-ஒரே இடத்தில் பேதமும் அபேதமும் சேர்ந்திருப்பது, உலகில் நேரில் பிரஸித்தமானதால், ஒன்றுக்கொன்று விரோதமில்லை. அதாவது-இது பசு என்று, பசுவின் சரீரத்துடன் சேர்ந்தே அபிந்நமாக, அதிலுள்ள பசுத்தன்மை என்ற ஜாதி அறியப்படுகிறது. வேருெரு பசுவைப் பார்த்து, முன்னுல் பார்த்த பசுத்தன்மையை ஞாபகப்படுத்திக் கொள்ளும்போது, அதுவே வேருகவும் அறியப்படுகிறது. ஆகையால் பிரத்யக்ஷ பிரமாணத்தைக்கொண்டே, ஜாதி, வியக்தி இரண்டுக்கும் பேதம், அபேதம் இரண்டும் அறியப்படுவதால், இரண்டுக்கும் விரோதமில்லை, என்று.

இந்த வாதத்தை சரியானதாக நினைக்கவில்லை. வேறு விதமாகவும் பிரத்யக்ஷ ஞானம் ஏற்பட்டிருக்கலாம். (நேரில் பார்ப்பதால் உண்மை என்று தீர்மானிக்கமுடியாது. பிரத்யக்ஷ

ஞானம் பிராந்தியாகவுமிருக்கலாம்) உண்மையில் வேறுன வஸ்துக்கள்கூட மிக அருகில் இருப்பது முதலிய தோஷத்தால் வேறல்லாதது (ஒன்று) போல் பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. தீபத்தின் ஜ்வாலைகள் வெவ்வேருக இருந்தாலும், ஏதோ ஒரு காரணத்தால் வேருக இல்லாதது (ஒன்ருக உள்ளது) போல நேரில் தெரிகிறது. அவ்வாறே வேருக இல்லாத (ஒரே) வஸ்துவும், வேருக இருப்பதுபோல் நேரில் தெரிகிறது. [1] ஒரு சந்திரனிலிருந்து இரண்டாவது சந்திரன் (வேருகத் தெரிகிருன்). ஆகையால் பிரத்யக்ஷ ஞானம் பொய்யறிவாக இருக்கக்கூடும். ஆதலால் அந்த பிரத்யக்ஷத்தைக்கொண்டு பிரமாணங்களால் தீர்மானிக்கப்பட்ட, பேதத்திற்கும் அபேதத்திற்கும் உள்ள விரோதத்தை மறுப்பது சரியல்ல.

अथैवमुच्यते — चैतन्यस्य द्वे रूपे स्तः, आत्मस्वरूपता चैतन्यस्वरूपता चेति। तत्र आत्मस्वरूपतया आत्मनो न भिद्यते, भिद्यते च चैतन्यस्वरूपतया। अतः उभयरूपाभ्यां भिन्नाभिन्नत्वमविरुद्धमिति — तदपि न, धर्मधर्मित्वाभावात्। तथा हि — येन रूपेण तदभिन्नं न तेन रूपेण धर्मत्वं अभिन्नत्वादित्यवोचाम। येन रूपेण भिन्नम्, तेनापि न धर्मः, भिन्नत्वाद्घटादिवदित्युक्तम्। यच्चोक्तं उभयरूपाभ्यां भिन्नाभिन्नत्वमिति, तदपि विचारं न सहते। ते रूपे किं चैतन्याद्भिन्ने, अभिन्ने, भिन्नाभिन्ने वा। तत्र न तावद्भिन्ने, भिन्नत्वे घटादिवदकिंचित्करत्वात्; अभिन्नत्वे चैतन्यमात्रमेवेति न ताभ्यां भिन्नाभिन्नत्वम्। भिन्नाभिन्नत्वं च विरोधादेव न युक्तम्। तयोरपि रूपान्तराभ्यां भिन्नाभिन्नत्वाभ्युपगमे अनवस्थापात इत्यलमतिविस्तरेण। तस्मान्नात्मा सर्वथा चिद्धर्मा; किं तर्हि? चित्स्वरूप एवेति। एतेन सदानन्दयोरपि आत्मस्वरूपत्वं व्याख्यातम्॥

அல்லது, இவ்விதம் சொல்லப்படுமேயானல், - சைதன்யத்திற்கு ஆத்மஸ்வரூபமாயிருப்பது, சைதன்யஸ்வரூபமாயிருப்பது என்று இரண்டு ரூபங்கள் உள்ளன. அதில் ஆத்மஸ்வரூபமாய்

1. ஆகாசத்தில் ஒரே சந்திரன் இருந்தாலும் கண்ணில் திமிரரோகமுள்ளவனுக்கு இரண்டு சந்திரர்கள் தெரியும். இது பொய்யறிவு.

இருப்பதால் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபடுகிறதில்லை; சைதன்ய ஸ்வரூபமாயிருப்பதால் வேறுபடுகிறது. ஆகையால் ஒரே வஸ்து இரண்டு ரூபங்களைக்கொண்டு வேருகவும், வேறல்லாததாகவுமிருப்பது விரோதமில்லையென்ருல். அதுவும் சரியல்ல; தர்மம், தர்மி என்ற தன்மை இருக்க முடியாததால். அதாவது-எந்த ரூபத்தால் சைதன்யம் ஆத்மாவைக் காட்டிலும் வேறல்லவோ. அந்த ரூபத்தால் தர்மமாயிருக்கமுடியாது வேற்றுமை இல்லாததால், என்று முன்னுல் சொன்னேம். எந்த ரூபத்தால் வேருனதோ, அந்த ரூபத்தாலும் தர்மமாகாது, குடம் முதலியவைபோல் வேருயிருப்பதால். என்பதும் முன்னுல் சொல்லப்பட்டது.

இரண்டு ரூபங்களைக்கொண்டு பின்னமாகவும், அபின்ன மாகவும் உள்ளது என்று எது சொல்லப்பட்டதோ, அதுவும் விசாரித்தால் நிற்காது அந்த இரண்டு ரூபங்கள் சைதன்யத்தைக் காட்டிலும் வேரு, வேறில்லையா, அல்லது வேருகவும், வேறல்லாததாகவும் உள்ளனவா? அதில் வேருக இருக்கமுடியாது. வேருக இருந்தால் குடம் முதலியவைபோல் ஒன்றும் பலனில்லை; வேறல்லாததாக (ஒன்ருக) இருக்குமாளுல், சைதன்யமாக மட்டுமே உள்ளது என்ற காரணத்தால், அந்த ரூபங்களால் பின்னமாகவும், அபின்னமாகவுமிருக்கமுடியாது. ஒன்றுக்கொன்று விரோதமிருப்பதாலேயே ஒரே வஸ்து பின்னமாகவும் அபின்னமாகவுமிருப்பது பொருந்தாது. அவைகளுக்கும் வேறு இரண்டு ரூபங்களால் பின்னமாகவும், அபின்னமாகவுமிருக்கும் தன்மை ஒப்புக்கொண்டால் அநவஸ்தை (முடிவில்லாமை) என்ற தோஷம் ஏற்படும் என்று இது பற்றி விரிவாகச் சொன்னது போதும். ஆகையால் ஆத்மா எவ்விதத்திலும் சைதன்யத்தை தர்மமாக உடையதல்ல. அப்புடியானுல் எவ்விதம்? சைதன்ய ஸ்வரூபம்தான். இதனுல் (சைதன்யம் ஆத்மஸ்வரூபம் என்று விளக்கிக்கூறியதால்) ஸத்வம் (இருப்பு) ஆனந்தம் இவைகளும் ஆத்ம ஸ்வரூபம் என்பது விளக்கப்பட்டதாக ஆகிறது.

नित्यश्च आत्मा, सदकारणवत्त्वात् परमाणुवत्। सन् आत्मा, अहमस्मीति प्रतीतेः। अकारणवांश्च; न हि अस्य कारणं वस्तु प्रत्यक्षादिभिरुपलभ्यते, नापि श्रूयते; किं तु त्रैलोक्यैककारणता हि आत्मनः श्रूयते 'तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः' इत्यादिश्रुतिभ्यः। न त्वात्मनो-

ऽपि कारणान्तरम् । अतः सदकारणवत्त्वात् नित्य आत्मेति सिद्धम् । तस्मात् साधूक्तं नित्यबोधस्वरूपमिति ॥

ஆத்மா பரமாணுவைப்போல் எப்பொழுதுமிருப்பதாலும், காரணமற்றதாலும் நித்யம் 'நான் இருக்கிறேன்' என்று அறிவதால் ஆத்மா எப்பொழுதும் உள்ளது. ஆத்மா காரணமற்றதும்கூட பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் இதற்குக் காரணமான வஸ்து அறியப்படவில்லையல்லவா! கேள்விப்படவுமில்லை. ஆனால் 'அந்த இந்த ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டானது' என்பது முதலான சுருதிகளால் ஆத்மா மூவுலகங்களுக்கும் ஒரே காரணமென்றல்லவா கேள்விப்படுகிறது. ஆத்மாவுக்கும் வேறுகாரணம் கேள்விப்படவில்லை ஆகையால் எப்பொழுதுமிருப்பதாலும், காரணமற்றதாயிருப்பதாலும் ஆத்மா நித்தியம் என்பது தீர்மானமானது. ஆகையால் ஆத்மா அழிவற்ற சைதன்ய ஸ்வரூபமென்று சொன்னது ரொம்பவும் சரியானது.

तत्रैव दृष्टान्तमाह अग्न्युष्णवदिति । यथा उष्णत्वमग्नेर्न व्यतिरिच्यते । व्यतिरेके हि कदाचिदग्नेरन्यत्राप्युपलभ्येत — यथा पुरुषाद्दण्डादि ; न चैवमस्ति ; तस्मादग्निस्वरूपमेव अग्नेरुष्णत्वम् । एवमात्मनोऽपि चैतन्यं स्वरूपमेवेत्यर्थः । तथा च उक्तम् — 'निरंशत्वाद्विभुत्वाच्च तथाऽनश्वरभावतः । ब्रह्मव्योम्नोर्न भेदोऽस्ति चैतन्यं ब्रह्मणोऽधिकम् ॥' इति ॥

அந்த விஷயத்திலேயே திருஷ்டாந்தம் கூறுகிறார்— 'அக்னியின் சூடுபோல்' என்று. எப்படி அக்னியின் சூடு அக்னியைக் காட்டிலும் வேறில்லையோ (அப்படி) வேறாக இருக்குமானால், புருஷனைக்காட்டிலும் வேறான தடி முதலியவைபோல் (புருஷன் கையில் உள்ள தடி மற்றொரு சமயம் வேறிடத்திலும் காணப்படுவதுபோல்) அக்னியிலுள்ள சூடு ஒரு சமயம் அக்னியைக் காட்டிலும் வேறிடத்திலும் காணப்படும். இவ்வாறு இல்லை. ஆகையால் அக்னியின் சூடு அக்னியின் ஸ்வரூபம்தான். இதுபோல் சைதன்யம் ஆத்மாவின் ஸ்வரூபம்தான் என்று கருத்து. அவ்வாறே சொல்லப்பட்டிருக்கிறது. 'அவயவமில்லாததாலும், எங்குமிருப்பதாலும் அப்படியே அழியாத்தன்மை உள்ளதாலும், ப்ரஹ்மத்திற்கும், ஆகாசத்திற்கும் வேற்றுமை

இல்லை. (ஆனாலும்) ப்ரஹ்மத்திற்கு அதிகமாக சைதன்யம் உள்ளது. (ஆகாசத்திற்கு சைதன்யமில்லை) என்று.

यच्चोक्तं मनश्चक्षुरादीनां प्रवृत्तौ किमर्थमधिष्ठाता इष्यते, स्वयमेव कस्मान्न प्रवर्तन्ते इति, तत्राह — अबोधात्मकानीति । हेतुगर्भमिदं विशेषणम्; अतश्च अयमर्थः सेत्स्यति — अबोधात्मकत्वात् अचेतनत्वाच्च घटादिवच्चेतनमधिष्ठातारमाश्रित्यैव प्रवर्तन्त इति । अचेतनत्वं चैषां तज्ज्ञेयत्वात् घटादिवदिति । श्रुतिरपि 'नान्योऽतोऽस्ति द्रष्टा' इत्यादिना आत्मव्यतिरिक्तस्य चेतनत्वं प्रतिषेधति । अतो युक्तमुक्तं चेतनमात्मानमाश्रित्य प्रवर्तन्त इति । निष्कम्पं निस्तरङ्गं निःसंशयमित्यर्थः । तथा च श्रुतिः — 'भिद्यते हृदय-ग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः । क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥' इति । एकं अद्वितीयं देवतिर्यङ्मनुष्यादिशरीरेषु एकम्, न तु सांख्यादि-परिकल्पितवत् नानाभूतमित्यर्थः ॥

மனம், கண் முதலியவை செயல்படுவதற்கு எதற்காக நியாமகன் வேண்டப்படுகிறது? அவைகள் ஏன் தானாகவே செயல்படுகிறதில்லை? என்று எது சொல்லப்பட்டதோ அவ் விஷயத்தில் சொல்கிறார். 'சைதன்யஸ்வரூபமாக இல்லாதது' என்றும் இந்த விசேஷணம் காரணத்தை உள்ளடக்கியது. ஆகையால் இந்தப் பொருள் ஸித்திக்கிறது. மனம், கண் முதலியவை, குடம் முதலியவைபோல் அபோதஸ்வரூபமாக— அசேதனமாக (ஜடமாக) இருப்பதால் சேதனனை நியாமகனை ஆசிரயித்துத்தான் செயல்புரிகின்றன என்று, குடம் முதலியவை போல் அவனால் அறியப்படுவதால் இவைகள் அசேதனம் என்று வேதமும் 'இவனைக்காட்டிலும் வேறான பார்க்கிறவனில்லை' என்பது முதலானதால் ஆத்மாவைக்காட்டிலும் வேறான வஸ்துவுக்கு சைதன்யத்தை மறுக்கிறது. ஆகையால் 'சேதனனை ஆத்மாவை ஆசிரயித்து செயல்படுகின்றன' என்று சொன்னது சரிதான். நிஷ்கம்பம்—அலையற்றது, ஸந்தேஹமற்றது என்று பொருள். அவ்வாறே சுருதி உள்ளது 'மேலானதும், கீழானதுமான எல்லா வஸ்துக்களாக விளங்கும். அந்த ஆத்மா அறியப்பட்டபொழுது மனதிலுள்ள அத்யாஸமாகிற முடிச்சு அறுந்துபோகிறது. எல்லா ஸந்தேஹங்களும் நீங்குகின்றன,

இவனுடைய கர்மாக்கள் நாசமடைகின்றன’ என்று ஏகம்— இரண்டாவது பொருளற்றது. தேவர்கள், மிருகங்கள், மனிதர்கள், முதலான எல்லா சரீரங்களில் (ஆத்மா) ஒன்று, ஸாங்க்யர் முதலானவர்களால் கல்பிக்கப்பட்டதுபோல் (ஆத்மா) பலவாக இல்லை. (2)

ननु आत्मन एकत्वे सुखदुःखादिव्यवस्था न स्यात् । तथा हि — सर्वशरीरेषु यदि एक आत्मा भवेत् तदा एकस्मिन् सुखिनि सर्व एव सुखिनः प्रसज्येरन्, सर्वस्य अविशेषात्; एवमेकस्मिन् दुःखिनि सर्व एव दुःखिनो भवेयुः, एवमेकस्मिञ्जानति सर्व एव जानीयुः; तथैव एकस्मिञ्जायमाने म्रियमाणे वा सर्व एव जायेरन् म्रियेरन्; एवमेकस्मिन्बद्धे मुक्ते वा सर्व एव बद्ध्येरन् मुच्येरन् इति । न चैवमस्ति । तस्मादेकत्वमात्मनो न भवितुमर्हति इत्यत आह —

(அ) ஆத்மா ஒன்றானால், ஸுகதுக்கங்களின் தனித்தனிக் கட்டுப்பாடு இருக்காது. அதாவது—எல்லா சரீரங்களிலும் ஆத்மா ஒருவனாக இருப்பானேயானால், அப்பொழுது ஒருவன் ஸுகத்துடன் கூடியவனாக இருக்கும்பொழுது, எல்லோரும் ஸுகத்துடன் கூடியவர்களாக ஆய்விடுவார்கள். எல்லோருக்கும் தனிப்பட்ட அம்சமில்லாததால். இதுபோல ஒருவன் துக்கத்துடன் கூடியிருக்கும் பொழுது, எல்லோரும் துக்கத்துடன் கூடியவர்களாக ஆய்விடுவார்கள். இதுபோல் ஒருவன் அறியும்பொழுது எல்லோரும் அறிவார்கள். அவ்விதமே ஒருவன் பிறக்கும்பொழுதோ, சாகும்பொழுதோ எல்லோரும் பிறப்பார்கள், சாவார்கள். இவ்வாறு ஒருவன் கட்டுப்பட்ட பொழுதோ, விடுபட்டபொழுதோ எல்லோரும் கட்டுப்படுவார்கள், விடுபடுவார்கள். ஆனால் இம்மாதிரி இல்லை. ஆகையால் ஆத்மா ஒருவனாக இருக்கமுடியாது என்றால் அதற்குச் சொல்கிறார்—

मुखाभासको दर्पणे दृश्यमानो
मुखत्वात् पृथक्त्वेन नैवास्ति वस्तु ।
चिदाभासको धीषु जीवोऽपि तद्वत्
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ३ ॥

முகாபாஸகோ தர்பணே த்ருச்யமானோ
முகத்வாத் ப்ருதக்த்வேந நைவாஸ்தி வஸ்து ।
சிதாபாஸகோ தீஷு ஜீவோऽபி தத்வத்
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥

दर्पणे-கண்ணுடியில் दृश्यमानः-காணப்படுகிற मुखाभासकः-முகத்தின் பிரதிபிம்பம் मुखत्वात्-முகமாக இருப்பதைவிட पृथक्त्वेन-வேருக वस्तु - தனிவஸ்துவாக नैवास्ति-இல்லவே இல்லை. तद्वत्-அதுபோல் धीषु-புத்திகளில் चिदाभासकः சைதன்யத்தின் பிரதிபிம்பமான जीवोऽपि-ஜீவனும் (சைதன்யத்தைக்காட்டிலும் வேருக இல்லை) सः - அந்த नित्योपलब्धिस्वरूपः-நித்யசைதன்யஸ்வரூபனுன अहं-நான் आत्मा-ஆத்மா.

मुखाभासकः मुखप्रतिबिम्बः दर्पणादौ नानाकारेषु दर्पणेषु इति यावत्; दृश्यमानः मुखत्वात् परमार्थतः मुखस्वरूपत्वात् पृथक्त्वेन भेदेन न विद्यते । यद्यपि मुखाभासको नाम वस्तु नास्त्येव, तथापि उपाधिभेदात् परमार्थसतो मुखात् परस्परं च ते मुखाभासका भिन्नाः प्रतीयन्ते । तथा च उपाधिगतमलिनत्वादिधर्मैः मलिनत्वादिधर्मकाः प्रतीयन्ते । तद्वत् मुखाभासकवत् चिदाभासकः आत्मनः प्रतिबिम्बो धीषु बुद्धिषु दृश्यमानो जीव इत्युच्यते यः, सोऽहमात्मा । जीवास्ते उपाधिभेदात् भिन्नाः प्रतिभासन्ते । उपाधिगतसुखदुःखादिभिश्च सुखदुःखादिमन्तः प्रतिभासन्ते । उपाधयश्च व्यवस्थितरूपा एवेति सुखदुःखादीनामैकात्म्यपक्षे व्यवस्था युक्तैवेति नायमात्मभेदः शक्यो व्यवस्थापयितुम् । श्रुतिश्चैकात्म्यमेव प्रतिपादयति — 'एकमेवाद्वितीयं ब्रह्म' इति ।

முகத்தின் ஆபாஸம், அதாவது முகத்தின் பிரதிபிம்பம் கண்ணுடி முதலியவற்றில்-பற்பல வடிவமுள்ள கண்ணுடிகளில் என்று பொருள். காணப்படுவது, உண்மையில் முகஸ்வரூபமாய் இருப்பதால் வேருக இல்லை. எப்படியும் முகபிரதிபிம்பம் என்ற

வஸ்து இல்லவே இல்லை, ஆனாலும் [1] உபாதிகளின் பிரிவால் அந்த முகபிரதிபிம்பங்கள் உண்மையாக இருக்கிற முகத்தைக் காட்டிலும் வேறாகவும், ஒன்றுக்கொன்று வேறாகவும் தோன்றுகின்றன. அவ்வாறே உபாதிகளிலுள்ள அழுக்கு முதலான தர்மங்களால் பிரதிபிம்பங்களும் அழுக்கு முதலான தர்மங்கள் உள்ளவைகளாகத் தோன்றுகின்றன. அதுபோல-முகபிரதிபிம்பம்போல், சிதாபாஸகன்-புத்திகளில் காணப்படுகிற ஆத்மாவின் பிரதிபிம்பம் ஜீவன் என்று சொல்லப்படுகிறான். எவனுடைய பிரதிபிம்பம் ஜீவன் என்று சொல்லப்படுகிறதோ, அந்த பிம்பமான நான் ஆத்மா. அந்த ஜீவர்கள் உபாதிகளின் வேற்றுமையால் வேறானவர்களாகத் தோன்றுகிறார்கள். உபாதிகளிலுள்ள ஸுகம், துக்கம் முதலியவற்றால் ஸுகம், துக்கம் முதலியவற்றுடன் கூடியவர்களாகத் தோன்றுகிறார்கள். உபாதிகள் நியதமான ஸ்வரூபமுள்ளதாகவே இருப்பதால், ஆத்மா ஒன்று என்ற பக்ஷத்தில் ஸுகம், துக்கம் முதலியவைகளுக்கு கட்டுப்பாடான நிலை நன்கு பொருந்தும். ஆகையால் ஆத்மா அநேகம் என்பதை நிலைநிறுத்தமுடியாது. வேதமும் ஆத்மா ஒன்று என்பதையே எடுத்துக்கூறுகிறது· ‘பிரஹ்மம் ஒன்றுதான், இரண்டாவது வஸ்துவற்றது’ என்று.

आत्मभेदपक्षे तु इयं सुखदुःखादिव्यवस्था नोपपद्यते । तथा हि— प्रतिशरीरं आत्मानो भिन्नाः, ते च सर्वे प्रत्येकं सर्वगता इति आत्मभेदवादिनो मन्यन्ते । तत्र सर्वेषां सर्वगतत्वात् सर्वसंनिधौ सुखादिकमुत्पद्यमानं विशेषहेतोरभावात् कथमेकस्यैव तत् सुखादिकं, न सर्वेषां इत्यवधारयितुं शक्यते । अथ यत्संबन्धिना कार्यकरणसंघातेन सुखादिकं जन्यते, तस्यैव तदित्यभिधीयते इति, तन्न, कार्यकरणसंघातस्यापि सर्वात्मसंनिधावुत्पद्यमानस्य विशेषहेतोरभावादेव कथमेकात्मसंबन्धित्वमिति । अथ

---

1. ஒரே முகத்தை பிம்பம், பிரதிபிம்பம் என்று இரண்டு வஸ்துவாகக்காட்டுகிற கண்ணாடி முகத்திற்கு உபாதியாகும். பல கண்ணாடிகளிருந்தால் ஒரேமுகம் பல முகங்களாகத் தோன்றுகிறது. இதுபோல் மனம் என்னும் உபாதி பலவாக இருப்பதால் பிம்பமான ஆத்மா ஒன்றானாலும் பிரதிபிம்பங்களான ஜீவர்கள் பலவாகத் தோன்றுகிறார்கள்.

यत्कर्मवशात्कार्यकरणसंघातस्योत्पत्तिः, तस्यैव असौ कार्यकरणसंघात इति विशेषहेतुरिति चेत्, न, कर्मणोऽपि सर्वात्मसंनिधावुत्पद्यमानस्य सर्वात्मसंबन्धित्वेन तज्जनितकार्यकरणसंघातस्यापि सर्वात्मसंबन्धित्वात् तज्जनितस्य सुखदुःखादेरपि सर्वात्मसंबन्धित्वमिति सुखादिकस्य नानात्मपक्ष एव न व्यवस्थितिः। पूर्वपूर्वकार्यकरणसंघातस्य कर्मापेक्षायां च अनवस्थादोषः। अनादित्वेन अनवस्थादोषपरिहारश्च अन्धपरंपरेति। श्रुतिरपि नानात्मपक्षं प्रतिषेधति — 'नेह नानास्ति किंचन' इति। अतः साधूक्तं एकमिति।

ஆத்மா பல என்ற பக்ஷத்திலோ, ஸுகம் துக்கம் முதலியவைகளின் கட்டுப்பாடு பொருந்தாது. அதாவது 'ஒவ்வொரு சரீரத்திலும் ஆத்மா வெவ்வேறு. அவர்கள் யாவரும் ஒவ்வொருவரும் எங்குமுள்ளவர்கள்' என்று ஆத்மபேதவாதிகள் எண்ணுகிறார்கள். அதில் எல்லா ஆத்மாக்களும் எல்லா இடங்களிலுமிருப்பதால், எல்லோருடைய சமீபத்தில் உண்டாகும் ஸுகம், துக்கம் முதலானவை, தனிப்பட்ட காரணமில்லாததால் ஒருவனைச் சேர்ந்தது தான் அந்த ஸுகம் முதலானவை, எல்லோரையும் சேர்ந்ததல்ல என்று எப்படித் தீர்மானிக்க முடிகிறது?

எந்த ஆத்மாவைச்சேர்ந்த [1] கார்யகரண ஸங்காதத்தால் (சரீரத்தால்) ஸுகம் முதலியவை உண்டாகிறதோ, அந்த ஸுகம் முதலியவை அந்த ஆத்மாவையே சேர்ந்தது என்று சொல்லப்படுமேயானால், அது சரியல்ல. எல்லா ஆத்மாக்களுடைய சமீபத்தில் உண்டாகும் சரீரத்திற்கும் தனிப்பட்ட காரணமில்லாததால் ஒரே ஆத்மாவைச் சேர்ந்திருப்பது எப்படி பொருந்தும்?

எந்த ஆத்மா செய்த கர்மாவின் அதீனமாக சரீரம் உண்டாகியிருக்கிறதோ, அவனைச் சேர்ந்ததுதான் இந்த சரீரம் என்று தனிப்பட்ட காரணமிருக்கிறதே என்றால், சரியல்ல. எல்லா ஆத்மாக்களுடைய சமீபத்தில் உண்டாகும் கர்மாவும் எல்லா ஆத்மாக்களையும் சேர்ந்தபடியால், அதனால் உண்டாகும்

1. கார்யமான ஸ்தூலசரீரமும் கரணங்களான ஸூக்ஷ்ம சரீரமும் சேர்ந்து கூட்டமாக இருப்பதால் சரீரத்திற்கு காரிய கரண ஸங்காதமென்று பெயர்.

சரீரமும் எல்லோரையும் சேர்ந்தபடியால், அதனுலுண்டாகும் ஸுகம் துக்கம் முதலியதும் எல்லா ஆத்மாக்களையும் சேர்ந்ததாக ஆகும் என்பதால், ஆத்மா அநேகம் என்ற பக்ஷத்தில்தான் ஸுகம், துக்கம் முதலியவற்றிற்கு வியவஸ்தை இல்லாமற்போகும். [1] முன்முன் சரீரத்திற்கும் கர்மாவின் அபேக்ஷை இருக்குமாஞல் அநவஸ்தை என்ற தோஷம் ஏற்படும். அநாதி என்று சொல்லி அநவஸ்தா தோஷத்திற்கு பரிஹாரம் செய்வது குருட்டுப் பரம்பரையாகும். வேதமும் ஆத்மா அநேகம் என்ற பக்ஷத்தை மறுக்கிறது. 'இதில் சிறிதும் வேற்றுமை இல்லை' என்று. ஆகையால் ஆத்மா ஒன்று என்று சொன்னது சரிதான். (3)

नन्वेवं सति आत्मनः सुखदुःखादिसंबन्धाभावात् बन्धो नास्ति; बन्धाभावाच्च मोक्षाभावः; बद्धो हि मुच्यते नाबद्ध इति; तथा चिदाभासस्यापि बन्धमोक्षौ न विद्येते, अवस्तुत्वात्; तस्य बुद्धेरपि विनाशित्वात् बन्धमोक्षयोरभावः; ततश्च मोक्षशास्त्रमनर्थकमापन्नम् इत्यत आह—

(அ) இவ்விதமாஞல் ஆத்மாவுக்கு ஸுகம், துக்கம் முதலியவைகளின் தொடர்பு இல்லாததால் பந்தமில்லை. பந்தம் இல்லாததால் மோக்ஷமில்லை. கட்டுப்பட்டவன்தானே விடுபடுகிறுன். கட்டுப்படாதவன் விடுபடுகிறதில்லையே! அவ்விதமே சைதன்யத்தின் பிரதிபிம்பமான ஜீவனுக்கும் பந்தமோக்ஷங்கள் இல்லை, பிரதிபிம்பம் உண்மைப் பொருளில்லாததால். அவனுடைய புத்தி நாசமடைவதால் அதற்கும் பந்த மோக்ஷங்களில்லை. ஆகையால் மோக்ஷஸாதனங்களைச் சொல்கிற சாஸ்திரம் பிரயோஜனமற்றதாக ஆகிவிடும் என்றுல் அதற்குக் கூறுகிறுர்—

यथा दर्पणाभाव आभासहानौ
मुखं विद्यते कल्पनाहीनमेकम् ।

---

1. முற்பிறவியில் செய்த கர்மாவினுல் இந்த சரீரம் ஏற்பட்டிருக்கிறது. முன் சரீரமும் அதற்கு முற்பிறவியிலுள்ள சரீரத்தால் செய்த கர்மாவால் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லிக் கொண்டே போனுல் அநவஸ்தா தோஷம் ஏற்படும். அநாதி என்பதை ஸித்தாந்திகளும் வேத பிரமாணமூலம் ஒப்புக் கொள்கிறுர்கள். இதை யுக்தியால் மட்டும் தீர்மானிக்கமுடியாது என்று அபிப்பிராயம்.

तथा धीवियोगे निराभासको यः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ४ ॥

யதா தர்பணாபாவ ஆபாஸ ஹானௌ
முகம் வித்யதே கல்பநாஹீனமேகம் ।
ததா தீவியோகே நிராபாஸகோ ய:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோऽஹமாத்மா ॥

यथा-எவ்வாறு दर्पणाभावे-கண்ணாடி இல்லாதபொழுது आभासहानौ-முக பிரதிபிம்பம் விலகினதும் कल्पनाहीनं-பொய் வஸ்துவற்றதாக मुखं एकं-முகமொன்றே विद्यते-இருக்கிறதோ, तथा-அவ்வாறே धीवियोगे-புத்தி விலகினபொழுது निराभासकः-பிரதிபிம்பமான ஜீவனற்றதாக यः-எவர் உள்ளாரோ, सः-அந்த नित्योपलब्धिस्वरूपः-அழியாத ஞான வடிவமான अहं-நான் आत्मा-ஆத்மா.

यथा दर्पणाभावे सति आभासस्य मुखप्रतिबिम्बस्य हानौ सत्यां मुखं परमार्थसत् कल्पनाहीनं मिथ्याज्ञानरहितम् एकमेव परं नापरं विद्यते, तथा तेनैव प्रकारेण धीवियोगे बुद्धेरभावे निराभासकः अप्रतिबिम्बः परमार्थतः सन् एक एव यः, सोऽहमात्मेति योजना । अयमभिप्रायः — आत्माज्ञानकृतोऽयं बुद्ध्यादिप्रपञ्चः । तत्र बुद्ध्यादौ प्रतिबिम्बरूपेण आत्मानमध्यस्य तद्गतसुखदुःखादिकम् आत्मन्यध्यस्यति । सोऽयमध्यासो बन्धः । आत्मज्ञानेन अज्ञाननिवृत्त्या बुद्ध्यादिप्रपञ्चनिवृत्तौ अध्यासनिवृत्तिर्मोक्षः । न पुनः पारमार्थिकौ बन्धमोक्षौ अस्य विद्येते इति सर्वं समञ्जसमिति ।

எப்படி கண்ணாடி இல்லாதபொழுது ஆபாஸம்-முகபிரதிபிம்பம் விலகினதும், கல்பனையற்ற-பொய்த்தோற்றமற்ற, உண்மையாக உள்ள முகமொன்றுமட்டுமே உள்ளதோ, வேறு ஒன்றுமில்லையோ, அப்படியே-அதேமுறையில், தீவியோகே-புத்தியில்லாதபொழுது, பிரதிபிம்பமற்று உண்மையாக எவர் ஒருவர் மட்டுமே உள்ளாரோ, அந்த நான் ஆத்மா என்று சேர்க்கவேண்டும்.

இது கருத்து — இந்த புத்தி முதலான பிரபஞ்சம் ஆத்மாவை அறியாததால் ஏற்பட்டிருக்கிறது. அங்கு புத்தி முதலியவற்றில் பிரதிபிம்ப உருவமாக ஆத்மாவை ஆரோபித்து (ஏற்றிவைத்து) அந்த புத்தி முதலியவற்றிலுள்ள ஸுகம், துக்கம் முதலியவற்றை ஆத்மாவில் ஆரோபிக்கிறான். இந்த அத்யாஸம்தான் பந்தம். ஆத்மாவை அறிவதன் மூலம் அக்ஞானம் விலகிவிடுவதால் புத்தி முதலான பிரபஞ்சமும் விலகி அத்யாஸம் நீங்குவதுதான் மோக்ஷமே தவிர உண்மையாக இந்த ஆத்மாவுக்கு பந்த மோக்ஷங்கள் கிடையாது என்பதால் எல்லாம் பொருத்தமானதே.

(முதலில் நான் சச்சிதாநந்த ரூபமான ஆத்மா என்று அறியவில்லை. இது ஆவரணம் பிறகு புத்தி முதலான பிரபஞ்சம் தோன்றுகிறது இது விக்ஷேபம் ஆவரணமும், விக்ஷேபமும் அக்ஞானத்தின் இருசக்திகள். புத்தியில் ஆத்மாவின் பிரதிபிம்பம் ஏற்படுகிறது. இதையே நான் என்று எண்ணுகிறான். இவன் சிதாபாஸன் புத்தியில் ஏற்படுகிற ஸுகதுக்கங்களையெல்லாம் பிரதிபிம்பமான தன்னிடத்தில் ஏற்படுவதாக எண்ணி அல்லலுறுகிறான். இதுதான் ஸம்ஸாரபந்தம். இதற்கு மூலகாரணம் அக்ஞானமானதால் புத்தி முதலான பிரபஞ்சமோ, புத்தியில் தோன்றும் பிரதிபிம்பமான சிதாபாஸனோ ஸுகதுக்கானுபவம் என்ற ஸம்ஸார பந்தமோ எல்லாம் பொய்த்தோற்றமே தவிர உண்மையாக இல்லை. எப்பொழுது நான் ஸச்சிதானந்த ரூபமான ஆத்மா என்று பிம்பத்தைத் தெரிந்துகொள்கிறானோ, அப்பொழுது அக்ஞானம் விலகி ஆவரணம், விக்ஷேபம் என்ற இரு சக்திகளும் விலகி புத்தி முதலான பிரபஞ்சம் தோன்றுவதில்லை. அப்பொழுது பிரதிபிம்பமான சிதாபாஸனுமில்லை, ஸுகதுக்கானுபவமுமில்லை. பந்தம் விலகி முக்தனாகிறான் அக்ஞானத்தால் ஏற்பட்ட பந்தம் ஞானத்தால் விலகுவதால் உண்மையில் ஆத்மாவுக்கு பந்தமுமில்லை மோக்ஷமுமில்லை) (4)

केचित् बुद्ध्यादीनामात्मत्वं मन्यन्ते ; तान्प्रत्याह —

(அ) சிலர் புத்தி முதலியவைகளையே ஆத்மா என்று எண்ணுகிறார்கள். அவர்களைக் குறித்துக் கூறுகிறார் —

मनश्चक्षुरादेर्वियुक्तः स्वयं यो
मनश्चक्षुरादेर्मनश्चक्षुरादिः ।

मनश्चक्षुरादेरगम्यस्वरूपः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ५ ॥

மநஸ் சக்ஷுராதேர் வியுக்த: ஸ்வயம் யோ
மநஸ் சக்ஷுராதேர் மநஸ் சக்ஷுராதி: ।
மநஸ் சக்ஷுராதே ரகம்ய ஸ்வரூப:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோ(அ)ஹமாத்மா ॥

यः–எவர் स्वयं தான் मनश्चक्षुरादेः–மனஸ், கண் முதலியவற்றிற்கும் मनश्चक्षुरादिः–மனஸ், கண் முதலியதாகவும், मनश्चक्षुरादेः–மனம, கண் முதலியதைக்காட்டிலும் वियुक्तः–வேருனவராகவும், मनश्चक्षुरादेः–மனஸ், கண் முதலியதற்கு अगम्यस्वरूपः–அறியமுடியாத ஸ்வரூபமுள்ளவராகவும் இருக்கிருரோ, सः–அந்த नित्योपलब्धिस्वरूपः–அழிவற்ற ஞான வடிவமான अहं–நான் आत्मा–ஆத்மா.

मनश्चक्षुरादेः मनआदेः चक्षुरादेश्च वियुक्तः पृथग्भूतः यः सोऽहमात्मेति संबन्धः । मनश्चक्षुराद्युपादानेन तदन्तर्गतत्वात् शरीरमपि उपात्तं द्रष्टव्यम् । एतेन शरीरादपि वियुक्त इति लक्ष्यते । तथा च गुरुः — 'बुद्धीन्द्रियशरीरेभ्यो भिन्न आत्मा विभुर्ध्रुवः । नानारूपः प्रतिक्षेत्रमात्मा वृत्तिषु भासते ॥' इति । कथं मनश्चक्षुरादिकस्य प्रकाशकस्य उपरि अयमात्मा प्रकाशकः ? मनआदेः चक्षुरादेः कथं वियुक्तः ? इत्यत आह — स्वयमिति । स्वयं य आत्मा मनश्चक्षुरादेः मनश्चक्षुरादिः मनश्चक्षुरादिकस्य प्रकाशकस्य मनश्चक्षुरादिः प्रकाशकः, प्रकाशकत्वगुणयोगात् ॥

மனம் முதலியதைக்காட்டிலும், கண் முதலியதைக் காட்டிலும் எவர் வேருனவரோ, அந்த நான் ஆத்மா என்று ஸம்பந்தம். மனம், கண் முதலானதை எடுத்துக்கொண்டதால், அதில் அடங்கியிருப்பதால் சரீரமும் எடுத்துக்கொள்ளப்பட்டதாக அறிந்துகொள்ளவேண்டும். இதனுல் ஆத்மா சரீரத்திலிருந்தும் வேறுபட்டவரென்று அறியப்படுகிறது. அவ்விதமே குரு சொல்கிருர். 'புத்தி, இந்திரியம், சரீரம் இவைகளைக் காட்டிலும் வேருனவரும், எங்குமிருப்பவரும், நாசமற்றவருமான

ஆத்மா ஒவ்வொரு சரீரத்திலும் மனோவிருத்திகளில் வெவ்வேறு ஸ்வரூபமுள்ளவராகத் தோன்றுகிறார்' என்று.

மற்றதை பிரகாசப்படுத்துகிற மனம், கண் முதலியவைகளுக்கு மேல் இந்த ஆத்மா எப்படி அவைகளை பிரகாசப்படுத்துகிறார்? மனம் முதலியதைக்காட்டிலும், கண் முதலியதைக்காட்டிலும் ஆத்மா எப்படி வேறுபட்டவர்? என்றால் அதற்குக் கூறுகிறார்- 'தான்' என்று. எந்த ஆத்மாதான் மனம், கண் முதலியவைகளுக்கும் மனம், கண் முதலியவையாக இருக்கிறாரோ! மனம் கண் முதலியவை மற்றதை பிரகாசப்படுத்துகிறது. ஆத்மா மனம், கண் முதலியவைகளை பிரகாசப்படுத்துகிறது (சிங்கத்திடம் உள்ள பராக்ரமம் என்ற குணம் பையனிடமிருப்பதைப் பார்த்து 'பையன் சிங்கம்' என்று சொல்வதைப்போல்) மனம், கண் முதலியவைகளிலுள்ள பிரகாசப்படுத்தும் தன்மை என்ற குணம் ஆத்மாவில் இருப்பதைக்கண்டு ஆத்மாவை மனஸ்சக்ஷுராதி என்று கௌணமாகச் சொல்கிறார்.

(மனதால் நினைக்கிறோம், கண்ணால் பார்க்கிறோம். இவ்வாறு ஒவ்வொரு இந்திரியமும் ஒவ்வொரு விஷயத்தை அறிகிறது. ஆனால் கண், மனம் முதலானவைகளையும், அவைகளால் ஏற்படும் ஞானத்தையும் அறிவது ஆத்ம சைதன்யம். கண்ணால் ரூபத்தை அறியலாமேதவிர ரூபஞானத்தைக்கண்ணால் அறியமுடியாது. இதுபோலவே மற்ற இந்திரியங்களின் ஞானங்களும் இவைகளை அறிவது ஆத்மசைதன்யம். மேலும் கண் முதலியவை ஜடமானதால் அவைகளுக்கு பிரகாசப்படுத்துகிற சக்தியே ஆத்மாவிலிருந்துதான் கிடைக்கிறது கண்ணுக்குப் பார்க்கிற சக்தியைக் கொடுப்பதால் ஆத்மாவைக் கண்ணுக்குக் கண் என்கிறார். இது போல் அந்தந்த இந்திரியங்களுக்கு அதனதன் சக்தியைக் கொடுப்பதாலும் கௌணமாக ஆத்மாவுக்கு அந்தந்த இந்திரியங்களின் பெயரைக் கூறுகிறார். இந்த விஷயத்தை கேனோபநிஷத்தில் காணலாம்.)

अयमर्थः — यथा बाह्यस्य घटादेः प्रकाशको मनश्चक्षुरादिः ततो व्यतिरिच्यते, तथा आन्तरस्यापि मनश्चक्षुरादेः प्रकाशकः आत्मा ततो व्यतिरिच्यत इति निश्चीयते । अत एव मनश्चक्षुरादीनाम् अनात्मत्वमिति सिद्धं ज्ञेयादन्यो ज्ञाता भवति । ननु आत्मनोऽपि ज्ञेयत्वात् अनात्मत्वं

प्रसज्यते इत्यत आह — मनश्चक्षुरादेरगम्यस्वरूपः प्रकाशस्वभावः । तथा च श्रुतिः — 'यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह इति ॥

இது கருத்து—எப்படி வெளியிலுள்ள குடம் முதலியதை பிரகாசப்படுத்துகிற மனம், கண் முதலியவை அந்த குடம் முதலியதைக்காட்டிலும் வேறுபடுகிறதோ, அப்படியே உள்ளே இருக்கிற மனம், கண் முதலியதை பிரகாசப்படுத்துகிற ஆத்மா அந்த மனம், கண் முதலியதைக்காட்டிலும் வேறுபடுகிறது என்று தீர்மானிக்கப்படுகிறது. மனம், கண் முதலியவை ஆத்மாவால் அறியப்படுவதாலேயே அவைகள் ஆத்மாவல்ல என்பது தீர்மானமாகிறது. அறிகிறவன் அறியப்படுகிறதைக் காட்டிலும் வேறானவன். ஆத்மாவும் அறியப்படுகிறபடியால் அதுவும் அநாத்மா என்று ஆகிவிடுமே என்றால் அதற்குச் சொல்கிறார்— மனம், கண் முதலியவைகளால் அறியமுடியாத ஸ்வரூபமுள்ளவர், பிரகாசஸ்வரூபர். அவ்விதமே சுருதி— 'வாக்குகள் மனதுடன்கூட எந்த ஆத்மாவை அடையாமல் (பிரகாசப்படுத்த முடியாமல்) திரும்பிவிடுகின்றனவோ' என்று.(5)

ननु यद्यात्मा मनश्चक्षुरादेरगम्यः, कथं तर्हि अस्य सिद्धिः ? घटपटादयो हि मनश्चक्षुराद्यधीनसिद्धयो दृष्टाः । ततः आत्मनोऽपि तदधीनसिद्धिर्युक्ता । यदा तस्य तदधीना सिद्धिर्न भवति, तदा अस्य सिद्धिरेव न स्यात् शशविषाणवत् इत्यत आह —

(அ) ஆத்மா, மனம் கண் முதலியவற்றால் அறியப்படாதவனானால், அவனை அறிய வேறு பிரமாணமில்லாததால் அவன் இருப்பது எப்படி ஸித்திக்கும் ? மனம், கண் முதலியவைகளைக்கொண்டு தான் குடம், வஸ்திரம் முதலியவை இருப்பதாகத் தீர்மானிப்பதைக் கண்டிருக்கிறோம். அதனால் ஆத்மாவுக்கும் அதன் மூலம்தான் பிரஸித்தி ஏற்படுவது பொருந்தும். எப்பொழுது அந்த ஆத்மாவுக்கு மனம், கண் முதலியவை மூலம் பிரஸித்தி இல்லையோ அப்பொழுது முயல் கொம்புபோல் ஆத்மாவுக்கு ஸித்தியே ஏற்படாது. (ஆத்மாவை அறிவிக்கிற பிரமாணமில்லாததால் ஆத்மா இல்லை என்றே ஆகிவிடும்) என்றால் அதற்குச் சொல்கிறார்—

य एको विभाति स्वतः शुद्धचेताः
प्रकाशस्वरूपोऽपि नानेव धीषु ।
शरावोदकस्थो यथा भानुरेकः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ६ ॥

ய ஏகோ விபாதி ஸ்வத: சுத்தசேதா:
ப்ரகாசஸ்வரூபோऽபி நாநேவ தீஷு ।
சராவோதகஸ்தோ யதா பாநுரேக:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥

यः-எவர் शुद्धचेताः நிர்மலமான மனமுள்ளவராகவும், प्रकाशस्वरूपः-பிரகாசஸ்வரூபராகவும் एकोऽपि ஒருவராகவுமிருந்தபோதிலும் शरावोदकस्थः- சருவங்களின் ஜலங்களிலுள்ள एकः-ஒருவனான भानुः यथा-ஸூரியன்போல धीषु-வெவ்வேறு புத்திகளில் नानेव-வெவ்வேறாக இருப்பவர் போல स्वतः-தானாகவே विभाति-நன்கு பிரகாசிக்கிறாரோ, सः-அந்த नित्योपलब्धिस्वरूपः-அழிவற்ற ஞானவடிவமான अहं-நான் आत्मा-ஆத்மா.

य इति स्वतःसिद्धतामाह । एकः अद्वितीयः विभाति विशेषेण प्रकाशते, स्वतः स्वयमेव न परतः, शुद्धं निर्मलं चेतो मनो यस्य सः शुद्धचेताः; शुद्धचित्तस्य हि आत्मा स्वयमेव स्फुरतीत्यर्थः । अत एव सत्त्वशुद्ध्यर्थं वेदेऽपि वेदानुवचनादयो विहिताः—'तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन' इति । घटपटादयश्च जडत्वात् प्रकाशान्तरापेक्षत्वाच्च न प्रकाशन्त इति युक्तम् । आत्मा तु प्रकाशस्वरूपत्वात् प्रकाशान्तरानपेक्षः प्रकाशते सवितृवत्—यथा सविता स्वप्रकाशः प्रकाशान्तरं नापेक्षते, अथ च प्रकाशते, तद्वदात्मापीति भावः । एवमुत्पन्नात्मज्ञानः अद्वयो जीवन्मुक्तः स्वयं प्रकाशरूपोऽपि परमार्थतः, नानाविधासु धीषु

उपाधिषु नानेव भाति यः, सोऽहमात्मेति संबन्धः। शरावोदकेषु उपाधिषु अवस्थितो भानुः आदित्यः प्रकाशस्वरूपोऽपि एक एव सन् नानेव भाति, तद्वदात्मापीति भावः ॥

யः (எவர்) என்பதால் ஆத்மா பிரமாணங்களை அபேக்ஷியாமல் தானே பிரஸித்தர் என்று கூறுகிறார். ஒருவர்-இரண்டாவது வஸ்துவற்றவர். நன்கு பிரகாசிக்கிறார் – தானாகவே, வேறொன்றாலல்ல. பரிசுத்தமான மனமுள்ளவர் நிர்மலமான மனமுள்ளவனுக்குத்தான் ஆத்மா தானாகவே விளங்குகிறது என்று பொருள். ஆகையால்தான் சித்த சுத்திக்காக வேதத்திலும் வேதானுவசனம் முதலான தர்மங்கள் விதிக்கப்பட்டுள்ளன. 'அந்த இந்த ஆத்மாவை தினமும் செய்யும் வேதாப்யாஸத்தாலும், யக்ஞத்தாலும், தானத்தாலும், ஆசையை விலக்கி கிடைத்ததில் திருப்தி அடைவது என்ற தவத்தாலும் பிராம்மணர்கள் அறிய விரும்புகிறார்கள்'. (நித்ய கர்மானுஷ்டானத்தால் சித்த சுத்தி பெற்ற பின்தான் பிரஹ்மத்தை அறிவதில் தீவ்ர விருப்பம் ஏற்பட்டு சிரவணாதி உபாயங்களால் ஞானமடைகிறார்கள்).

குடம், வஸ்திரம் முதலியவைகள் ஜடமாயிருப்பதாலும் வேறு பிரகாசத்தை எதிர்பார்ப்பதாலும் தானே பிரகாசிக்கிறதில்லை என்பது சரிதான். ஆத்மாவோவெனில் பிரகாசஸ்வரூபமானதால் வேறு பிரகாசத்தை எதிர்பாராமல் ஸூரியன்போல் தானே பிரகாசிக்கிறது. எப்படி தானே பிரகாசிக்கிற ஸூரியன் வேறு பிரகாசத்தை எதிர்பார்க்கிறதில்லையோ ஆனாலும் பிரகாசிக்கிறானோ, அதுபோல் ஆத்மாவும் என்று கருத்து. இவ்விதம் ஆத்மஞானானுபவம் அடைந்த ஜீவன்முக்தனாக, உண்மையில் தானே பிரகாசஸ்வரூபனாக இரண்டாவது வஸ்துவற்றவனாக, இருந்தாலும் வெவ்வேறு விதமான புத்திகளாகிற உபாதிகளில் வெவ்வேறு வஸ்துபோல் எவன் தோன்றுகிறானோ, அந்த நான் ஆத்மா என்று அன்வயம் சருவங்களிலுள்ள ஜலமாகிற உபாதிகளில் இருக்கிற ஸூரியன் பிரகாசஸ்வரூபனாய் ஒருவனாகவே இருக்கிறபோதிலும் பல ஸூரியர்கள்போல் தோன்றுகிறான். அதுபோல் ஆத்மாவும் என்று கருத்து. (ஸ்வயம்பிரகாசனான ஆத்மா உண்மையில் ஒருவனாக இருந்தாலும் பலவாக இருக்கும் உபாதிகளான புத்திகளில் பலவாகத் தோன்றுகிறான்).

ननु कथं जीवन्मुक्तः? देहवांस्तावत् जीवन्नित्युच्यते; तस्य जीवतोऽपि यदि देहाभावो मुक्तिरभिप्रेयते, नासावुपपद्यते, विरोधात्। न हि जीवतो देहाभावः संभवति। अथ सत्यपि देहे भोगविच्छेदो मुक्तिरिति, तदपि न चतुरश्रम्। सकलभोगकारणेन्द्रियसंपत्तौ भोगविच्छेदस्य असंभावितत्वात्। मिथ्याज्ञाननिबन्धनो हि भोगः; तस्य च सम्यग्ज्ञानेन निवृत्तत्वात् भोगविच्छेद इति चेत्, न, बाधितस्यापि मिथ्याज्ञानस्य द्विचन्द्रादिज्ञानवत् अनुवृत्त्यभ्युपगमात्। अन्यथा देहवानेव न स्यात्। अत एव विदुषां जनकादीनां राज्यादिकं श्रूयते। श्रुतिरपि देहवतो भोगविच्छेदं प्रतिषेधति – 'न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति' इति। तस्मादयुक्ता जीवन्मुक्तिरिति ॥

ஜீவன்முக்தன் என்பது எப்படி? சரீரத்துடன் கூடியவன் அல்லவா ஜீவித்துக்கொண்டிருப்பதாக சொல்லப்படுகிறான். முக்தி என்பது சரீரமற்ற நிலை என்று அபிப்பிராயப்பட்டால் அது ஜீவித்துக் கொண்டிருக்கிற அவனுக்குப் பொருந்தாது, ஒன்றுக்கொன்று விரோதமிருப்பதால். ஜீவித்திருப்பவனுக்கு தேஹமற்ற நிலை ஏற்பட முடியாதல்லவா! அல்லது சரீரமிருந்தபோதிலும் ஸுகதுக்கானுபவம் நீங்குவதுதான் முக்தியென்றால் அதுவும் சரியாகாது. போகத்திற்குக் காரணமான எல்லா இந்திரியங்களும் கூடியிருக்கும்போது போகம் நீங்குவது என்பது ஸம்பவிக்காது.

பொய்யறிவின் காரணமாக அல்லவா போகம் ஏற்படுகிறது! உண்மை அறிவினால் பொய்யறிவு நீங்கிவிட்டபடியால் போகமும் நீங்கி விடுகிறது என்றால், அல்ல, திமிரரோகமுள்ளவனுக்கு சந்திரன் ஒருவன்தான் என்ற உண்மை அறிவு இருந்தபோதிலும் கண்ணுக்கு இரண்டு சந்திரர்கள் தெரிவதுபோல் உண்மை அறிவினால் பொய்யறிவு பாதிக்கப்பட்டபோதிலும் தொடர்ந்து இருப்பதாக ஒப்புக்கொண்டிருக்கிறபடியால். மித்யாஞானம் இல்லாவிட்டால் சரீரமே இருக்காது அதனால்தான் ஞானிகளான ஜநகர் முதலானவர்கள் ராஜ்யபரிபாலனம் செய்ததாக கேள்விப்படுகிறோம் சுருதியும் சரீரமுள்ளவனுக்கு போகம் விலகுவதை மறுக்கிறது. 'சரீரத்துடன் கூடியிருப்பவனுக்கு ஸுக துக்கங்களின் நாசம் கிடையாது' என்று. ஆகையால் ஜீவன்முக்தி என்பது யுக்திக்குப் பொருந்தாது.

अत्रोच्यते - जीवतस्तावत् तत्त्वज्ञानमुत्पद्यते न तु मृतस्य; शमदमादेः श्रवणमननादेश्च ज्ञानहेतोः मृतस्यासंभवात्। अत एव हि विदुषां याज्ञवल्क्यादीनां संन्यासः श्रूयते। न च मृतस्य संन्यासः श्रूयते, संभवति वा। तस्मात् जीवतस्तत्त्वज्ञानमुत्पद्यत इति सिद्धम्; आत्मज्ञानादेव मुक्तिरिति सिद्धा जीवन्मुक्तिः, 'स यो ह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति' 'ब्रह्मविदाप्नोति परम्' इत्यादिश्रुतिभ्यः॥

இதற்கு பதில் சொல்லப்படுகிறது. ஜீவித்திருப்பவனுக்குத் தான் உண்மையறிவு உண்டாகிறதே தவிற இறந்தவனுக்கு உண்டாகிறதில்லை. ஞானத்தின் ஸாதனமான உட்புலனின் அடக்கம், வெளிப் புலன்களின் அடக்கம் முதலியவைகளும் சிரவணம், மனனம் முதலியவைகளும் இறந்தவனுக்கு ஸம்பவிக்காது அதனுல்தான் ஞானிகளான யாக்ஞவல்க்யர் முதலானவர்கள் ஸன்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்துக் கொண்டதாக கேள்விப்படுகிறோம். இறந்தவனுக்கு ஸந்யாஸம் ஏற்பட முடியாது. அப்படி ஏற்பட்டதாகக் கேள்விப் படவுமில்லை. ஆகையால் ஜீவித்திருப்பவனுக்குத்தான் தத்வஞானம் உண்டாகிறது என்பது தீர்மானம். ஆத்மஞானத்தால்தான் முக்தி ஏற்படுகிறது. ஆகையால் ஜீவன்முக்தி ஸித்தமாகிறது. 'எவன் ஒருவன் அந்த மிக உயர்ந்த பிரஹ்மத்தை அறிகிருனே அவன் பிரஹ்மமாகவே ஆகிருன்' 'பிரஹ்மத்தை அறிந்தவன் மேலான பிரஹ்மத்தையடைகிருன்' இது முதலான சுருதிகள் இதற்கு பிரமாணம்.

ननु ज्ञानस्य मोक्षफलकत्वे श्रुतिषु सहकार्यन्तरं प्रतीयते इति चेत्, न, ज्ञानमात्रस्य श्रवणात् — 'भिद्यते हृदयग्रन्थिः' इति; 'नान्यः पन्था विद्यतेऽयनाय' इति सहकार्यन्तरप्रतिषेधाच्च। ननु श्रुतिरेव मरण-सहकारिणो ज्ञानान्मोक्षं दर्शयति 'तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये अथ संपत्स्ये' इति; न, पूर्वोत्पन्नस्य ज्ञानस्य चिरप्रवृत्तत्वात्, मरणकाले तस्य संनिधापयितुमशक्तेः। तत्कालमेवोत्पन्नात् ज्ञानान्तरान्मुक्तिरिति चेत्, न, 'यदेव भगवान्वेद तदेव मे ब्रूहि' इति, 'आचार्यवान्पुरुषो वेद' इत्यादि-

